உரிமை பதிப்பகத்திற்கே
முதற் பதிப்பு : 1994
தயாரிப்பு : வா. மு. சே. திருவள்ளுவர்
**பெருங்கவிக்கோவின் மணிவிழா வெளியீடு**

**விலை உருபா : 34-00**

விற்பனை உரிமை :
தமிழ்மணி புத்தகப் பண்ணை
281-திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை,
சென்னை-600 005.

அச்சும் அமைப்பும் :
சேதுமதி அச்சகம்,
சென்னை-600 111.

தமிழ் வாழ்க

# 'ஆற்றல் மிகுந்த அருங்கவிஞனின்' சில அடிச்சுவடுகள்'

எல்லாம் வல்ல இறைவன் திருவருளாலும், என் தவநெறிக் குருநாதரின் தண்ணொளியாலும் என்றன் மணிவிழா வெளியீடாக ஒப்பற்ற ஆய்வு மேதை. வல்லிக்கண்ணனார் எழுதிய **ஆற்றல் மிகுந்த அருங்கவிஞர்** என்ற இந்த நூல் வெளி வருகிறது.

இன்று நான் ஈட்டியுள்ள என்றன் உயிர் மூச்சான கவிதைத் துறையின் சாதனைகளைப் பற்றி எண்ணிப் பார்க்கிறேன். ஏதோ ஒரு இனம் தெரியாத, ஆனால் இயற்கைக்கும்—இறைமைக்கும் தெரிந்த உணர்ச்சிகளின் கொந்தளிப்பும்—வேகமும், உயிர்த்துடிப்பும் என்னுள்ளே எப்போதும் ஆவேசப் பெருக்கெடுத்த புயல்களாகவும் பிரளயங்களாகவும் உருவெடுத்து என்னை ஆட்டிப் படைத்த ஆட்டங்களுக்கெல்லாம் ஈடு கொடுத்து முயன்று, முயன்று கண்ட வெற்றிப் பயணத்தின் தொடர்ச்சியே, 'ஆற்றல் மிகுந்த அருங்கவிஞர்' என்று முதுபெரும் எழுத்துத் தவஞானியார் வல்லிக்கண்ணன் அவர்களின் இந்நூல் பெற்ற பேறு எனக் கருதுகிறேன்.

என் இளமைக்கால வளர்ச்சிப் பரிணாமங்களில் மூன்று வகை மோதல்கள் சூழ்ந்திருந்தன. "ஒன்று இந்திய, சிந்தனை, இரண்டு திராவிட தமிழ் தேசியச் சிந்தனை

மூன்று இறை ஆண்மைச் சிந்தனை. இந்த மூன்று வகையான தாக்கங்களோடும், நான் உடன்பட்டும் முரண்பட்டும், உண்மை தேடல் முயற்சியில் என்னை நானே தெளிவுபடுத்திக் கொண்டு, எனக்கென ஒரு தனிப் பாதையைப் புதுப்பாதையை வகுத்துக் கொண்ட நெறியே இத்தகைய வெற்றி என்று கருதுகிறேன்.

காலங்களுக்குத் தக்கவாறு செயற்பாடுகளை மேற்கொள்வதற்கு இயற்கை மனிதர்களைத் தேடிக் கொண்டிருக்கிறது. எள் முனை அளவு அந்தக் கூறுகள் மாந்தரிடத்தில் இருந்தாலும் அவர்களைக் காலம் தனக்குச் சாதகமாக எடுத்துக் கொள்கிறது அத்தகைய காலம் தரும் நன்றோ தீதோ அதன் வழி அறிவைச் செலுத்தி, பொறி துவங்கச் செய்யும் நிலைபாடுகளுக்கு ஈடு கொடுக்கும் கட்டாயத்தின் தன்மையே இன்று எந்தவித வாய்ப்பும் வசதியுமற்ற, எழுத்தறிவில்லாத, உலகத்தில் மிகவும் பின் தங்கிய பாமரத்தனமான ஒரு பகுதியில் பிறந்த சேதுராமனின் பாராட்டும் வாழ்வாக அமைந்துள்ளது என்று கருதுகிறேன்.

திராவிட இயக்க, தமிழ் நலம் கருதிய சிந்தனைகள் என்றன் தமிழ்—தமிழர் உணர்வுகளுக்கு மெருகூட்டியது. இளந்தளிராக இருந்த போது "வெள்ளையனே வெளியேறு" என்று முழங்கிய எழுச்சி, இந்திய தேசியத்தை அறிய வைத்தது. தந்தை பெரியார், அறிஞர் அண்ணா கருத்து வழித் தாக்கத்தில் வயப்பட்டபோது, தந்தை பெரியாரைப்போல் திருநீறு அணியாத துறவி என் குருநாதராகக் கிடைத்ததால் மதம் கடந்த ஒரு இறையாண்மைப் பார்வை கிடைத்தது. இந்த மூன்று உணர்வுகளையும் ஒருங்கிணைக்கும் வாய்ப்பின் வழித்தடத்தால் உலகக்கவிதை உறவு—தமிழுறவு சமஉரிமை எண்ணங்கள் கைகொடுத்தது. இதனால் உலக தேசியப் பார்வை முகிழ்த்தது. இந்த வழி வழியான காலத்தின் சிந்தனைகளையே என்றன் கவிதைகளில் பதிவு செய்திருக்கிறேன்.

முன்னேறத் துடிக்கும் ஒரு மனிதனுக்கு முதன்மையான முதல் என்பது எண்ணங்கள் தான். எண்ணங்களை, மனத்துக்கண் மாசின்றி ஒழுங்கு படுத்தத் தெரிந்து உழைப்பவன்— கற்றனைத்து ஊறும் அறிவைப் பெருக்கிக கொள்பவன் காலத்தோடு கைகோர்த்து— தடைகளை மீறி உன்னத உந்துதலோடு ஓடினால் அந்த ஓட்டத்தின் ஈட்டமாக எண்ணிய எண்ணியாங்கு எய்தும் திண்மை வெல்கிறது. மேலும் வளர்கிறது என்பதே உண்மை.

யார் என்னைப் பாராட்டினாலும், தூற்றினாலும், அதைப் பற்றிக் கவலைப்படாமல், எனக்கு விதிக்கப்பட்ட கடமைகளைச் செய்வதில் கவனமாக உள்ளேன், கருவிலேயே திருவாக வந்தவன் கவிஞன் என்கிறார்கள் ஆனால் அந்தக்கருவை வளர்க்கக் காலம் தரும் படிப்பினைகளைப் புறக்கணிப்பவர்கள் கருவிலேயே திருவாக வந்தாலும் கவிஞன் என்ற முழுமை அடைய முடியாது. கருவில் திரு இல்லா விட்டாலும்கூட, இதயத்தின் எழுச்சிகள் கருக்கொண்டு காலத்தை வெல்ல வைக்கும். பிறவிக் கவிஞன் என்பது — இருக்கும் திறமையை இடைவிடாமல் வளர்த்துக் செய்வதிலேயே நிலைப்படுத்தப்படுகிறது.

பள்ளிப் பருவத்தில் இலக்கணம் அறியாமல் எழுதியவைகள்—பின்பு மிகச் சிறந்த முறை எழுதும் நல்ல கவிஞர்கள் பாராட்ட எழுதிய கவிதைகள். 'இவன் என்ன எழுதுகிறான்' என்று வெட்டியும், "நன்றாக எழுதுகிறாய்" என்று, தட்டிக்கொடுத்தும் வளர்ந்த வளர்ச்சிகள்—அனைத்தையும் கடந்து மீறி வந்த தனித்தன்மையால் "'இவனா பெருங்கவிக்கோ!'—என்னும் வியப்பாட்சியை எழுத்துத் தவஞானி வல்லிக்கண்ணனார் எழுதிய இந்தத் திறனாய்வு நூல் விளக்கமளிக்கிறது.

என்றன் முப்பத்தி மூன்றாம் வயதில் என் முதல் கவிதை நூலான 'நெஞ்சத் தோட்டத்'தை வெளியிட்டேன். அந்த நூல் முன்னுரையில் கவிதைத் துறையில்

வெற்றி பெறுவது வழுக்கல் மரம் ஏறுவதைப் போன்றது—சாண் ஏறினால் முழம் வழுக்கும் என்பது இத்துறைக்கு மிகப் பொருத்தம் என்று எழுதியுள்ளேன். ஆனால் இந்த வழுக்கல் மரம் ஏறுவதில் வெற்றி பெற்றிருக்கிறோம் என்ற மனநிறைவு தோழர் வல்லிக்கண்ணன் எழுதிய இந்த நூலைப் படித்த போது என்னுள் முகிழ்த்தது.

தமிழ்க் கவிதைத் துறை தொன்மை வாய்ந்தது. நம் அன்னைமொழிக கவிதைகளின் ஆழத்தையும் அகலத்தையும் எண்ணி நாம் மலைத்தால்—இந்தத் துறையில் புகவே எண்ணம் வராது. அத்தனை பழமையும்—புதுமையும் பதிந்துள்ள நம் தமிழ்க் கவிதைத்துறையில்—ஒரு கவிஞன் என்று பெயர் பெறுவதே கடினம். இந்த மலைப்பையெல்லாம் தாண்டிக்கடந்து காலத்தின் அடிச்சுவடிகள் பற்றிக் கவிதைக் கடமைகளைச் செய்துள்ளேன்.

மகாகவி பாரதியாருக்குப் பிறகு கவிஞர்களே இல்லை என்று எழுதியது ஒரு இதழ். இவாகளால், புரட்சிக் கவிஞர் பாரதிதாசனைக்கூட ஏற்றுக் கொள்ள மனம் வரவில்லை! மற்றும் சிலர் அவரவர் மனதிற்குத் தக்க ஒவ்வொருவரைப் பிடித்துக் கொண்டு, இவன்தான் கவிஞன் அவன்தான் கவியரசன் என்கின்றனர். பாரதிக்கு பின் ஆயிரம் ஆண்டுகள் இனிக் கவிஞன் தமிழகத்தில் பிறக்க மாட்டான் என்று சில ஆண்டு முன்பு ஒரு இதழ் எழுதியபோது,

> ‘ஆயிரம் ஆண்டினிக் கவியிலையா?—ஏன்? ஏன்?
> அடியேன் இருக்கின்றேன்—இந்தப்
> பாயிருள் ஞாலம் அழிந்தொழிந்தாலுமென்—ஓங்கும்
> பாக்கள் அழியாது தோழர்களே’

என்று என் தமிழ்ப்பணி இதழில் எழுதினேன்.

இன்றைய வளர்ந்து வரும் கவிஞர்களுச்கு நான் ஒன்றைக் கூறுவேன்— நமக்கு முன் வளர்ந்து உயர்ந்த வள்ளுவர், இளங்கோ, கம்பன் போன்ற பெரும்பெம்

கவிஞர்களைப் படித்து வியந்து அதிலிருந்து அறிந்து நம் கவிதைக் கொள்கையில் அஞ்சாமல் ஏற்றம் பெற வேண்டுமே அன்றி அச்சப்பட்டு ஒதுங்கி விடக்கூடாது

**'தம்மில்தம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து**
**மன்னுயிர்க்(கு) எல்லாம் இனிது'**

என்பது திருக்குறள். தன்னைவிடத்தன் மகன் அறிவுடைமையாளன் என்பது மன்னுயிர்க்கெல்லாம் இனிமையானது என்று திருவள்ளுவரே கூறுகிறபோது அவன் சந்ததிகளுக்கு மட்டும் பொருந்தாது போய் விடுமா?

எனவே நம் பழமையான இலக்கிய வழிவழி முன்னோர்களின் அடிச்சுவடுகள் பற்றி அறிவுடைமையான கவிஞர்கள் ஒரு மொழியில் தோன்றுவதுதான் அம்மொழிக்குப் பெருமையே அன்றி 'இனி ஆயிரம் ஆண்டிற்குக் கவிஞன் இல்லை'—என்று முடிவெடுப்பது அறிவுடைமை ஆகாது.

நான் பள்ளிப் பருவத்திலிருந்து எழுதிக் கொண்டிருந்தாலும், என் முதல் கவிதை தினமணி' நாளிதழின் பொங்கல் மலரில்தான் வெளி வந்தது. எனவே இப்பொங்கல் தைத்திங்களில் பிறந்த இரண்டாம் மகனுக்குக் 'கவிஅரசன்' எனப் பெயர் வைத்தேன்' அதன் பின் அவன் பெயரிலேயே 'கவிஅரசன் பதிப்பகம்' எனத் தொடங்கினேன். முகவை—ஏர்வாடியில் பணியாற்றிய போது 'நெஞ்சத்தோட்டம்' என்ற நூல் மட்டுமே வெளிவந்திருந்தது.

1967-ஆம் ஆண்டு, முகவையில் பணியாற்றிய தமிழாசிரியப் பணிக்கு ஓர் தன்மான நெருக்கடி ஏற்பட்ட போது சென்னை வந்தேன். சென்னையைத் தேர்ந்தெடுத்ததற்கு மற்றொரு காரணம் படத்துறைக்குப் பாட்டெழுத வேண்டும் என்பதாகும். பத்தாண்டுகள் உச்சமான முயற்சி—தோல்வி மேல் தோல்வி கண்டபின், என்றன்

நாற்பதாம் அகவையில் 'எண்ணச்சுடர்' என்ற அறுநூறு பக்கக் கவிதை நூலை வெளியிட்டேன். ஓரளவிற்கு நூலக இயக்கம் கை கொடுத்தது. தொடர்ந்து குறைந்த அளவு ஒவ்வொரு பிறந்த நாளிலும் ஒரு நூலாவது வெளியிட உறுதி பூண்டு. அம்முறையில் வெற்றி பெற்று- என்றன் ஐம்பதாம் அகவையில் ஐம்பது நூற்கள் கொண்ர்ந்தேன்.

கவிதை நூற்கள் விலை போவதில்லை என்ற கூற்றைப் பொய்ப்பித்துக் காட்டின என்றன் கவிதை நூற்கள்.

**'பாட்டினைப் போல் ஆச்சரியம்**
**பாரின்மிசை இல்லையடா!'**

என்ற மகாகவியின் வாக்கும் பொய்த்து விடவில்லை. இடர்பாடுகள்— நெருக்கடிகள்— போராட்ட வாழ்வு— இடையில் நல்ல வாய்ப்புகள். வாய்ப்பு என்ற மனிதனுக்கு முன்னால் முடி உண்டு. பினனால் வழுக்கை அவன் நம் முன் நிற்கும் அந்த நேரத்தில் அவன் முடியைப் பற்றிப் பிடித்து விடவேண்டும். அவன் திரும்பி விட்டால் வழுக்கைத் தலையைப் பற்ற முடியாதல்லவா?

கிடைத்த சிறுசிறு வாய்ப்புகளைப் பற்றிப் பிடித்தேன். இறைவன் கருணையும்—குருவின் பேரருளும் பூரணமாக இருந்ததாலும்'

**'என்றன் இனத்தை ஒன்று சேர்க்காமல்**
**இறுதி எனக்கு வாராது**
**எம்மொழி உலகாள வைக்காமல்**
**என்றன் உயிரோ போகாது'**

—என்ற கொள்கை நோக்கம் இருந்ததாலும் வெற்றி பெற முடிந்தது.

படத்துறைக்குப் பாட்டெழுதினால் பெயர் வரும் என்று பல இளைஞர்கள், வளர்ச்சி பெற்ற கவிஞர்கள் கூட, எண்ணி. இருப்பதையும் இழந்து போகிறார்கள். நானும் அப்படித்தான் முன்பு நினைத்தேன். ஆனால்,

கலைத்துறையில் அடியெடுத்து வைக்காமலேயே, காலம் என்னை உலகுக்கு அடையாளம் காட்டியுள்ளது.

'பெருங்கவிக்கோ'—என்ற பெயரைத் தக்க வைக்கத் துணை புரிந்துள்ளது. இதனை ஏன் கூறுகின்றேனென்றால், வளரும் கவிஞர்கள் படத்துறைக்கு எழுத வேண்டும் என்றே நினைத்து ஏங்காமல்—கடுமையான கவிதைப்பணி செய்தால்—கவிதை மகள் கைவிட மாட்டாள்என்பதற்கே. நான் ஒரு இறைப்பற்றாளன் என்னுடைய முயற்சிக்கு அப்பாற்பட்டு இறைவனின் கருணையே என்றன் வெற்றிக்கு முழுக்கரணியமாகும். எல்லாப் புகழும் பெருமையும் இறைவனுக்கே.

உலகமே வெள்ளத்தில் மூழ்கினால் கூட என்னுடைய நூற்கள் ஏதாவதொன்று மேலே மிதக்கும். அந்த அளவிற்குச் சுமந்து, சுமந்து உலக நாடுகளெல்லாம் என்னுடைய நூற்களை விதைத்திருக்கிறேன். பொருள் வந்தாலும். வராவிட்டாலும், என் நூற்களை நண்பர்களுக்கு வழங்குவதில் நான் சலிப்பதில்லை.

என்னுடைய மணிவிழா அகவையில் நான் இரு குறிக்கோள்களை என்னுள் சுமந்து கொண்டிருக்கிறேன். என் மொழியின் பெருமை உலக அரங்கில் தெரிய ஒரு தமிழ் எழுத்தாளன் நோபல் பரிசு பெற வேண்டும். ஒப்பரிய இப்பரிசுக்காகக் கவிதைத்தவம் செய்கிறேன். என் இனமக்களின் உன்னத நிலை உலகரங்கில் ஒளி பெற, 'உலகத்தமிழர்களை இணைக்கும் ஒரு இணைப்பு மையம், நிறுவனம் உருவாக்க வேண்டும். இந்த இரு குறிக்கோள்களும் வெற்றியடைய என்னுடைய எஞ்சிய வாழ்நாளை ஈகம் செய்ய எண்ணியுள்ளேன்.

நாம் இவ்வளவு பணிகள் செய்து நம் எழுத்துக்களை உணர்வாரில்லையே என்ற ஏக்கத்தை, முதுபெரும் எழுத்தாளர் வல்லிக்கண்ணனாரின் இந்த நூல் நிறைவு செய்கிறது. இந்தப் பணியை, தன் எழுபத்தைந்து அகவையிலும் தளராது எழுதி என்னை ஊக்குவித்த முது

பெரும் திறனாய்வு அறிஞர் வல்லிக்கண்ணன் அவர்களை மன—மொழியால் வணங்குகிறேன்.

நம் நாட்டு இதழ்கள் தக்கவர்கள் செய்யும் பணிகளைப் போதிய அளவு மதிக்காதது உண்மை, ஆனால் இதற்காக நாம் வருந்த வேண்டுவதில்லை. இயற்கையும் காலமும் யார் மறைத்தாலும் மறைக்காமல் தக்கவர்களை அடையாளம் காட்டியே தீரும். திருவள்ளுவர்—கம்பர் வள்ளலார் போன்றவர்களை இதழ்களா வளர்த்தன! காலம் தானே உலகுக்குக் காட்டியது!

எனவே, கவிஞர்கள் எதையும் எதிர்பாராது பணி செய்தால் கவிதை வாழ்வு தரும். அவ்வாழ்வும் வியப்பின் உச்சியாகும். எல்லாவற்றிற்கும் நாம் நம்மை ஒழுங்காக வைத்திருக்க வேண்டும்.

7-1-95 ஆம் நாள் தமிழுக்காகத் திருச்சி சிறையில் அடைப்பட்டு விடுதலை ஆகி, காலை ஐந்து மணிக்கெல்லாம் எழும்பூர் பேருந்து நிறுத்தத்தில், நல்லார் பத்மனாபன் அவர்களோடு நின்று கொண்டிருந்தேன். அதுபோது, ஒருஇளைஞன் (21 அகவை) ஓடி வந்து ''ஐயா நீங்கள்தான் பெருங்கவிக்கோவா' என்றார். ஆம் என்று பேசிக் கொண்டிருந்த போது நான் எழுதிய நூற்கள், என் தமிழ்ப்பணி பற்றி மிகவும் விரிவாகப் பேசினார். பல செய்திகள் அறிந்திருந்தார். இப்படிப் பலர் தக்கவர்களை அறிந்துள்ளனர். எனவே நம் இளைய பிள்ளைகளுக்கு அறிவு வளர்சசி உள்ளது.

உழைத்தால் உழைப்புக்கு மதிப்பு உண்டு என்னைச் சந்தித்துப் பாராட்டிய அண்ணா கண்ணன் பொங்கல் அன்று என் இல்லம் வந்து எனக்கு வாழ்த்தித் தந்த கவிதையையும், கவிமாமணி கவிதையையும் இத்துடன் வெளியிட்டிருக்கிறேன். ஒத்துழைத்த அனைவர்க்கும் இதய நன்றி,

அன்பன்,

**வா. மு. சேதுராமன்**

# முன்னுரை

பாரதிக்குப் பிறகு தமிழில் கவிதை இலக்கியம் வளர வில்லை என்று சிலர் சொல்கிறார்கள். இது சரியான நோக்கு இல்லை.

பாரதிக்குப் பின் கவிதை வளர்ச்சி பற்றிப் பேசுகிற வர்கள் கூட பாரதிதாசன். கண்ணதாசன், பட்டுக் கோட்டை கலியாண சுந்தரம் என்ற ஒரு சில பெயர்களை மட்டுமே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக் கிறார்கள். இதுவும் முழுமையான பார்வை ஆகாது

பாரதிக்குப் பின்னரும் நல்ல கவிதை எழுதுகிறவர்கள் பலர் தோன்றியுள்ளனர். இப்போதும் எழுதிக் கொண் டிருக்கிறார்கள். ஆயினும் அவர்களுடைய பெயர்கள் பரவலாகப் பேசப்படுவதில்லை. குறிப்பிட்டுச் சொல்லப் படுகிற சிலரது பெயரும் கவிதைகளும் கூட குறுகிய சிறு வட்டத்தினுள்ளேயே ஒடுங்கிப் போகிறது.

பாரதிக்குப் பிறகு, வியந்து பாராட்டப் படவேண்டிய அளவுக்குக் கவிதைகள் எழுதியுள்ள ச.து.சு. யோகியார், கம்பதாசன், தமிழ் ஒளி, கலைவாணன் போன்றவர்களின் திறமை தமிழ்நாட்டில் போதிய கவனிப்பைப் பெற்ற தில்லை.

அவர்கள் உயிருடன் இருந்தபோதும் அவர்களோ அவர்களின் படைப்புகளோ உரிய அங்கீகரிப்பை இந் நாட்டில் பெற முடிந்ததில்லை. அவர்களது மறைவுக்குப்

பிறகு அவர்களுடைய கவிதைகளும் மறதிப் பாழில் மங்கிப் போயின.

பாரதிதாசன் ஒரு காலகட்டத்தில் மிகுந்த கவனிப்பைப் பெற்றார். அதை அடுத்து 'பாரதிதாசன் பரம்பரை' என்று பலர் கவிதைகள் எழுதுவதில் ஆர்வம் கொண்டனர். அவர்களிடையிலும் சிலர்தான் கவனிப்புப் பெறமுடிந்தது. சுரதா, முடியரசன், வாணி தாசன், நாரா. நாச்சியப்பன் என்று. அதுவும் குறுகிய காலக் கவனிப்புதான்.

தமிழ்நாட்டில் ஏதாவது ஒரு அரசியல் கட்சியைச் சார்ந்து கவிதை எழுதுகிறவர்கள் பெயர்வெளிச்சம் பெற முடிகிறது. அல்லது, சினிமாவில் வெற்றி பெறுகிறவர்கள் புகழ் வெளிச்சம் அடைய முடிகிறது. அரசியல் கட்சியின் ஆதரவோ, சினிமாவின் துணையோ பெற்றிராத கவிஞர் கள் உரிய கவனிப்பைப் பெறத் தவறி விடுகிறார்கள்.

அரசியல் கட்சியைச் சார்ந்திருப்பினும், உயிர்ப்பும் உத்வேகமும் நிறைந்த கவிதைகள் படைத்துள்ள சில கவிஞர்கள் பரவலான கவனிப்பைப் பெறமுடிந்துள்ளது என்று சொல்வதற்கில்லை. தொ.மு.சி. ரகுநாதன், கே.சி.எஸ். அருணாசலம் போன்ற சிலரது திறமையும் ஆற்றல் நிறைந்த படைப்புகளும், அவை பெற்றிருக்க வேண்டிய அளவு கவனத்தை தமிழ் இலக்கிய ரசிகர் களிடையே பெற்றுவிடவில்லைதான். அவர்கள் சார்ந் துள்ள கட்சி ஆதரவாளர்கள் மத்தியில் ஓரளவு தெரிய வந்திருக்கலாம்.

இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம, திறமை யாளர்களின் திறமையும் படைப்பும் உரிய முறையில் எடுத்துச் சொல்லப் படுவதில்லை. இதுவே முழு முதல் காரணம் ஆகிவிடாது. திறமையாளர்களும் அவர்களது சாதனைகளும் போதுமான கவனிப்பைப் பெறமுடியாமல்

போவதற்கு வேறு பல காரணங்களும் உண்டு. என்றாலும், இது முக்கியமான காரணமாகும்.

ஆர்வமுள்ள வாசகர்கள் குறைவாக இருக்கிறார்கள். படிப்பவர்களிலும் கவிதைகளைத் தேடிப் படிக்கிறவர் எண்ணிக்கை குறைவுதான். கவிதைகளை— அதிலும் மரபுவழிப் பட்ட படைப்புகளை படிப்பவர்கள் மிகவும் குறைவு.

ஆனால் படிக்காமலே அல்லது ஒருவரின் ஒரு சில எழுத்துக்களைப்படித்து விட்டு,தடாலடியாகஅபிப்பிராயம் சொல்கிற இயல்பு—ஓங்கி அடித்து ஒதுக்கி விடுகிற போக்கு அதிகமாகவே வளர்ந்துள்ளது.

இந்த நிலை மாறவேண்டும். வாசகர்களின், ரசிகர்களின், மனப் பண்பு நன்னிலை அடைய வேண்டும். படித்துப் பார்த்து, கருத்து சொன்னாலாவது, 'பரவால்லே; போகிறது! இவர் ரசனை இப்படி... இது இவருடைய கருத்து' என்று கொள்ளலாம். ஆனால், பலரும் படிக்காமலே'அறுதியிட்டு உறுதி கூற'த் துணிவது சரியான போக்கு அல்ல.

ஒவ்வொரு படைப்பாளியின் மொத்த எழுத்துக்களையும் ஆய்வு செய்து, நல்லனவற்றை எடுத்துக் கூறும் முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டிருக்குமானால், இந்தப் போக்கு ஓரளவுக்குக் குறைக்கப்பட்டிருக்கும்.

ஆனால், தமிழ் நாட்டில் அத்தகைய விமர்சன முயற்சிகள் செய்யப்படவில்லை. இது பெரும் குறைபாடேயாகும்.

பெருங்கவிக்கோ என்று சிறப்புப் பெயர் பெற்றுள்ள வா.மு.சேதுராமன் அவர்களின் சாதனைகளும் இந் நாட்டில் சரிவரப் புரிந்து கொள்ளப்படவில்லை. இது வருத்தத்துக் குரியது.

கவிஞர் சேதுராமன் மரபுவழிக் கவிதையில், நல்ல கருத்துக்களை வலியுறுத்தும் தன்மையில், பாராட்டப்பட வேண்டிய அளவு சாதனைகள் புரிந்திருக்கிறார். அவருடைய கவிதை நூல்கள் பெரும்பாலானவற்றைப் படிக்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. அதனால் அவருடைய ஆற்றலையும், படைப்புகளின் தன்மையையும் நான் அறியமுடிந்தது. அவற்றை எடுத்துச் சொல்ல வேண்டியது அவசியம் என்று கருதினேன். அதன் விளைவே இந்த நூல்.

இது பூரணமான திறனாய்வு இல்லை. பெருங்கவிக்கோவின் படைப்புகளில் நான் ரசித்து மகிழ்ந்த நல்ல அம்சங்களை வாசகர்களுக்கு அறிமுகம் செய்ய முனைந்துள்ளேன். கவிஞரின் படைப்புகளைப் படித்து மகிழ இது ஒரு தூண்டுதலாக அமைந்தால் நல்லது.

**வல்லிக்கண்ணன்**

# வளர்தமிழ் அறிஞர்
# வா. மு. சே. வாழ்க!

*கவிமாமணி—ஆயை. மு. **காசாமைதீன்***

முகவை மண்ணில் முளைத்துத் தழைத்தவர்!
அகவை அறுபதை அடைந்த போதிலும்
அயர்வு என்பதை அறியா துழைப்பவர்!
'**பெருங்கவிக் கோ**'எனும் பேறினைப் பெற்றவர்!
அருந்தமிழ் நூல்கள் அறுபதைப் படைத்தவர்!
வள்ளுவன் இளங்கோ வழங்கிய தமிழை
உள்ளம் பதித்து உரைத்து மகிழ்பவர்!
பற்பல நாட்டிலும் பயணம் செய்து
நற்றமிழ்க் கொடியை நாட்டி வந்தவர்!
'**தமிழ்ப்பணி**' ஒன்றே தலைப்பணி என்று
இமைப்பிலும் கூட இயங்கி வருபவர்!
விருதுகள் பெற்றும் விரிபுகழ் உற்றும்
தருவினை மறவாக் குணநலம் கொண்டவர்!
'**சேது மதி**'யெனும் செயல்திறம் மிக்க
மாதினை மணந்து மனையறம் கண்டவர்!
அறிவுடை மக்கள் ஐவரைப் பெற்று
நெறிமுறை பிறழா நேர்மையில் வாழ்பவர்!
எங்கும் எதிலும் எழில்தமிழ் வேண்டி
சங்கொலி முழக்கிச் சரித்திரம் படைத்த
வழிநடைப் பயணம் வழங்கிய அரிமா!
மணிவிழாக் காணும் மாசறு தமிழர்—
**வா.மு. சே.**'எனும் வளர்தமிழ் அறிஞர்,
ஒளிர்தமிழ் போல உலகினில் வாழ்கவே!

# பாரெல்லாம் போற்றும் பெருங்கவிக்கோ! ஆண்பால் அவ்வை!

—அண்ணா கண்ணன்

பாட்டாலே பாரதிநீ! பளப ளக்கும்
பைந்தமிழால் அவன்தாசன்! படைத்த நூலால்
கேட்டாலே இனிக்கின்ற கிப்ரான்! என்றும்
கீழடையா தரத்தாலே ஷெல்லி! சென்ற
நாட்டாலே புகழ்நாட்டும் தாகூர்! கொண்ட
ஞானமதால் இறக்காத மில்டன்! நீதான்
பூட்டாலே அடங்காத புஷ்கின்! வீழும்
பூந்தமிழை வாழவைக்கும் சேது ராமன்!

கற்பனையால் காதலினால் கண்ண தாசன்!
கைத்திறத்தால் ஷேக்ஸ்பியர்நீ! கவிதை சொல்லும்
கற்பகமாய் நின்றதனால் வேர்ட்ஸ்வொர்த்! நாளும்
கழறுகின்ற தத்துவத்தால் சாக்ர டீஸ்நீ!
அற்புதமாய் நிற்கின்ற அரிஸ்டாட் டில்தான்!
அருந்தமிழின் கடலுக்குள் பாதை கண்ட
உற்சவமே வாஸ்கோட காமா! என்றும்
உண்மைகளின் சீருருவே சேது ராமா!

கவித்தேரில் மற்றுமொரு கம்பன்! நல்ல
கவிதைகளால் இன்னுமொரு இளங்கோ! வெண்பாப்
புவிவென்ற புகழேந்தி உன்றன் பாட்டன்!
போர்ப்பரணி கொட்டியதில் செயங்கொண் டான்நீ!
குவியாத தாமரைநீ! ஒட்டக் கூத்தன்!
கொலுவீற்ற தமிழால்நீ ஆண்பால் அவ்வை!
செவிமோதும் அமுதத்தால் சேது ராமன்
செம்மாந்த தமிழ்போல நீடு வாழி!

- அண்ணா கண்ணன்

# 1. ஆற்றல் மிகுந்த அருங்கவிஞர்

தமிழ்மொழிக்குப்புதுமலர்ச்சியும் புதிய வேகமும் புதிய சிந்தனைகளும் சேர்த்த மகாகவி பாரதியார், 'நமக்குத் தொழில் கவிதை, நாட்டிற்கு உழைத்தல், இமைப் பொழுதும் சோராதிருந்தல்' என்று அறிவித்தார். நாட்டு மக்கள் நலமுற்று வாழவும், நானிலத்தோர் மேனிலை எய்தவும், தமது பாட்டுத் திறத்தை பயன் படுத்தினார் பாரதியார்.

மகாகவி பாரதியார் வழியில் அடி எடுத்து வைத்து முன்னேறி மேலே மேலே சென்று கொண்டிருப்பவர் பெருங்கவிக்கோ வா. மு. சேதுராமன்.

'தமிழருக்குப் புதிய வாழ்வும், புதிய எழுச்சியும்' புதிய சிந்தனையும், உள்ளத்தெளிவும் ஏற்பட வேண்டும். என்ற இலட்சியத்தோடு கவிதை படைக்கும் கவிஞர் சேதுராமன். 'கண்ணெனும் தமிழே வாழ்க்கை என்பதை ஒவ்வொரு தமிழனும் உணரவும், தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்யவும், இந்த அடிப் படையில் பாரதத்தையும் உலகையும் ஒன்றெனக் கருதவும்' தனது எழுத்தாற்றலைப் பயன்படுத்துகிறார்.

'காலமெல்லாம் விழித்திருந்தே கடமையாற்றும் கவிஞன் நான்' என்று குறிப்பிடும் கவிஞர்.

'நாளைச் சாவேன் என்றே யானும்
நாளும் கடமை செய்வேன் எந்த
வேளைப் பொழுதும் வேலை செய்தே
வினைசெய் முகிலாய்ப் பெய்வேன்'

என்ற உள்ளுணர்வோடு ஓயாது உழைத்து, தமிழுக்கும் தமிழருக்கும் தமிழ்நாட்டுக்கும் தேவையான, அவசியமான, பணிகளை செய்து வருகிறார்.

'சிதறிக் கிடக்கும் என்றன் இனத்தைச்
சேர்த்து வைக்கப் புறப்பட்டேன்—அஞ்சிப்
பதறிச் சாகும் தமிழினத்தின் வெற்றிப்
பாதை அமைக்கப் புறப்பட்டேன்'

என்றும், 'தீய தன்னலத்தை வெறுத்துத் தள்ளி தமிழெடுத்துப் புறப்பட்டேன்', 'கயமை சாடும் கருத்தும் ஏந்திப் புறப்பட்டேன்' என்றும் அவர் அறிவிக்கிறார்.

கவிதையின் உயர் சக்தியை நன்கு உணர்ந்தவர் பெருங்கவிக்கோ. 'கவிதையைக் கையாளும் கவிஞன் உண்மை. ஒழுக்கம், உயர் தன்மை உடையவனாக இருந்தால் மாபெரும் உண்மையை உலகுக்கு உணர்த்த இயலும் இந்த உண்மை வழி வென்ற மகாகவி பாரதி, மற்றும் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் வழியில் எண்ண ஓட்டத்தை எப்படித் தரவேண்டும் என்ற உணர்வுடன்' அவர் எழுதிச் செல்கிறார். திருவள்ளுவரின் குறள்நெறியும் அவருக்குத் தூண்டுதலாக அமைந்துள்ளது.

'தனி ஒருவனுக்கு உணவிலை எனின் ஜகத்தினை அழித்திடுவோம்' என மனிதநேயத்தோடு முழக்கமிட்டார் மகாகவி பாரதியார்.

'வறுமையை ஒழிப்போம், இல்லை
வையத்தை ஒழிப்போம், ஈனச்
சிறுமையை ஒழிப்போம், இல்லை
செகத்தினை அழிப்போம் மோட்ச
மறுமையை இம்மை காண்போம்!
வரலாற்றை மாற்றி ஓங்கும்
பெரும் பேற்றை இந்தியாவின்
பெற்றிமை காக்க வைப்போம்!'

சமுதாயத்தில் நிகழ்ந்து வரும் மாற்றங்களையும், மக்களிடம் காணப்படுகிற குறைபாடுகளையும் சேது ராமனின் கவிதைகள் எடுத்துக் கூறுகின்றன. உயர்ந்த கருத்துக்களைச் சொல்லும கவிக்குரல் உணர்ச்சியூட்டும் போர் முரசாகவும் நாவலிப்பதை அவரது நூல்கள் காட்டுகின்றன, எதிர் நீச்சலிட்டுப் போராடி வரும் ஒரு எழுச்சிக் கவியின் எண்ணக் குமுறல்கள் அவருடைய கவிதைத் தொகுப்புகளில் அடங்கியுள்ளன. அதே வேளை யில் உணர்வும் உற்சாகமும் ஊட்டும் நம்பிக்கையின் நாதமும் அவற்றினூடே ஒலிப்பதைக் கேட்க முடிகிறது.

'இருட்டறையில் உள்ளதடா உலகம் என்றான்
எம்புரட்சிப் பாவேந்தன்; தமிழர் வையம்
இருட்டறையில் உள்ளநிலை நீக்குதற்கே
இதயத்தின் ஒளிவிளக்கை ஏற்றி வைப்போம்;
கருக்கிருளைப் புறங்காண்போம், பன்னாட்டுள்ளும்
காண் தமிழர் நிலைஉயர சிந்தனையால்
அரும்பணிகள் செய்வதற்கே அழைத்தோம்,
எத்திக்கும் தமிழர்நெறி பரப்புதற்கே
எழுந்திடுக! உயர்ந்தெழுக! சுடர்க! வெல்க!'

தமிழ் நாடும் தமிழ்மொழியும் தமிழரும் உலகத்தில்

தங்களுக்குரிய உயர்நிலையைப் பெறவில்லையே— பெற முடியவில்லையே— என்று குமைந்து குமுறிக் கொதிப்புறும் பெருங்கவிக்கோவின் சொற்களில் உணர்ச்சியும் வேகமும் பொங்கிப் பாய்வதை அவருடைய கவிதைகளில் பல இடங்களில் காண முடிகிறது.

மக்களை உயரவிடாமல் தடுத்து நிற்கிற, கெடுத்து விடுகிற, சிறுமைகள் பலவற்றையும் அவர் ஆவேசமாகச் சாடுகிற போது அவருடைய கவிதைகள் தனி உயிர்ப்பும் உணர்வும் பெற்றுக் கனல்கின்றன.

'கரவுடையார் நெஞ்ச மென்றன்
கவிதையினால் இளக வேண்டும்
இரந்துண்ணும் தீமை உலகில்
இல்லாமல் ஆக வேண்டும்

வறுமை யெலாம் நீங்க வேண்டும்
வையகமே பகிர்ந் துண்ணும்
தறுகண்மை வாழ வேண்டும்
தலையான பண்பு வேண்டும்

பட்டினிகள் ஒழிய வேண்டும்
பகிர்ந்துண்டே வாழ வேண்டும்
கெட்டவர்கள் திருந்த வேண்டும்
கேவலங்கள் மறைய வேண்டும்'

என்று உளமாறக் ஆசைப்படும் பெருங்கவிக்கோவின் கவிதைகள் அவருடைய பரந்த மனத்தை, விசால நோக்கை, மனித நேயத்தை, உலகம் தழுவிய உயர் பார்வையை உன்னதக் கொள்கைகளை புலப்படுத்துகின்றன.

அனைத்துக்கும் ஊடாகக் கவிஞரின் தமிழ் அன்பு— அன்னைத்தமிழ் மீது அவர் கொண்டுள்ள பக்தி—மிளிர்வதைக் காணலாம்.

# 2. தமிழ் முழக்கம்

'என்றன் இனத்தை ஒன்று சேர்க்காமல்
இறுதி எனக்கு வாராது;
என்மொழி உலகாள வைக்காமல்
என்றன் உயிரோ போகாது'

என்ற வேகமும் தாகமும் கொண்டிருப்பவர் பெருங் கவிக்கோ சேதுராமன்.

தமிழ் மொழியிடம் அளவிலா அன்பும் பக்தியும் ஈடுபாடும் கொண்டுள்ள கவிஞர், தமிழை அன்னையாக உள்ளத்தில் நிலைநிறுத்திப் போற்றி வணங்குகிறார். தனக்கு ஆற்றலும் துணிவும் செயலூக்கமும் தந்து தன்னை வளர்க்கும் தாய் தமிழ்தான் என்று பாடித் துதிப்பதில் அவருக்கு அலுப்பு ஏற்படுவதேயில்லை.

அப்படித் தமிழன்னை வாழ்த்துப் பாடுவதிலும் அவர் புதுமைகள் நயங்கள் பல சேர்த்துத் துதிப்பது படிப்பதற்கு இனிய விருந்தாக விளங்குகிறது.

'அன்னையே தமிழே இன்ப
அமிழ்தத்தின் மறுபிறப்பே!
கன்னலே என்பேன் ஆயின்
கைக்குமே அதுவும் ஓர்நாள்

பன்னலம் சூழ்ந்த அம்மா
பாட்டிலே நிலைத்து நிற்கும்
உன்னையே வணங்குகின்றேன்
உளத்தினால் போற்றுகின்றேன்;

தமிழ் அன்னை தான் தனக்கு வீரமும் செயல் துணிவும் தந்து அருள் பாலிப்பதாக அவர் நம்பிக்கையோடு போற்றி வணங்குகிறார்,

'யான் வணங்கும் தெய்வ நன்மகளே!
ஒப்பில்லா
நற்றவத் தவமகளே! நம்பிக்கை நெஞ்சத்தால்
செற்றார் மருளுமுன் செயல் துணிவைத்
தந்தவளே!'

என்றும்

'வியப்பிற்கோர் எல்லையென நின்றாய் எங்கள்
வேல்வரிசை வாள் வரிசைக் கவிதை தந்தாய்
செயற்கரிய செய்கின்ற திறங்கள் ஈந்தாய்
செப்பரிய மேல்நிலையில் நிற்க வைத்தாய்
கயவர்கள் செய்செயலைக் காலின் தூசாய்க்
கருதுகின்ற ஆண்மையெனும் வீரம் காத்தாய்
புயவலிமை தந்தவளே! அறிவின் மாட்சிப்
புடம் போட்ட தமிழ் மகளே வணக்கம் அம்மா!'

இவ்வாறு வணக்கம் கூறியே அவர் ஒவ்வொரு கவி அரங்கத்திலும் பாட ஆரம்பிக்கிறார். ஆனால், ஒவ்வொரு முறையும் தனித்தனி விதத்தில் போற்றிக் கவிதை இயற்றிக் கூறும் அவரது கவிதையாற்றல் வியத்தலுக்கு உரியது. ஒருமுறை பாடிய வணக்கப் பாடலை மறுமுறை அவர் பாடுவதில்லை. அவருடைய தமிழ் பக்தி நவநவமான துதிப்பாடல்களை ஆக்கும் திறனை அவருக்கு

அளிக்கிறது. அதில் அவருடைய தன்னம்பிக்கையும் ஒலி செய்வதைக் கேட்க முடிகிறது.

'முன்னைத் தமிழே! முதன் முதலில் உலகோர்நா
தன்னை அசைத்த தண்டமிழே! இன்றுவரை
உன்னைப் புறம்போக்க உட்பகை மோதிடினும்
அன்னைவேலெறிந்தே அடர்வெற்றி கண்டவளே!
அம்மா என்னுள்ள ஆலயத்தின் உயிர்ச்சிலையே!
செம்மை மகனுன்றன் சேவடியை வணங்குகிறேன்!
கூலிக்குப் பாடிக் குளிர்காய்ந்து போகாமல்
தாலிக்குப் பொன்போலத் தமிழ்க் கவிதை பாடி
வையம்
பாலிக்கும் 'பெருங்கவிக்கோ' பாடுகிறேன்
பாடுகிறேன்!

இதை ஒரு எடுத்துக்காட்டாகக் குறிப்பிடலாம்.

மூச்சும் தமிழ், பேச்சும் தமிழ், வாழ்வதும் தமிழுக்காக என்று கருதிச் செயல் புரியும் கவிஞர் தனது இதய ஒலியை அழகாகப் பதிவு செய்துள்ளார் இப்படி—

இந்தப் பிறவி தமிழ்க்காக எடுத்துளேன்
'ஈங்கெவர் மாற்றவல்லார்—வரும்
எந்தப் பிறவி எடுப்பினும் என்பணி
இனிய தமிழ்ப் பணியே!—இறை
தந்த செல்வம்தனில் சாகாத செல்வமாம்
தண்டமிழ்ச் செல்வமொன்றே—உயர்
சிந்தை உடல்பொருள் ஆவியெல்லாம் தமிழ்த்
தெய்வத் திருவடிக்கே!'

தாய்மொழியிடம் அளவிலாப் பற்றுதல் கொண்டிருப்பதனால், அன்னைத் தமிழ்மொழி இன்றுள்ள நிலை

கண்டு கவிஞர் மனம் புழுங்குவது தவிர்க்க இயலாததாகும். அவருடைய மனவேதனை கவிதைகளில் பொதிந்து கிடக்கிறது.

'நேற்றுத் தோன்றிய மொழிகள் எல்லாம்
நிலைத்து நிற்கையிலே—என்றோ
தோன்றிச் செழித்த மொழியென் தமிழ்த்தாய்
தோற்றுப் போவதுவோ?

ஊமை கண்ட கனவாய்த் தமிழர்
உரிமை போவதுவோ?—எங்கள்
பானம் எழுத்து பதறாய்க் காற்றில்
பறந்து சாவதுவோ?

கூவும் குரல்வளைக் கொள்கை முழக்கக்
குறிக்கோள் அஞ்சுவதோ?—இனிய
நாவுக் கன்னை நற்றமிழ் அரசி
நானிலம் துஞ்சுவதோ?'

நமது மொழி உயர்வென்று சொல்லி, நாள் கழித்தோம்; குறை களைந்தோமில்லை என்று குறிப்பிட்டார் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்.

அதே குறையை பெருங்கவிக்கோவும் சுட்டிக்காட்டத் தவறவில்லை.

'தமிழ் தொன்மை மொழியென்றோம்
தமிழர் முன் இனம் என்றோம்
அமிழ்தம் எம்மொழி என்றோம்
அழகாகப் பாட்டிசைத்தோம்!
புவனமிதில் நம் தமிழ்தாய்
பவனிவர என்செய்தோம்?'

என்று கேட்கிறார். மேலும் அவர் சுட்டுகிறார் :

'இன்றுவரைப் பழங்கதைகள்
இனிப்பாகப் பேசலன்றி
ஒன்றுபடச் செய்ததென்ன?
உலகுக் குரைத்ததென்ன?

நின்றுநீர் சிந்தித்தால்
நெடுமூச்சு விடுவதன்றி
நன்றுநாம் நமைக்காட்ட
நானிலத்தில் செய்ததென்ன?
இன்றமிழ் நாட்டோரே
எண்ணுக எண்ணுகநீர்!'

நாட்டின் சீர்கெட்ட நிலையைக் கண்ட மகாகவி பாரதியார், 'நெஞ்சு பொறுக்குதிலையே, இந்த நிலை கெட்ட மானிடரை நினைத்து விட்டால்' என்று வேதனைக் கண்ணீர் உகுத்தார்.

நாட்டு மக்களின் கேடுகெட்ட நிலை கண்ட பெருங் கவிக்கோ உளம் கொதித்துச் சீறுகிறார் :

'நப்பாசையால் தமிழன் நலிந்து கெட்டான்!
நம்மொழியை நம்மினத்தை அழிக்க விட்டான்!
தப்பாக நடப்போரை மற்றார் தம்மைத்
தாள்பற்றி நடக்கின்றான்! தியாகம் செய்த
ஒப்பில்லாத் தமிழர்களை ஏசுகின்றான்!
உயிரில்லாப் படைத்தமிழா! போடா போ போ!

நம்மவர்க்கும் உணர்வில்லை! உரிமை கேட்கும்
நல்லுறுதி நெஞ்சில்லை அழும் பிள்ளைக்கு

சும்மாஓர் கிலுகிலுப்பை ஆட்டுதல் போல்
சொரணையற்று ஆட்டங்கள் காட்டுகின்றார்!
எம்மா நிலத்தானும் இங்கே வந்தே
ஏமாற்றி வாழ்கின்றார்!'

வேகமாகவே சாடுகிறார் கவிஞர்—

கிஞ்சிற்றும் சொரணையில்லை
கேடுகெட்டாய் போடாபோ!

போற்றிப் பாப் பாடியே நீ
பூமியிலே நலிந்ததன்றி
ஆற்றலைக் காட்டிட நீ
அவனிசெய்த தென்னேடா!

தூ! தூ! தூ! வெட்கமில்லை
தொல்தமிழ்ப் பரம்பரையில்
ஊதூது சங்கெனவே
உலவிய நீதமிழ்மகனா?

பாரம் சுமந்தேநீ
பரிதவித்தாய் இன்றுவரை
சோரம் போயேநீ
தொலைந்தாயே அடடாஓ!

மாடுபோல் உழைத்தாயன்றி
மதிவன்மை காட்டினையா?
கேடுகெட்ட பிறவியாநீ
கேள்வியிலை? ஞானமில்லை!

உலகமனிதன் முதலில்
உதித்ததுவும் உன்குடியா?
நிலம் உன்னைப் புரிந்துகொள்ள
நிமிர்ந்துநிற்க மாட்டாயோ?'

தமிழ் மொழியின் சிதைவுக்கும் தமிழ் இனத்தின் சீர்கேட்டுக்குமான காரணங்களை சிந்தித்த பெருங் கவிக்கோ அவை பற்றிப் பல இடங்களிலும் தனது எண்ணங்களைக் கவிதையாக்கியிருக்கிறார்.

'இடைப்பட்ட தமிழர்நிலை எண்ணிப் பார்த்தால்
இடிபட்டார் பலசமயம் பற்றிக்கொண்டே
உடைபட்ட கலத்தைப் போல் சிதறலானார்
உதவாத கொள்கைக்குச் சண்டை செய்வார்!
கிடையாத நம் சொத்துத் தமிழ் ஒன்றென்ற
கிழமையினை மறந்திட்டார்! தமிழர் எல்லாம்
தடையின்றி ஒன்றுபட்டு வாழ எண்ணும்
தகைமைக்கு வெடிவைத்தார் அன்றோ? துன்பம்!

இன்றென்ன செய்கின்றோம்? எண்ணிப் பார்த்தால்
எல்லாமே முன்போல்தான் இருக்கக்கண்டோம்!
நன்றாற்றும் வழியின்றி அந்நாளைப் போல்
நமக்குள்ளே பலபேதம் வைத்துக்கொண்டு
குன்றாநம் சக்தியினைக் குன்ற வைக்கக்
கொள்கையெனும் பெயராலே கட்சி சேர்த்துக்
கொன்றன்ன இன்னாத செயல்கள் நம்முள்
குடியேற்றி நம்வீட்டுள் வெடிவைக்கின்றோம்!

மேலும் சூடாகவே பாக்கள் புனைந்திருக்கிறார்

பெருங்கவிக்கோ. இந்நிலைமை மாற என்ன என்ன செய்யவேண்டும் என்று யோசனைகள் கூறுகிறார். இளைஞர்களே, விழிப்புற்று; வீறு கொண்டு செயல் புரியுங்கள் என்று ஊக்கம் அளிக்கிறார். 'தமிழ் முழக்கம்' என்ற அவருடைய கவிதைத் தொகுப்பு இத்தகைய பாடல்களைக் கொண்டிருக்கிறது.

'வஞ்சருக்கும் பொய்யருக்கும் பணிந்து நாமும்
வாழ்கின்றோம்! அரைவயிற்றுக் கஞ்சிக்காக
வஞ்சகத்தை வால்பிடித்துச் செல்கின்றோம் வீண்
வாயடியும் கையடியும் கொண்ட பேரை
மஞ்சத்தில் ஏற்றிவைத்து மலரும் சூட்டி
மரியாதை செய்கின்றோம்! அவரிடம் போய்
கொஞ்சியும் குலவியுமே வாழ்கின்றோம் நாம்
கொடுமைக்கும் மடமைக்கும் தாழ்கின்றோம்
நாம்!

பஞ்சமா பாவியர்கள் இவர்கள் தம்மின்
பண்புக்குத் தீவைப்போம்! வஞ்சகத்தை
அஞ்சாமல் எதிர்த்திடுவோம்! தமிழ்த்தாய் வாழ
அரும்புமீசை முறுக்கிடுவோம்! கொடுமை
என்றால்
எஞ்சாமல் எரியிடுவோம்! தமிழே ஆளும்
எழில்நாட்டை ஆக்கிடுவோம்!
வேற்றுமைதான்
கிஞ்சிற்றும் இல்லாமல் செய்ய இன்றே
கிளர்ந்தெழுங்கள் இளைஞர்களே அஞ்ச
வேண்டாம்.

என்ன நாம் செய்துள்ளோம்; முறையாக இவ்வுலகு நம்மையும் நம் மொழியையும் அறிவதற்காக நாம் என்ன செய்தோம் என்று சிந்திக்கச் சொல்கிறார் கவிஞர்.

'முப்பது நாட்டின்மேல் முன்சென்று நம்தமிழர்
செப்பரும் வாழ்முறை சேர்ந்துள்ளார்-இப்படியாய்ச்
சேர்ந்தாரைச் சேர்த்துத் திசைத்தமிழர் ஒன்றாக்கி
தேர்ந்த ஒற்றுமை செய்தோமா?'

என்ற கேள்வியை முன் வைத்து அவரே பதிலும் உரைக்கின்றார்.

அங்கங்கே சென்றே அவரவர் பாடாக்கி
தங்கள் சுயநலமே தான்முனைந்தார்—எங்கணுமே
வையமெலாம் வாழ்ந்தும் வகைமோசந் தன்னலத்தால்
நையச்செய்தாரே நலம்.'

ஆகவே, உலகெங்கும் உள்ள தமிழர்களை ஒருங்கிணைப்பது முக்கியக் கடமையாகும் என்று உணர்ந்த கவிஞர், பெரிதும் முயன்று, 1977-ம் ஆண்டில் 'பன்னாட்டுத் தமிழுறவு மன்றம்' அமைத்தார். உலகின் பல நாடுகளிலும் இம்மன்றத்தின் கிளைகள் அமைத்து நன்கு செயல் படச் செய்தார். கவிஞரின் உலகளாவிய தமிழ்ப் பணி இதுவாகும்.

'பன்னாட்டுத் தேர்தமிழர் பாங்குறவை நாம் வளர்க்க
இந்நாளில் மன்றம் எடுத்தேனே—தன்னலம்
கிஞ்சிற்றும் இல்லை கிழமை தவறவில்லை
வஞ்சக மில்லை மனம்'

என்று இப்பணி பற்றி அவர் குறிப்பிட்டிருக்கின்றார்.

'உலகத் தமிழர் உணர்வுகொள்!' என்று முழக்கம் செய்யும் கவிஞர், இழநத புகழைத் தமிழினம் மீட்டு வளமான, கீர்த்தி மிக்க, வருங்காலத்துக்கு வழி அமைக்க

வேண்டும் என்று ஊக்குவித்து உற்சாகப் படுத்துகிறார். அதற்குத் தேவையான ஆலோசனைகளையும் அவர் வழங்கியுள்ளார்.

'தேயாத ஒருவான நிலவே அந்நாள்
 செந்தமிழர் வாழ்வென்றால், வருங்காலத்தில்
ஓயாத புகழ்க்கதிரோன் வரவை நோக்கி
 உழைப்போம் நாம் உறுதியுடன் வெற்றி
 காண்போம்

பேயாத விண்ணும் ஓர் நாளில் பெய்யும்
 பேரிருளும் பகல் வந்தால் பிணங்கி ஓடும்!
நாயாக நாமின்று தாழ்ந்த லைந்தால்
 நமக்கும் ஓர் எதிர்காலம் உண்டோ?
 சொல்வீர்!"

எதிர்கால வளத்துக்காகச் செய்யப்பட வேண்டிய ஆக்கப்பணிகளை அறிவுறுத்துகிறார் கவிஞர்.

பல்கலை நற்கழகத்தில் தமிழ்முழக்கம்
 பாய்ச்சும் நாள் அன்றோ நம் தமிழர்
 பொன்னாள்!

எல்லா நல் லியல்களையும் தமிழ்ச் சான்றோர்கள்
 எம் தமிழில் முழக்குகிறார் என்றே ஓங்கிச்
சொல்நாளே தமிழ்க்குலத்தார் உவந்துபோற்றும்
 சுடர்ப்பொன்னாள்? இடர்நீங்கும் நன்னாள்
 என்பேன்!

கல்விதரு கூடங்கள் மற்றும் உள்ள
 கல்லூரிப் படிப்பெல்லாம் தமிழர் நாட்டுள்

எல்லாமே இருக்கின்ற இயல்கள் முற்றும்
இணையில்லாத் தமிழ் மொழியில் இன்பம் பொங்க
சொல்லித் தரும் நாளென்றோ அந்நாள் எங்கள்
சோர்வகலும் வெற்றிநாள்! நன்னாள் அந்நாள்
இல்லாமல் போய்விடுமோ? தமிழா இன்றே
எழுந்தே நில்! தமிழ்முழக்கி எடுநீ வாளை!

வெறும் உணர்ச்சி ஊட்டும் முழக்கமாக இல்லாது, பயனுள்ள யோசனைகளையும் கவிஞர் எடுத்துக் கூறுவது போற்றப்பட வேண்டியதாகும்.

அறிவியலை, அணுவியலை அண்டம் முற்றும்
ஆராயும் நல்லியலை வானம் தன்னின்
நெறியியல்கள் செறியியலை, அறிஞர்போற்றும்
நிலைக்கின்ற புதுமைதரு இயலை, நல்ல
பொறியியலை மற்றும் உள இயலை எல்லாம்
போற்றித்தேன் செந்தமிழில் சேர்க்க இன்றே
வெறிகொள்வோம்! இந்த வெறி ஒன்றே நம்மின்
விடிவெள்ளியாய் நின்று விளக்கம் நல்கும்!'

மேலும் கவிஞர் கூறுவது தமிழ்நலம் கருதுவோர் உளம் கொள்ள வேண்டிய உண்மைகள் ஆகும்.

'முற்றிலுமே தமிழ் முழக்கம் ஆகவேண்டும்!
முத்தமிழின் இயல் பலவும் செப்பும் நூல்கள்
கற்றவர்கள் இன்றெழுத வேண்டும்! நல்ல
கருத்தெல்லாம் தமிழ் முழங்கக் கருதவேண்டும்

நற்றவத்தால் தமிழறிந்த தலைவர் இந்த
நாடாள வேண்டும்;ஆம்! வேண்டும்! வேண்டும்
பற்றிவரு இந்திமொழி நீங்க வேண்டும்
பார்போற்றத் தமிழ்முழக்கம் செய்வோம்
வாரீர்!'

இன்று தமிழ்நாட்டில் தமிழ் மொழிக்கு ஏற்றம் இல்லை. ஆட்சியில், நீதித் துறையில், கல்வி நிலையங்களில் சமூக வாழ்வின் ஒவ்வொரு துறையிலும் தமிழ் தனக்குரிய இடத்தைப் பெற்றிருக்கவில்லை. கடைத்தெருவில் பலகை களில் தமிழ் இல்லை. இந்த இழிநிலையால் கவிஞர் உளம் கொதிப்பதில் வியப்பெதுவும் இல்லை.

விழாக்களுக்குக் குறைவுண்டா? தமிழின்பத்தை
விள்ளுதற்குக் குறைவுண்டா? தமிழாம்
அன்னை
ழாக் குறையாய் வாழ்வது தான் வாழ்க்கை
என்ற
அவலநிலை தமிழ் நாட்டில் இனும் நீடித்தால்
பலாப்பழமாய் ஆட்சிபெற்றுப் பயன்தான் என்ன?
பயனின்றிச் சுற்றுகின்ற ஈக்களா நாம்
இலாக்குறையை நாம் நீக்கவேண்டும் என்றால்
இவ்வாட்சி தமிழாட்சிப் பழம் அறுப்போம்'

இதை வலியுறுத்தும் வகையில், தமிழ் மக்களிடையே தமிழ்த் தாக்கங்களை ஏற்படுத்தும் விதத்தில் பெருங் கவிக்கோ தமிழ் நடை மறுமலர்ச்சி இயக்கத்தை நடத்தியது முக்கியமான தமிழ்ப் பணி ஆகும்.

எண்ணற்ற தமிழ் அறிஞர்கள், ஆதரவாளர்கள் கலந்து கொள்ள இந்த இயக்கம் கன்னியாகுமரியிலிருந்து தமிழகத்தின் தலைநகராம் சென்னைக்கு தமிழ் நடைப் பயணம் மேற்கொண்டது. பின்னர் தமிழ் நடைப் பயணம்

மேற்கொண்டது. பின்னர் தமிழ் ஊர்திப் பயணம் நடத்தியது. வழி நெடுகிலும் உள்ள முக்கிய ஊர்களில் மக்களிடையே தமிழ் முழக்கம் செய்து, தனது கொள்கைகளை எடுத்துக் கூறி, மக்களைத் தமிழ் உணர்வு கொள்ளும்படித் தூண்டியது.

தமிழ் நாட்டில் தமிழுக்கு முதன்மை வேண்டும். அனைத்து ஆட்சித் துறைகளிலும் தமிழ் ஆட்சி மொழிச் சட்டம் கண்டிப்பாகச் செயலாக்கம் பெற வேண்டும். அனைத்துக் கல்வியும் தமிழ் வாயிலாகவே பயிற்றுவிக்கப் பட வேண்டும். தமிழகத்தின் வணிக நிலையங்கள், தொழில் நிறுவனங்கள். அரசு நிறுவனங்கள் ஆகிய அனைத்துப் பெயர்ப் பலகையும் தமிழில் எழுதப்பட வேண்டும். நீதிமன்றங்களில் தமிழ்தான் நிர்வாக மொழியாக இருக்க வேண்டும். எங்கும் தமிழ், எதிலும் தமிழ்— இவற்றைக் கோரிக்கைகளாகக் கொண்டு இவ்எழுச்சிப் பயணங்களுக்கு ஏற்பாடு செய்திருந்தார் பெருங்கவிக்கோ.

தமிழா ஒன்று சேர்! தமிழால் ஒன்று சேர்! தமிழுக்காக ஒன்று சேர்! இம்முழக்கங்களை ஒலித்தவாறு முன்னேறிய தமிழ்நடைப் பயணம் தமிழ்நாட்டில் மக்களின் பேராதரவைப் பெற்றது.

தமிழகத்தில் தமிழ்த்தாயின் இன்றைய அவலநிலையை மாற்றி தமிழுக்கு முதன்மை பெற்றுத்தரும் முயற்சியில், நற்கருத்துக்களை உயிரும் உணர்வும் நிறைந்த கவிதைகளாக இயற்றியுள்ள கவிஞர், ஏறத்தாழ ஐம்பது நாட்கள் தமிழகம் முழுதும் நடந்து நடந்து கொள்கை முழக்கம் செய்தது அரும்பெரும் சாதனையே ஆகும். இதன் மூலம் தான் வெறுமனே எழுதிக் கொண்டிருக்கும் கவிஞரல்ல, எழுத்தில் வடித்துத்தரும் உயர் கருத்துக்களுக்குச் செயல் வடிவமும் கொடுக்கிற வீரமறவரும்கூட என்பதை நாடு உணரும்படி செய்த சாதனையாளரும் ஆகிறார் பெருங்கவிக்கோ.

இம் மாபெரும் சாதனையைக் கவிதையில் பதிவு செய்யும் வகையில், பெருங்கவிக்கோ 'தமிழ் நடைப் பாவை' என்ற நூலை இயற்றியுள்ளார். தமிழ் இலக்கியத்தில் நித்தியமான. நிரந்தரமான இடத்தைப் பெற்றுள்ள திருப்பாவை; திருவெம்பாவை பாணியில் எழுதப்பட்டுள்ள தமிழ்நடைப்பாவை கவிஞரின் புலமைக்கு நல்ல சான்றாகத் திகழ்கிறது. இனிய சொல்லோட்டம், நல்ல கருத்துக்கள், உணர்ச்சி ஓட்டம், சந்த நயம் முதலியன கொண்ட அருமையான படைப்பாக அமைந்துள்ளது இது.

'தமிழா, சாதியை மற, தமிழை நினை. மதத்தை மற, தமிழை நினை. கட்சியை மற, தமிழை நினை' என்று முழக்கமிட்டுத் தமிழுக்கு மாண்பு தேட முயன்ற நடைப் பயணத்தின் நோக்கங்கள், உதவிய பெருமக்களின் பங்களிப்புகள், நடைப்பயணத்தின் போது ஏற்பட்ட அனுபவங்களை எல்லாம் இந்தப் பாவை நூல் விவரிக்கிறது.

'கும்பிடும் சாமிக்குக்
    கொம்புத் தேன் வானமுதம்
நம்புசெவி பாயா
    நடைமுறை ஆகாதோ?

நம்தமிழர் ஆட்சிதுறை
    தாங்கும் அலுவலகம்
நம்தமிழ் ஆட்சி
    நடைமுறை ஆக்காதோ?

தெம்புநீதி மன்றஉரை
    தீந்தமிழ் சொல்லாதோ?
செம்பொருட் காவியங்கொள்
    சங்கத் தமிழ்நஞ்சோ?

பம்பிக்கை பார்ப்பார்தம்
பாதகத்தில் வீழ்ந்துகெட்டோம்
நம்பித் தமிழரெல்லாம்
நன்னடைதே ரெம்பாவாய்'

மானமில்லார் நம்மறிஞர்
மாத்தமிழ் வாழ்வெண்ணார்
ஈனமில்லாப் பாவலர்கள்
பாப்புனைத லோடுசரி

ஞானமில்லா மக்களுக்கோ
நாளெல்லாம் கீழ்வழக்கு!
தானமில்லாச் செல்வரிங்கே
தண்டமிழை யாரறிவார்?

மோனமில்லா யோகியர்க்கோ
மூச்சடக்கும் வாசிநிலை
ஆனநிலை ஈதானால்
அன்னைமொழி காப்பார்யார்?

வானமுயர் வையமுயர்
வண்டமிழ்க்குச் சக்தியுண்டு
போனதமிழ் ஆற்றல்பெறப்
பூத்தநடை எம்பாவாய்!'

'காடு மணக்கும்
கழனியெல்லாம் மணக்கும்
வீடு மணக்கும்
விளைவெல்லாம் பூமணக்கும்

பாடு மணக்குதமிழ்
ஏடெல்லாம் பாமணக்கும்
தேடுபொரு ளெல்லாமே
தெய்வ மணங்கமழும்

ஊடுபொய்கைத் தாமரைநீ
ராம்பல் உளமணக்கும்
கோடு மணக்கும்
கொடையெலாம் மேல்மணக்கும்

நாடு மணக்குதமிழ்
நாடெல்லாம் தெய்வமணத்
தேடு தமிழ்மணக்கும்
பீடுநடை எம்பாவாய்'

'தமிழ் நடைப் பாவை'யின் எளிமைக்கும் இனிமைக்கும், கருத்து நயத்துக்கும் சொல்லோட்டத்துக்கும் இவை நல்ல எடுத்துக்காட்டுக்கள் ஆகும். பாவை முழுவதுமே படித்துச் சுவைத்து இன்புறத்தக்க இலக்கிய விருந்தாக அமைந்துள்ளது.

தமிழ்நாட்டில் தமிழ் நடைப் பயணம் மேற்கொண்ட பெருங்கவிக்கோ தேமதுரத் தமிழின் பெருமையை உலகமெலாம் பரப்புவதற்காக உலகநாடுகளில் சுற்றித் திரிகின்றார். உலகக் கவிஞர் மன்றங்களிலும் மாநாடுகளிலும் தமிழ் முழக்கம் செய்கின்றார்.

இது குறித்து அவர் பாடியிருப்பது நினைவுகூறத் தக்கது.

'வண்டமிழ் விதைக்கின்றேன்—பொல்லார்
வசைகள் பொறுத்தே மலரும் எண்ணம்
வளர்த்துக் களிக்கிறேன்.

ஏக்கப் பெருமூச்சேற்றே தோளில்
என்பணி தொடர்கின்றேன்—மேன்மை
ஆக்கம் விளைக்கும் அறநெறிப் பாதை
ஆர்த்தே நடக்கின்றேன்.

என்மொழி என்னினப் பெருமை காட்ட
எங்கும் செல்கின்றேன்—ஈனர்
புன்மொழி பொறுத்தே புனர்வாழ்வமைக்க
புகுவழி வெல்கின்றேன்'

'என் பயணங்கள் ஏதோ உல்லாசமாக நாடு பார்க்க வேண்டும் என்று செல்லும் உல்லாசப் பயணமல்ல இலக்குகளையும் நம் மொழி இனமேம்பாட்டையும் உலக அரங்கில் உயர்த்திக் காட்டும் ஒப்பற்ற நோக்கங்களுக்காகச் செல்லும் இலட்சியப் பயணமாகும்' என்றும் கவிஞர் அறிவுறுத்துகிறார்.

'நுகத்தடியைக் கழுத்தினிலே மாட்டிக் கொண்டு
நோய் தரும் பேர் துன்பத்தைத் தாங்கி நின்று
அகத்திலெழும் உணர்ச்சி யெனும் கலப்பை
கொண்டு
அறிவென்னும் உழவனாகித் தமிழ்நிலத்தை.
மகத்துவத்தின் பிறப்பிடமாய் ஆக்க ஓடும்'

பெருங்கவிக்கோவின் இலட்சியப் பணிகளை தமிழ் நாடும் தமிழ் இனமும் உணர்ந்து போற்றும் நன்னாள் எந்நாளோ?

அதுபற்றி எல்லாம் எண்ணிப் பார்க்க நேரம் இல்லாது, கருமமே கண்ணாகத் தமிழ்ப் பணி புரிந்து கொண்டிருக்கும் கவிஞர் சேதுராமனின் மனம் அபூர்வ மாக எப்போதாவது பெருமிப் பெருமூச் செறிவதும் இயல்பாக இருக்கிறது. அவரும் மனிதர் தானே?

'அல்லும் பகலும் அடித்துப் புரண்டு தமிழ்ப் பணி செய்தாலும் அறிந்து கொள்பவர்கள் மிகமிகக் குறைவு. செல்வாக்குள்ள இதழ்கள், எத்தனை முறை நாம் உலகம் சுற்றினாலும் ஏறெடுத்துப் பார்க்கவும் அறிந்து கொள்ளவும் எண்ணமிலாத இருண்ட மனமுடையனவாக உள்ளன. நல்ல தகுதியை, வெல்லும் முயற்சியோடு உருவாக்கிக் கொண்டாலும், தமிழ் மண் ஊமையாகவே பார்த்துக் கொண்டிருக்கிறது, உயரிய செயலாற்றல் மிக்கவர்களை இனங் கண்டு ஊக்குவிக்கும் பொறுப்பு அரசுக்கும், சமுதாயத்துக்கும் உண்டு. இதனை இவ்விரு தரப்பினரும் சரியாக நிறைவு செய்யாத நிலை. இத்தகைய மனப்புழுக்கங்களில் துடித்துக் கொண்டிருப் பவர்களில் நானும் ஒருவன்' என்று அவர் தனது உள்ளத்தின் உணர்வை 'கெய்ரோவில் பெருங்கவிக்கோ' என்ற நூலில் வெளிப்படுத்தியிருக்கிறார்.

'எழுதும் கவிஞர் மட்டுமல்ல பெருங்கவிக்கோ எழுதிய எழுத்துக்களுக்குச் செயல் வடிவம் தரும் தமிழ் மறவராகவும் திகழும் வா.மு. சேஐய வையகத் தமிழர்கள் உணர்ந்து—ஒல்லும் வகையில் உதவுவது தமிழுக்கும் தமிழர்க்கும் பெரும் நன்மையை விளைக்கும்' என்று அறிஞர் சிலம்பொலி செல்லப்பன் அவர்கள் ('தமிழ் நடைப் பாவை' அணிந்துரையில்) கூறியிருப்பது உண்மையே; உயர்வு நவிற்சியன்று.

# 3. ஒருமைப்பாட்டு உணர்வு

தமிழ்மொழி உணர்வும், தமிழ் இனப்பற்றும், மிகுதியாகப் பெற்றுள்ள கவிஞர் சேதுராமன் குறுகிய நோக்குடையவர் அல்லர். பரந்த இந்திய உணர்வும் கொண்டவராக அவர் விளங்குகிறார்.

'இந்தியா என்பதொரே நாடு—ஓங்கும்
இமயமுதல் குமரிவரை எங்களுடை வீடு!
உந்தி எழுந்தே உழைப்பைத்தேடு—என்றும்
உலரெங்கில் நமது புகழ் நிலைத்திடவே கூடு!'

என நாவலிக்கிறார் பெருங்கவிக்கோ.

வறுமை மிகுந்த நாடாக இருக்கிறது இந்தியா. இந்நாட்டின் எண்ணற்ற ஏழை எளிய மக்களின் வாழ்வு வளம் பெறவேண்டும்; இல்லாமைக் கொடுமை ஒழிய வேண்டும் எனும் இதயத் துடிப்புக் கொண்ட கவிஞர். சமுதாய மாறுதலை விரும்பும் முற்போக்குச் சிந்தனைகளைத் தனது கவிதைகளில் பதிவு செய்திருக்கிறார்.

'உழைத்து ழைத்து உயர்வதற்கே
உறுதி நலங்கள் தேற்றுவோம்!
உண்மைநீதி அறங்க ளோங்க
உள்ள ஏக்கம் மாற்றுவோம்!

அழைத்த நம்மின் பாரதத்தாய்
ஆக்கம் ஊக்கம் எண்ணுவோம்!
அல்லும் பகலும் ஓய்வில்லாமல்
நன்மை உண்மை பண்ணுவோம்!

வறுமை நமது வாழ்வில் வாரா
வாழ்க்கை உயர்வு காணுவோம்!
வாழப்பிறர்கை ஏந்தி வாழும்
வழக்கம் பேணல் நாணுவோம்!

சிறுமை கொடுமை எண்ணமின்றிச்
சேர்ந்து சூழ்ந்து முயலுவோம்!
தேசம் பெரிது மாசில்லாமல்
செழுமை ஆக்கம் பயிலுவோம்!''

இந்த நோக்கத்தோடு கவிஞர் விழிப்பூட்டும்—எழுச்சியூட்டும்—உணர்ச்சிக் கவிதைகளை 'இருபது கட்டளைகள்' என்ற தலைப்பில் ஆக்கியுள்ளார், நமது நாட்டின் சமுதாய, பொருளாதார, பண்பாட்டு அமைப்பு முறைகளில் மலிந்துள்ள சீர்கேடுகளைச் சாடுகின்றன இக்கவிதைகள். இந்த இழிநிலைகளைப் போக்கி சமுதாயத்தையும் நாட்டையும் சீர்படுத்திச் செம்மையுறச் செய்வதற்கான திட்டங்கள் தெளிவாக விளக்கப்படுகின்றன. அதற்கு பாரதப் பிரதமர் அறிவித்த இருபது அம்சத்திட்டம் ஆதாரமாக அமைந்துள்ளது.

மக்களை சிந்திக்கத் தூண்டும் வகையில் கவிதைகள் படைக்கப்பட்டிருக்கின்றன.

'விடுதலைதான் பெற்று வாழ்ந்தோம்—தீய
விதியை மாற்றினோமே?—ஒங்கும்
கெடுதலைகள் தன்னைப் போக்கும்
கேண்மை ஆற்றினோமா?'

என்று எண்ணிப் பார்க்கத் தூண்டுகிறார். அன்றாட

வாழ்க்கையின் அத்தியாவசியப் பொருள்களின் விலைகள் ஏறிக்கொண்டேதான் இருக்கின்றன.

'உண்ணும் உணவும் உடுக்கும் உடையும்
—விலை
உயரஉயரப் பறந்தால்— இந்த
மண்ணில் நாமும் வாழ்வதெங்கே?—பெரும்
மாற்றங்கள் வேண்டாவோ?'

இதற்கான மாற்றாகக் கவிஞர் முன் வைக்கும் யோசனை துணிகரமானது, அந்த எண்ணத்தை அவர் அழுத்தமாகவே கூறுகிறார்—

'நிலமெலாம் பொதுமை ஆக்கி
நித்தமும் உழைப்போருக்கே
தலமெல்லாம் உரிமை ஆக்கித்
தவம்போன்ற உழவர்தம்மின்
புலம்மாற்றிக் கூட்டுழைப்பாய்
பூமியில் உழைக்கும் மாற்று
நலம்செய்தால் அன்றி இந்த
நாடுமுன் னேறாதென்பேன்!'

மேலும் அவர் தெரிவிக்கும் விருப்பங்கள் நாட்டுக்கும் மக்களுக்கும் நன்மை பயக்கக்கூடிய நல்ல எண்ணங்களே ஆகும்.

'வேற்றுமைகள் ஓய்ந்திட வேண்டும்—ஈன
வேண்டா மதச் சாதி சாய்ந்திட வேண்டும்
போற்றும் சமநிலை வந்திட வேண்டும்—கல்விப்
புத்தம் புதுமைகள் பூத்திட வேண்டும்!

அறியாமைப் பேய்களை அகற்றிட வேண்டும்—
நம்மின்
அன்னை பாரதத்தின் உண்மைக் கிராமங்கள்
நெறிமுறைகளைப் பேணிட வேண்டும்—என்றும்
நேர்மைவழி வாழ்க்கை நடத்திட வேண்டும்!

துன்பம், துயரம், வறுமை இவைகளையே உடன் பிறப்புகளாகக் கொண்டு ஏழ்மையில் வாடும் கிராம மக்களோடு இணைந்து வாழ்ந்தவர் கவிஞர் சேதுராமன்' எனவே கிராம மக்களின் வாழ்க்கை நிலையை நன்கு அறிந்தவர். இந்தப் பட்டறிவின் பயனாக அவர் உணர்ச்சிச் செறிவோடு மக்களின் அவலநிலையைப் பாடல்களாக்கியிருக்கிறார்.

'புண்ணியன் சென்று பாவப்
புதர்முன்னே நிற்றல் போலும்
கண்ணியன் சென்று ஈனக்
கயவர்முன் இளித்தல் போலும்
பண்ணிசை கோட்டான் ஆர்த்தல்
பயன்இசை என்றல் போலும்
திண்ணிய உழைப்புச் செம்மல்
சிறுமைமுன் தேய்ந்தே ஓய்வான்!''

எவ்வளவு தான் உழைத்தாலும், உழைக்கும் மக்களின் விளைவெல்லாம்—உழைப்பின் பயன் எல்லாம்—உழையாமல் உண்ணுகிற தருக்கருக்குச் சேர நேரிடுகிறது. உழைப்பவர் தவிக்கின்றார் பணமில்லாமல்;

'பிணந்தின்னும் கூட்டத்தார்கள்
பெருகுதல் போல இன்று
பணந்தின்னும் கூட்டத்தார்கள்
பாரதம் பெருகி விட்டார்!

மணம்தரும் உழைப்போர் இந்த
மமதையர் பின்னே கெஞ்சிக்
குணம் விற்றுக் கடனை வாங்கிக்
கும்பியை நிறைக்கின்றார்கள்!

மலையுச்சிப் பணக்கொழுப்பர்
மடுப்போலும் எளிய மக்கள்
விலைபேசிச் செழிக்கின்றார்கள்
விற்பனை ஏலத்தைப் போல்
கலைஞரும் தொழிலாளர் நல்
கடும்உழைப்பாள ரெல்லாம்
தலைதாழ்ந்து பணிந்துநின்று
தவிக்கிறார் வெட்கக்கேடு!'

இவ்வாறு துறைதோறும் நிலவுகின்ற சிறுமைகளை எடுத்துக்கூறி, அவை மாற வேண்டியதன் அவசியத்தையும் மாற்றுவதற்கான யோசனைகளையும் வலியுறுத்துகிறார் கவிஞர் 'இருபது கட்டளைகள்' தொகுப்பில்.

எத்துறைதனிலும் நம் இந்திய நாட்டில் வீணாய் அடிமைத்தனங்கள் மண்டி வளர்வதை வேதனையுடன் சுாட்டுகிறார் அவர்.

'பண்ணையில் அடிமை; கீழ்மேல்
பான்மையில் அடிமை; உற்ற
மண்ணகப் பணிகள் எல்லாம்
மாறாத அடிமை மோகம்!
எண்ணிய முடிக்க லாற்றா
எத்தர்கள் காலம் எல்லாம்
கண்ணியம் இல்லா இந்தக்
கடைநிலை வளர்க்கின்றார்கள்!

விற்பனைப் பொருளைப் போலும்
விரிஇருள் தன்மை போலும்
அற்பர்கள் வாழ்வைப் போலும்
அடிமையாய் மக்கள் ஆக்கிக்
கற்பனைப் பொருளாய் அன்னார்
காண்வளம் கெடுத்துத் தங்கள்
வெற்றிகள் குவிக்கின்றார்கள்
வேடிக்கை மனிதரிங்கே!'

அடிமையில் மோகமும், அடிமைத்தனமும் ஒழிக்கப்பட வேண்டும். அதற்கு மக்கள் விழிப்பும் எழுச்சியும் பெற்றாக வேண்டும். கொடுமைகள் நீக்கிக் கொள்கைகள் காத்து பெரிய முன்னேற்றம் ஆக்கி, விந்தைகள் நிலைக்கச் செய்து, வெற்றி மேல் வெற்றி சேர்த்து, தந்தையர் நாட்டை ஏற்றம்தனில் நிலை நாட்டி வைப்போம் என்று முழக்கமிடுகிறார் பெருங்கவிக்கோ.

பாரினில் பாரதம் மேன்மை பெற்று விளங்க நாட்டில் உற்பத்தி பெருக வேண்டும்; ஓங்கிடும் நலங்கள் எல்லாம் விற்படு குறியைப் போல மேலோங்க வேண்டும்! வேண்டும்!

'அற்புதம் இந்தியர்கள்
அரும்திற உழைப்பென்றேதான்
பற்பல நாடும் போற்றும்
பாய்புகழ் பெருக வேண்டும்'

என்று அவர் ஆசை வளர்க்கிறார். அவரது கனவுகள் மேலும் பெருகுகின்றன.

'தன்னிறைவாக நம்மின்
தாய்நாட்டு மக்களெல்லாம்

பன்னலம் அடையவேண்டும்!
பாரெலாம் நம் பொருட்கள்
நன்னலப் பவனி வந்து
நலம்தர வேண்டும்! எங்கும்
இன்னல்கள் இல்லா வாழ்க்கை
இலங்கிடச் செய்ய வேண்டும்!'

தனி மனிதர் வாழ்விலும் சரி, நாட்டின் நிலைமையிலும் சரியே, வளமும் நலமும் பெருகுவதற்கு எல்லோரும் உழைத்தாக வேண்டும். இது தவிர்க்க முடியாத விதியே ஆகும். இதைக் கவிஞர் ஒவ்வொரு கட்டத்திலும் அழுத்தமாக எடுத்துக் கூறுகிறார்.

'இல்லாமை ஒழிய வேண்டும்
எல்லாரும் உழைக்க வேண்டும்
நல்லாறாம் ஈதொன்றைத்தான்
நாமென்றும் ஏற்கவேண்டும்!
வல்லமை சொல்லில்அல்ல,
வற்றாத செயலில்காட்டி
வெல்லவே வேண்டும் நம்மின்
வேதனை மாற்ற வேண்டும்'

என்று அவர் அறிவுறுத்துகிறார்.

நாட்டில் வீண் பேச்சுப் பெருகி விட்டது. பேச்சைக் குறைத்து செயலைப் பெருக்க வேண்டும் என்பதையும் கவிஞர் அறிவிக்கிறார்.

ஆண்மைசால் பேருழைப்பை
அன்னைநம் நாட்டுக்காக்கி,
வீண்பேச்சைக் குறைத்துத் தீய
வீணரை ஒழித்தே அன்பாம்

காண்தகு நிலைகள் எல்லாம்
கடும் உழைப் பொன்றால் என்ற
மாண்பெழில் கொள்கை வெல்லும்
வரலாறு படைக்க வேண்டும்!

முன்னேற்றம் காண்பதற்கு ஒற்றுமை அவசியம். மக்களின் சக்தியை ஒன்று திரட்ட வேண்டுவதும் அவசியமாகும்.

'சக்தியை வீணாக்காமல்
சகத்தினில் நமதுநாடு
மக்களின் சக்தி ஒன்றே
மாஇமயத்தின் உச்சிப்
பக்திபோல் ஒளிரவேண்டும்
பயன்பெறும் ஒற்றுமையை
முக்தியாய் நினைக்க வேண்டும்!
முன்னேற்றம் நாளும் வேண்டும்!'

மேலும் முன்னேற்றம் குறித்து கவிஞர் மீண்டும் மீண்டும் எடுத்துச் சொல்லி, மனசில் பதிய வைக்க முயல்கிறார்.

'முன்னேற்றச் சக்தி தன்னை
மொத்தமாய்த் திரட்ட வேண்டும்!
முன்னேற்ற நன்மை நல்ல
முறை வாழ்வோர் கொள்ள வேண்டும்!
முன்னேற்றம் நமது நாட்டின்
மூச்சாக இருக்க வேண்டும்!
முன்னேற்றம் யாண்டும் வேண்டும்!
முழுப்பெரும் வெற்றி வேண்டும்!'

உழைப்பு வெல்ல வேண்டும்; உற்பத்தி பெருக வேண்டும்; தழைத்திட வேண்டும் நம்மின் தகுதிகள்

என்றென்றைக்கும்! ஒழித்திட வேண்டும் தீக்கையூட்டுகள் தருவார் தம்மை என்றும்,

'பேசிப் பேசிக் காலமெல்லாம் பெருமை
இழந்தோம்
பேருழைப்பைத் தோழர்களே ஏற்றிப்
போற்றுவோம்!'

என்றும் கவிதை முழக்கம் செய்கிறார் அவர்.

'சுடர்முகம் காக்க வேண்டும்
சோர்வின்றி உழைக்க வேண்டும்
அடலேற்று வலிமை வேண்டும்
அஞ்சிடா வாழ்வு வேண்டும்
கடலைப்போல் உள்ளம் வேண்டும்
கறைபடாக் கரங்கள் வேண்டும்
நடமாடும் தொழிற்கூடம் வேண்டும்
நல்லுழைப்பாளர் வேண்டும்

நாடு முன்னேறுவதற்கு இந்திய நாடு முழுவதும் ஒன்றே என்ற ஒருமைப்பாட்டு உணர்வு நாட்டு மக்களிடையே வேரூன்றி வளர வேண்டும். ஏற்றமும் தாழ்வும் ஒன்றே, எந்தையர் நாடிங்கேதான் எல்லாரின் வாழ்வும் ஒன்றே என்ற எண்ணம் பரவ வேண்டும்.

இந்த அடிப்படையில் மகாகவி பாரதியார் கவிதையில் கனவுகள் வளர்த்தார், அதே தன்மையில் தற்காலத்துக்கு ஏற்றபடி தன் கவிக்கனவுகளை வளர்த்திருக்கிறார் பெருங்கவிக்கோ. நடைமுறை சாத்தியமான கனவுகள் தான்.

'வங்கத்தில் விளைபொருள்கள்
மையத்து நாட்டில் சேர்ப்போம்!
பொங்கிடும் இயற்கை தாயாள்
பொலிவுடைக் கேரளத்தாய்

தங்கிடும் பொருளெடுத்துத்
தலைநகர் தில்லி சேர்ப்போம்!
அங்கிங்கெனாத வாறே
அரும்பொருள் சேர்க்கைசெய்வோம்!'

இவ்வாறு மேலே மேலே அடுக்கிச் செல்கிறார் 'எல்லை ஒன்றின்றிப் பொருள்கள் சேர்ப்போம்' 'பயன் தரு நிலையையெல்லாம் ஒருமுகமாகச் செய்வோம், உரிமைகள்சமமே என்போம்' என்று சொல்லும் கவிஞரின் கற்பனை இனிமைகளை அழகுகளைத் தொடுகிறது கவிதை ஓட்டத்தில்.

'காசுமீர் ஆப்பிள் இன்பக்
கனிச்சுவை தன்னை நம்மின்
மாசிலாக் கன்னியாகுமரி
வயல்உழை உழவன் உண்டு
பாசங்கள் பெருகச் செய்வோம்!
பயன்தரு கன்னி முத்தைக்
காசுமீர் உழத்தி பூண்டு
கலைஞானம் விளங்கச் செய்வோம்!

மேம்படு இராசசு தானின்
மென்னகைப் பெண்கள் செய்யும்
தேம்படு நுண்கலைகள்
திகழொளி இழைகள் தம்மை
தாம்பூண்டு கேரளத்துச்
சந்தனக் குமரிப் பெண்கள்
ஆம்பல்வாய் பூக்கக் காண்போம்
அழகுக்கே அழகு காண்போம்!'

'இருபது கட்டளைகள்' நாட்டை உயர்த்தக் கூடிய நல்ல திட்டங்களை உணர்ச்சிகரமான நடையில்

சொல்லும் கவிதைகளைக் கொண்ட தொகுப்பாகும். நாடு வளமுறவும் முன்னேறவும் இளைஞர்களையே நம்பி இருக்கிறது. நாட்டின் இதயம் நல்இளைஞரேயாவர். அதனால்தான் பெருங்கவிக்கோ இளைஞரை நோக்கிப் பாடுகிறார்.

'இதயங்கள் இந்த நாட்டின்
இளைஞரே நீங்கள் அன்றோ?
பதம்பெற வாழ்வுப் பாதை
பலப்பல மேன்மை கூட்ட
நிதம்உழைப்பைத்தொ ழுங்கள்!
நிகரிலா எப்ப ணிக்கும்
இதம்பெறும் ஆற்றல்கொண்டே
ஏற்றங்கள் காண்பீர் என்றும்!'

சரிசம கோசலிச வாய்ப்பினை ஆக்கி வாய்மையின் துணையால் வெல்வோம் என்னும் கவிஞர் உறுதியாய்க் கூறுகிறார்.

'பணிகள்தான் இல்லை என்னும்
பாதகம் இல்லை என்போம்!
அணிபெரும் வகையில் ஓங்கும்
ஆய்பல பணிக ளுக்கும்
துணிவுடன் இளைஞர் செல்லும்
சுடர்புகழ்த் திட்டம் காப்போம்!
மணிமணியாக அன்னை
மாபூமி கொழிக்கச் செய்வோம்!

மொழிகளினால் பேதங்கள் வளர்த்து நாட்டின் ஒற்றுமைக்கு ஊறு செய்வோரை வன்மையாய் கண்டிக்கிறார் கவிஞர்.

'மொழிகளிலே பேதங்கள் வளர்த்திட்டே
ஒருமை தன்னை
பழிகளிலே வசை நஞ்சை வளர்க்கின்றாய்
மனிதா ஏன் ஏன்?

உணவுகளில் பலவகைகள் உண்ணுவது
வயிறு ஒன்றே
மணங்களிலேபலவகைகள் நுகருவதோமூக்குஒன்றே
பணவகைகள் மணவகைகள் வேறெனினும்
நோக்கம் ஒன்றே
பிணமாகிப் போவதும் நமக்கொன்றே
(மனிதா) பின் ஏன் கூச்சல்?

குமரிமுதல் இமயம்வரை கொள்கைவழி
சமமே செய்வோம்
தமரினைப்போல் மதமொழி யால் வேறுபாடு
வளர்ப்போர் தம்மைச்
சமம் எண்ணும் நிலை செய்வோம் அவரவரின்
தாய்மொழிக்கே
அமரநிலைதான் தருவோம் மனிதர் மதம்
ஒன்றே என்போம்!'

சிந்தனையைச் செம்மைப் படுத்தி, உயர் அறிவால் ஒற்றுமை காணவேண்டியதன் முக்கியத்துவத்தை அவர் வலியுறுத்துகிறார்.

'எல்லாருமே எல்லார்க்கும் ஒன்றென்போம்
அதற்கே ஓங்கு
வல்லமையாம் நமதுமனச் சிந்தனைநன்
நடைகள் காண்போம்!

பல்லாற்றும் பல்வழியும் பயனாகும் முயற்சி முற்றும்
கல்விஉயர் அறிவாலே இந்தியத்தாய்
ஒருமை காண்போம்!'

# 4. உலகம் தழுவும் நோக்கு

தாய்மொழிப் பற்றும் தம் இனப் பற்றும் கொண்டுள்ள பெருங்கவிக்கோ, இந்திய நாட்டின் ஒருமைப்பாட்டு உணர்வை வலியுறுத்துவதுடன், உலக ஒற்றுமையை வளர்ப்பதிலும் கருத்துடைய கவிஞராகத் திகழ்கிறார்.

'உலக ஒற்றுமை ஓங்கிட வேண்டும் வையம்
ஒன்றே எனப்புவி ஒழுகிட வேண்டும்.
கலகம் செய்யும் கயமைகள் எல்லாம் இன்றே
கண்டிப்பாக நீங்கிட வேண்டும்

மக்கள் எல்லாரும் ஒருதாய் மக்கள் பூமி
மானுடம் எல்லாம் ஓர் குடும்பம்!
செக்கர் வானிலோர் சூரியன் போல பாரின்
தேசம் ஒன்றாய் ஒளிர்ந்திட வேண்டும்

'யாதும் ஊரே யாவரும் கேளிர்'—என்றே
நவின்றதும் முதன்முதல் எம் தமிழினம்
ஓதும் இதைச் செயல் உறுதிப் பாட்டினால் இணைவம்
ஒரேகுடை ஆட்சி காணல் நம் கடன்'

போர்கள் ஒழியவேண்டும், எங்கும் அமைதி நிலவிட வேண்டும் என்று ஆசைப்படும் கவிஞரின் உள்ளம் கொதிப்

படைகிறது. தற்கால உலக நிலை கண்டு. சீற்றம் விளைகிறது அதன் பயனாக.

'உலகினை ஏறெடுத்தே
உணர்வுடன் பார்க்கின்றாயா?
கலகங்கள்! கயமைச் சூழ்ச்சிக்
கல்லெறி கொடுமை! ஈதே
நலமுறப் பயன்படுத்தும்
நயவஞ்சர் மேலோர் என்றால்
நிலமிங்கே எதற்கு? தோழா
நிமிர்ந்துவா நெருப்பை வைப்போம்!'

இந்த நிலை கண்டு குமுறி எழுந்து, இடித்துரைத்து, நலிவுகள் சாக ஆவன செய்ய வேண்டியவர்கள் படித்த மக்கள் அவர்கள் நிலை எப்படி உள்ளது? கோபத்துடன் சுட்டுகிறார் கவிஞர்,

'படித்தவர் பதவி யுள்ளார்
பகடைக்காய்! எவராண்டாலும்
பிடிப்பதும் பல்லிளித்துப்
பேடிபோல் சென்று நன்றாய்
நடிப்பதும், அதனால் வாழ்ந்து
நாள் கழிப்பதும்தான் வேலை!
இடிப்பவர் இல்லை! தோழா
எழுந்துவா இடிப்போம் நாமே!'

மக்களைப்புலியெனச் சீறி,பொங்கும் புயலென மாறி, நிலைமைகளை மாற்றும்படி அறிவுறுத்துகிறார் கவிஞர்.

'ஓங்கும் உயரிய எண்ணம் கொண்டு ழைப்போம்
நன்றே செய்திட நாளும் முயல்வோம் விஞ்சும்
நயங்கள் கண்டே நன்மை திளைப்போம்,

ஒன்றினை ஒன்று தான் தழுவியே வாழும்! இந்த
உலக இயற்கையைக் கற்றிட வேண்டும்!
அன்றன்று சிந்தனை புதுக்கிட வேண்டும் உயிர்
அருமை சமைத்திடும் ஆற்றல்கள் வேண்டும்!'

விசாலப் பார்வையால் உலகத்தை நோக்கி சிந்தனைகள் வளர்க்கும் கவிஞர், தென்வியட்னாம் விடுதலைப்படையின் வெற்றி குறித்து உவகைப் பெருக்கோடு பாடியிருக்கிறார். பாகித்தான் பாதகத்தை எதிர்த்து வீரமுழக்கம் செய்கிறார். எகிப்து இசுரேல் போர் பற்றி உணர்ச்சியோடு கவிதை இயற்றியுள்ளார். இக்கவிதைகளில் அவருடைய நேர்மை உள்ளமும் நியாய உணர்வும் ஒலிசெய்கின்றன.

'பெருநாடு சிறுநாட்டைப் பிய்த்து வீழ்த்தல்
பிழையென்றால் அப்பிழையைச்
சிறுநாடும் செய்யாமல் இருத்தல் ஒன்றே
செம்மையாம்'

என அழுத்தமாகப் பதிவு செய்கிறார் கவிஞர்,

'போரிடுதல் போல ஒரு கொடிய பாவம்
பூமி மிசைக் கண்டார் யார்?
யாரிதனை ஆதரித்தார்? எம்மதம் தான்
நாசத்தை வரவேற்ற துண்டு?
வேரினிலே வெந்நீரை ஊற்றலைப்போல்
விரி உலக மரத்தில் வெம்மை
நீரினைநீர் ஊற்றுகிறீர்! அந்நீர் செந்நீர்!
நெறியுமிதா? நேர்மை காண்பீர்!

என்று இடித்துரைக்கிறார்.

சிலி பற்றியும் வங்கதேசம் பற்றியும் உணர்ச்சி துளும்பும் கவிதைகள் பாடியுள்ளார் பெருங்கோவிக்கோ.

உலக நாடுகளை வியந்தும், அவர்கள் செயலைப் பாராட்டியும் பரிந்தும் பாடும் இயல்பு பெற்றுள்ள கவிஞர் எந்த நாடு அநீதி செய்யினும் வன்மையாய் அதைக் கண்டித்துக் குரல் எழுப்பத் தவறுவதில்லை. எவர் செய்தாலும் குற்றம் குற்றமே என்று சுட்டிக் காட்டி, தட்டிக் கேட்கும் நேர்மைத் துணிச்சல் கவிஞர் சேதுராமனின் உள்ளத்தில் உறைகிறது,

கொரியாவின் பயணிகள் விமானம் ஒன்று வான வெளியில் எல்லைதவறி ருசியாவின் எல்லைக்குள் புகுந்து விட்டது என்று குற்றம் சாட்டி, சோவியத் ருசியா அந்தக் கொரிய விமானத்தைச் சுட்டு வீழ்த் தியது. இது முறை அன்று? மனிதாபிமானம் அற்ற செயலே யாகும் என்று உணர்ந்த கவிஞர் அறச்சீற்றத் துடன் கவிதை படைத்துள்ளார்,

'தன்னுடைமை தன்னாடு தன்னின் வானம்
தமதெனவே எல்லைக்கோட்டைத் தான் போட்டு
மன்னுபெரும் பொதுவுடமை கர்த்தால் எந்த
வகையினிலே உலகு பொதுவுடைமை ஆகும்?'

என்று அவர் கேள்வி எழுப்புகிறார்.

வையமெல்லாம் பொதுவுடைமை மலர வேண்டும் மக்கள்
வாழ்வாங்கே உலகிணைந்து வாழ வேண்டும்
நையச்செய் கொடுமையெலாம் போகவேண்டும்
நடுநிலையால் உலகநெறி உருசியாவைப்போல்
வையகத்தின் அமுதாகக் கிடைக்க வேண்டும்
கருத்துக்கே மதிப்பளிக்கும் முதல்வன் ஆயின்
ஐயகோ எனக் கதற உருசியாவும் தீ
அநீதீ செய்யின் கண்டித்தல் கடமை அன்றோ?'

ஈழத் தமிழரின் போராட்டம் பற்றியும், இலங்கையில் சிங்களர் செய்த கொடுமைகள் குறித்தும் கவிஞர் கொதித்

திருக்கிறார், இலங்கையில் நடந்த படுகொலைகள் மற்றும் வன்முறைச் செயல்களைக் கண்டும் அமெரிக்காவும் இதர நாடுகளும் அவற்றைக் கண்டிக்க முன்வராதுவாளா இருந்ததைக் கண்டித்தும் குற்றம் சாட்டியும் அவர் உணர்ச்சியோடு பாடியிருக்கிறார்.

குறைகள் இல்லா உலகம் பற்றிக் கனவு வளர்க்கிறார் கவிஞர். அவர் விரும்பும் கனவுலகம் எப்படி இருக்கும்? 'புத்துலகம்' என்ற பாடல் அதை அறிமுகம் செய்கிறது.

'சேர்த்துச் சேர்த்துப் பதுக்கி வாழும் தீயவ
ரங்கில்லை
தேசம் கண்டம் மொழிகள் என்னும் சிறுமைப்
பிரிவங்கில்லை
வேர்க்க வேர்க்க உழைப்போர் தவிர வேறு
யாரும் இல்லை
வெற்றியுண்டு தோல்விஇல்லை வீணரென்
பாரில்லை.

அங்கே கயமை செய்வாரில்லை. தனி உடைமை பேசிப் பொதுவுடைமை மாய்ப்பாரில்லை. தண்டம் இல்லை, சலிப்பு இல்லை, குற்றமற்ற இளமை தான் உண்டு. பிணி முடிபுகள் இல்லை ஆணையில்லை, ஏவலில்லை, அடிமை என்பதும் இல்லை.

'இசையும் எழிலும் இணைந்து பேசும் ஈடில்லாத
உலகம்
ஏற்றத் தாழ்வு இழிவு உயர்வு என்பதறியாப்
புவனம்
வசையில்லாத உலகம்.'

என்று புத்துலகக் கனவு காண்கிறார் கவிஞர், இப்படிப்பட்ட உலகம் இனிமையான உலகமாகத்தானே இருக்கும்!

# 5. குருபக்தியும் ஐயப்பன் அருளும்

'பெருங்கவிக்கோவின் உள்ளம் எதிர் மறைகட்கும் இடமளிப்பது. பக்தியில் பதியும். பகுத்தறிவை வர வேற்கும் பழமையின் சீர்மை போற்றும். புதுமையின் பயனை வாழ்த்தும் தேசியம் பரவும். செந்தமிழர் தனி உரிமையும் செப்பும். உத்தமர் காந்தியையும் போற்றும். சமதர்ம மாவீரன் லெனினையும் பாராட்டும், ஒரு வகையில் அது ஒரு தமிழ்க்கடல் எனலாம்.'

இவ்வாறு குறிப்பிட்டிருக்கிறார் பேராசிரியர் க. அன்பழகனார், இக்கூற்றின் உண்மையை பெருங்கவிக்கோவின் கவிதைப் படையல்கள் எடுத்துக் காட்டும்.

தமிழ் உணர்வும் தமிழ் இனப்பற்றும் தேசீய ஒருமைப்பாட்டு நாட்டமும், ஒரே உலகம்—உலக மக்களின் ஒற்றுமை எனும் கனவுகளும் அலைமோதும் கவிக்கடல் உள்ளத்தில் ஐயப்ப பக்தி உணர்வும் சற்குருநாதர் சாது குருசாமிகள் மீதான பக்தியும் சதா அலை வீசிக் கொண்டிருக்கின்றன. இவ் உணர்வெழுச்சியால் உந்தப்பெற்று கவிஞர் சேதுராமன் சாது குருசாமி பாமாலை, ஐயப்பன் அருளமுதம் என்று பக்திப் பாடல்களை, போற்றிப் பனுவல்களை, உள்ளத்தின் உணர்வலைகளாக வாரி வழங்கியிருக்கிறார்,

முப்பது ஆண்டுகளாக அவர் ஐயப்பன் ஆலயம் சென்று வருகிறார், 'ஐயப்பன் ஆலயம் செல்வதற்குரிய நோன்பினை நெறியோடு கடைப்பிடித் தொழுகி, உள்ள உறுதியோடு சென்று வருவதால் எனக்கு நிறைந்த துணிவும் தெம்பும், மேன்மையும் ஏற்படுகிறது. ஐயப்ப பக்தர்கள் பலர் உண்மையை மறந்து சடங்கிற்கும் கோசத்திற்கும் மட்டுமே சென்று வரும் நிலை தவிர்க்கப்பட வேண்டும். நோன்பு நேரத்தில் ஒருவேளை உணவே உட்கொள்ள வேண்டும், தீய சிந்தனைகளை நீக்க வேண்டும். இப்படி நியதியைப் பின்பற்றி நடந்தால், இவ்வழி முறையால் நல்ல பெருமை அடைய முடியும்' என்று பெருங்கவிக்கோ அனுபவ பூர்வமாக அறிவிக்கிறார்.

தான் பெற்ற இன்பம் ஏனையோரும் பெறுவதற்காக அன்புடன் அழைத்து ஆற்றுப்படை இயற்றியுள்ளார் அவர்.

'அருட்செல்வம் தேடுங்கள் அன்பர்களே இறை
ஆற்றலில் கூடுங்கள் தோழர்களே!'

என்று அழைத்துப்பக்திப்பாடல்கள் பாடுகிறார். சாதுகுரு சாமிகள் மீதும் பாமாலை இசைத்துள்ளார். உள்ளததின் உணர்வில் முகிழ்த்தெழுந்ததால் இப்பாடல்களில் இயல்பான ஓட்டமும் இனிய சொல்லாட்சியும் சான்றோரின் அருள் அமுதத்திற்கு ஈடான இதயக் கனிவின் விளைவான நயங்களும் கலந்து உயிர்த்துடிப்புடன் விளங்குகின்றன.

'உண்டிடும் உணவிலே உறைந்தருள் குருவே
கண்டிடும் பொருளிலே கவிந்தருள் குருவே
விண்டிடும் சொல்லெலாம் விளைந்திடும் குருவே
தொண்டிலே துணைவரு சுடர்கதிர்க் குருவே'

இவ்விதம் படிப்போரின் உள்ளத்தையும் இழுத்துச் செல்லும் பான்மையில் அமைந்துள்ளது இப்பாமாலை.

'காலம் கடந்த கனி அருள் நிலமே
ஞாலம் கடந்த நடைதரும் அறமே
நீல விண்ணின் நிலைகளின் திறமே
சாலப் பண்பார் தவமே குருவே'

இப்படிப் பாடல்கள் தமிழ் இனிமையை உணர்த்துவதாகவும் ஒலிக்கின்றன.

'மணியின் ஓசை வாழ்த்தும் ஒளியே
அணியின் எழிலே ஆர்வ மொழியே
பணியின் செயலே பார்வை வழியே
வணங்கும் நுதலே வாழிய குருவே!'

என்று போற்றிப்பரவும் பாடல்களைக்கவிதை ஓட்டத்துக்காகவும் செஞ்சொல் நயத்துக்காகவும் பலமுறை படித்து மகிழலாம்

அதே போல ஐயப்பனைப் போற்றித் துதிக்கும் பாடல்களும் இயற்கை வளங்களை வியக்கும் இனிய கவிதைகளாகவும், பக்திக் கனலும் உள்ளத்தின் உணர் வலைகளாகவும் வெளிப்பட்டு, ரசனைக்கும் விருந்தாகத் திகழ்வதைக் காணலாம்.

'மேகம் வந்து கூடி நின்று வேகமாக ஓடும்
மின்னலோடு இடி இடித்துப் பொன்மழை
யாக்கூடும்
வகமாகத் தாவும் நதி மேலும் மேலும் வீழும்
விண்ணை முட்டும் நன்மரங்கள் மண்ணைத்
தொட்டு ஆளும்

நாகமணிச் சோதிஒளி ஏகஒளி வீசும்
நாடும் வளம் கூடிமகிழ்வோடு கொஞ்சிப்பேசும்
தாகமொடு ஈகைஅருள் ஈயுமணிகண்டர்
சபரிமலை அய்யப்பன் வாழும் அருள்மலையே!'

பேர்ன்ற சபரிமலை வளம் பாடும் பக்திப் பாடல்களைச் சான்றாகக் கூறலாம்.

ஐயப்பனை எண்ணிப் பாடும் பக்தி உணர்வு நிறைந்த பாடல்கள் அடியார்கள் மரபில் வந்த மெய்யான பக்தரின் இதயக் கனிவாகத் திகழ்வதைக் காண முடியும்.

எடுத்துக்காட்டாக ஒன்று

'வேரிலே பழுத்த விரிபலாக் கனியே
வெற்றிக்கு வித்தாகும் முத்தே!
வேதனை ஆற்றிட இன்பமாய் வந்து
விளைஅருள் மாமருந்தே! நெஞ்சத்
தேரிலே இருக்கும் தேன்சுவை அணியே!
தித்திக்கும் முக்கனி அமுதே!
தேவர்கள் துயரம் தீர்த்திட உலகில்
தெய்வமாய் வந்த அய்யா!
நேரிலே காண நீள்தவம் செய்தோம்
நெஞ்சகம் உருகிட வந்தோம்!
நேர்மையே! வாய்மையே! நீதியே! ஒளியே!
நிலைப்பொருள் ஆகிய மதியே!
பாரிலே, ஊரிலே, உலகிலே அறம்செய்
பக்தர்கள் உய்ந்திட வந்தோம்!
பரமனின் புதல்வா! சிரம்மிகத் தாழ்ந்தோம்
பார்த்தருள் செய்க அய்யப்பா!'

ஐயப்பனைப் போற்றித் துதிக்கும் பாடல்களிலும் கவிஞரின் முற்போக்குச் சிந்தனை சுடர்தெறிப்பதை உணரமுடியும்.

'மதமென்ன, குலமென்ன, மார்க்கங்கள்தான் என்ன!
மனமொன்றிச் சேர்வதில் மனிதர்கள் ஓரினம்!
இதையறிந்தோ மெனில் எல்லோரும் ஓர்மதம்!
என்பதைக் காட்டினாய்! மன்பதை ஊட்டினாய்!'

என்றும்,

'பலப்பல மதங்கள் ஏன்? பாரினில் சண்டை ஏன்?
பயன்பெற ஓரிறை பார்ப்பதில் பேதம் ஏன்?'
என்றும் அவர் உள்ளம் கேட்கிறது.

ஐயப்பனிடம் வேண்டுதல் செய்வதிலும் கவிஞரின் பேருள்ளம், அன்புள்ளம், மனித நேய உள்ளம் பளிச்சிடுவதைப் பாடல்மூலம் அறியலாம்.

'அருளாயோ
உடைமைப் பெருஞ்செல்வம், ஒழுக்க நெறி வாழ்வு!
கடமைதனைப் போற்றும் கல்வி ஊக்கத்தால்
திடம்கொள் சிந்தை, திறத்தோடு கோடிப்பொருள்!
தேடிப் பிறர்க்களிக்கும் தெளிவு, உலகத்தை
ஈடில் பெருவாழ்வில் இணைக்கும் அறிவோடு
கூடும் நலமெல்லாம் கூட்டுவிப்பாய் ஐயப்பா!
என்று கோரிக்கை விடுக்கிறார் கவிஞர்.

# 6. மதங்களை சாடும் சிந்தனை வேகம்

உள்ளத்தில் பெருக்கெடுக்கும் உணர்வின் ஊற்றுக்களாகப் பக்திப் பாடல்கள் பாடியுள்ள பெருங்கவிக்கோ முழுக்க முழுக்க ஆத்திகக் கவிஞர் அல்லர். சிந்தனை வேகம் பொங்கிப் பாயும் சுடர் அறிவுக் கவிதைகளை மதங்களைச்சாடியும், போலிமதவாதிகளை வன்மையாகக் கண்டித்தும் அவர் பாடியிருக்கிறார். இவர் ஒரு நாத்திகரோ என்ற மயக்கத்தை உண்டாக்கும் அவற்றை மட்டுமே படிக்க நேர்ந்தால்.

கவிஞரை நன்கறிந்த கவிக்கொண்டல் மா. செங்குட்டுவன் இது குறித்து தெளிவு படுத்தியிருப்பது நினைவு கூறத்தக்கது.

'அரைகுறையாகப் புரிந்து கொண்டவர்களில் சிலருக்குப் பெருங்கவிக்கோ பெரியநாத்திகராகத் தோன்றுவார். இன்னும் சிலருக்கு பெரிய ஆத்திகராகத் தெரிவார். யார் என்ன நினைத்தாலும் அதைப் பற்றி அவர் கவலைப் படுவதில்லை. தமது உண்மை மனச்சாட்சி வழியே அவர் தொடர்ந்து சென்று கொண்டிருக்கிறார். அவர் இறை நம்பிக்கையுடையவர்தாம். ஆனால், இன்றைய ஆத்திகவாதிகள் கூற்றுகளையெல்லாம் அப்படியே ஏற்றுக் கொள்ளும் கண்மூடித்தனமான பக்தர் அல்லர். பகுத்தறிவாளர் நுழைய முடியாத இடத்தில்கூட நுழைந்து ஆத்திகக் கோட்டையையே தகர்க்கும் அதிர்வேட்டுக் கவிஞர் அவர். பகுத்தறிவுப் பக்தர் என்று அவரைக்

கூறலாம்.' (மா. செங்குட்டுவன்—'முத்தமிழ் மாமணிகள்' கவிதைத் தொகுப்பின் அணிந்துரையில்.)

மதங்களுக்கு எதிரான அதிர்வேட்டுகளாகவே கவிஞரின் கவிதைகள் அமைந்துள்ளன.

'மதத்தை ஒழிப்பதற்கு மார்தட்டி அழைக்கின்றேன்
எதற்கும் நான் அஞ்சாமல் என்னருமைத்
தாய்நாட்டீர்
அழைக்கின்றேன் அழைக்கின்றேன்!

என்று முழக்கம் செய்கிறார் கவிஞர்.

'எற்றுக்கு மதம் வேண்டும்? சொல்லுங்கள்!
மதங்கள் பல தோன்றினவே? மடமை ஒழிந்ததுவா?
சாதிகள்பல சாய்ந்ததுவா; சமஉரிமை வந்ததுவா?
சாதிமுறை ஒழிந்ததென்று சாற்றுதற்கு நியாய
முண்டா?
நாதியற்ற ஏழையரை நலியாமல் காத்ததுண்டா?
பொய்மை ஒழிந்ததுவா? புரட்டும் அடங்கியதா?
மெய்மை நிலைத்ததுவா? மேன்மை வளர்ந்ததுவா?
பொறாமையும் வஞ்சகமும் பொக்கெனவே
போனதுவா?
சூதுகளும் சூழ்ச்சிகளும் துரோகங்களும்
மாய்ந்ததுவா?
வாதுகளும் வம்புகளும் வாய்ச்சண்டை
ஒழிந்தனவா?
எத்தனையோ மதத்தலைவர் இத்தரையில்
தோன்றினரே
அத்தனை பேரும் அரற்றிவிட்டுச் சென்றனரே!
என்னதான் பெரும்பயனை இந்தப்பூமி
கண்டதையா?'

சிந்தனைத் திறன் எழுப்பும் சூடான கேள்விகள்தான் நியாயமான சிந்தனைகள், ஆனால் இப்படி எல்லாம் எடுத்துச் சொன்னால், 'நாத்திகன் என்றிடுவீர். நாத்தடிக்க ஏசிடுவீர்; கூத்தான சுடு சொல்லால் கொட்டிடுவீர்; ஆள் சேர்த்து வந்து அரற்றிடுவீர்' என்றும் உணர்ந்து சொல்கிறார் அவர். அதற்காக அவர் தயங்க வில்லை. மேலும் சூடான கணைகளை எறிகின்றார்.

'எந்த மதத்தலைவர் இந்த நல்உலகத்திலே
முந்தை மனிதர்களை முறைப்படி நடக்கவைத்தார்?
சுய நலத்திற்காகத் தோற்றுவித்த மதங்க ளெல்லாம்
வியந்துமே பாராட்டி வேண்டிநின்றீர்! மதிகெட்டீர்
மனிதர்களில் வேற்றுமையேன்? மதங்கள்
வந்து பிரிப்பதும் ஏன்?
தனியாகப் பிரிந்துபல சாத்திரங்கள் சாற்றுவதேன்?
உலகத்தில் பிறந்திட்ட ஒப்பிலா மனித ரெல்லாம்
பலமதத்தார் ஆகாமல் ஒருமதமாய் ஆனால் என்?
சண்டை சச்சரவும் சாய்ந்து மடிந்திடுமே
விண்டிடா மகிழ்ச்சி வெள்ளம் விரைவில்
ஏற்படுமே!"

என்று கவிஞர் குறிப்பிடுவது மக்கள் மனசில் பதிய வேண்டிய உண்மை ஆகும்.

அண்ட மெல்லாம் என் மதமே ஆணிவேர் என்று சொல்லும், பண்டை மதமிருந்து வந்த மதம் வரைக்கும், எந்த மதத்தில் ஊழல் இல்லாமல் போச்சுதப்பா என்று கேட்டு, ஒவ்வொரு மதத்திலும் நிலவுகிற குறைபாடுகளை விரிவாகவே சுட்டிக் காட்டுகிறார் பெருங்கவிக்கோ. வெறுமனே குறை கூறிக் கண்டித்துப் பாடி விட்டு ஒதுங்கி நிற்கவில்லை அவர். நல்வாழ்வுக்கு வகை செய்யக் கூடிய நல்ல யோசனையை அவரே முன் வைக்கிறார்.

'வீண் சண்டை வேண்டாம் விவேகமில்லா
மதம் வேண்டாம்
எல்லா மதங்களிலும் இருக்கின்ற நற்கருத்தை
நல்நோக்கத்தோடு நாமெல்லாம் ஏற்றே
மனிதர்கள் ஒற்றுமையால் மன்பதையில்
வாழ்வதற்கு
இனி ஒருவகை செய்வீர் என்றுதான்
கேட்கின்றேன்!
வழிவகை என்னவென்று வகையறிந்து
காண்கையிலே
கழிகொள்கை நீக்கிக் காரிருள் ஒளியாக
'மனிதமதம்' என்ற ஒரேமதம் உலகில் ஏற்படுத்தி
புனிதம் அடைவோம் போற்றிபுகழ் அடைவோம்என
ஆசையாய் கூறுகின்றேன் அழைக்கின்றேன்
மனத்துணிவாய்''

என்று பெருங்கவிக்கோ தன் எண்ணத்தை வெளிப்படுத்துகிறார்.

எந்த ஒரு மதத்தையும் ஏற்படுத்த எண்ணாமல் சிந்தனையில் மனிதர்களைத் திருத்துதற்கே எண்ணிப் பாரபட்சம் பார்க்காமல், ஓர வஞ்சம் எண்ணாமல், சீரான திருக்குறளைத் தந்த திருவள்ளுவர் போல், மற்றையோரும் மதத்தை நினைக்காமல், நற்றவக் கொள்கைகளை நவின்று சென்றிட்டால், நம் மனித இன இதயம் திறந்திருக்குமே என்று அவர் ஏக்கம் தெரிவிக்கிறார்.

'பெரிய மனதுடனே பிற்போக்குக் கொள்கைகளை
உடனே எரித்திடுவீர் உண்மை நெறியனைத்தும்
திடமுடன் ஏற்றுச் சிந்தை மகிழ்ந்திடுவீர்!
காலங்கள் மாறுவதும் கருத்துக்கள் மாறுவதும்

ஞாலத்தில் நாமின்று நம்கண்ணால் காண்கையில்
மதத்தலைவர் கூறிட்ட மட்டரகக் கொள்கையையும்
விதித்தவிதி அதுவென்று வீறாப்புப் பேசிநிதம்
மதத்திமிரை வளர்க்கின்றீர்; மாண்புசால்
புதுக்கொள்கை
உதிக்கவில்லை உங்களுடைய ஒளியில்லா
இதயத்தில்
பழஞ்சோறு புளித்துவிட்டால் பசியாற்ற
எண்ணுவீரா?
பழங்கொள்கை பதமிழந்தால் பள்ளத்தில்
தள்ளினால் என்?
எத்தனையோ ஆண்டுகள் முன் ஏற்றிட்ட
கொள்கை யெல்லாம்
இத்துணை புதுஉலகுக் கேற்றவையாய்
இருந்திடுமோ?
ஏற்றது போக ஏலாத கொள்கை யெலாம்
மாற்றி யமைத்தாலென்? மதியைத்
தூண்டினாலென்?'

என்று அவர் கேட்பது நியாயமான கேள்விகளேயாகும்.

பண்டைத் தமிழகத்தில் மத பேதங்களும், பல கடவுளர் வணக்கமும் இருந்ததில்லை என்பதையும் பெருங்கவிக்கோ தம் கவிதைகளில் சுட்டிக்காட்டியுள்ளார்.

'நன்னெறியை வளர்த்தார் செந்நெறியை மேல்
வளர்த்தார்
ஒன்றே குலமென்றும் ஒருவனே தேவனென்றும்
முன்பே உரைத்தது நம் முதுதமிழ்க் குடியன்றோ?

அன்பை அறிவை அறநெறி முழக்கத்தை
பண்பைப் பட்டறிவை பயன்தரு முயற்சிகளை
திண்மை ஊக்கத் தெறிவைத் திறமாக்கி
வாழ்வியல் முறையை வடித்தெடுத்தார் நம்தமிழர்
பாழ்மதங்கள் தந்த பகைமைக் கருத்துகளை
ஏற்றநம் தமிழர் ஏன் மறந்தார் நம் நெறியை?'

என்று அவர் வருத்தப்படுகிறார்.

'மதங்கள் சாதி மடமை இன்றி
மார்க்கம் கண்ட தமிழர்கள்—பின்னே
விதந்து பிறரின் மதத்தில் சென்ற,
வினைகள் மாற்றப் புறப்பட்டேன்'

என நாவலிக்கிறார் பெருங்கவிக்கோ.

அறமும் மறமும் ஆன்ற ஒழுக்கமும், உண்மை ஆக்க நெறியும், ஆண் பெண் சமமும், திறமுடன் சங்க காலத்தின் முன்பே தமிழர் தேர்ந்த வாழ்க்கை முறையாகும் என்று கவிஞர் அறிவுறுத்துகிறார்.

'இம்மதம் அம்மதம் எம்மதம் சேரினும்—நம்மின்
இனம்தமிழ் மொழிதமிழ் என்றே பாடு!
தம்மதம் பெரிதெனச் சாற்றிப் பிரியாதே—தமிழா
தமிழால் ஒன்றுசேர் தமிழினம் கூடு'

என்றும் பெருங்கவிக்கோ கூறுகிறார்.

மனித நேயக் கருத்தையும் எடுத்துக்கூற அவர் தவறவில்லை. நடமாடும் மனிதர்களே நம் கோயில் என்று சொன்ன சித்தர்களின் சிந்தனை வீச்சு பெருங்கவிக்கோ கவிதைகளிலும் பொறி தெறிக்கிறது.

'மதமென்ன சாதியென்ன இந்த நாட்டில்
மார்க்கங்கள் தான் என்ன? உலகில் உள்ள
அதர்மங்கள் தானொழிய வேண்டுமென்றால்
அறமொன்றால் தானியலும் இதனை விட்டு
விதவிதமாய்ப் பூசனைகள் செய்வோரெல்லாம்
வீட்டுக்கு விளக்கேற்ற மறந்தார் நல்ல
பதமெல்லாம் பார்க்கின்ற மோட்ச மெல்லாம்
பக்தர்களே பசித்தோரின் வயிறொன் றேதான்!

வீணாக அலைகின்றார் துறவி என்றே
வீம்புக்கே நடக்கின்றார் அந்தோ வெட்கம்!
சாணாக ஒடுங்கிவிட நினைத்தே அன்புச்
சம்சாரம் வெறுக்கின்றர் இவைகள்எல்லாம்
பூணாத சடங்கன்றோ ஆசை தன்னைப்
பூட்டுகின்ற திறவுகோல் நீர் தவறவிட்டு
ஏனிங்கே மயங்குகிறீர் இனியே னும்நீர்
ஏழையர்க்குத் தொண்டுசெய முன்வாருங்கள்"

என்ற நல்ல கருத்தை வலியுறுத்துகிறார்.

மனிதர்கள் நல்வாழ்வு பெறுவதற்கு வகை செய்யக் கூடிய உயர் எண்ணங்களைச் சொன்ன வள்ளலாரின் கருத்துக்கள் பெருங்கவிக்கோவை ஈர்த்துள்ளது. அவற்றை அவர் பரிந்துரை செய்யும் தன்மை போற்றுதலுக்கு உரியது.

'மதம்வேண்டாம் சாதிவேண்டாம் மார்க்கம்ஒன்றே
மனிதருக்குள் உலகத்தில் இருந்தால்போதும்
கதகதப்பாய்க் குளிர்காய அமைத்தார் கீழ்மைக்
கயவர்கள்தாம் சாதிமதச் சமயச் சண்டை!

பதமில்லை பிரிவில்லை பிரிவால் வையப்
பட்டினிகள் ஒழியவில்லை! பின்ஏன் இந்த
இதமில்லா மதப்பிரிவு எண்ணிப் பாரீர்
எல்லாரும் 'மனிதமதம்' உரிமை ஒன்றே!

என்றெல்லாம் வியத்தகுநல் கருத்தைச் சொன்ன
ஈரமிகு வள்ளலாரின் கொள்கை பற்றி
நன்றியுடன் இவ்வையம் சென்றிருந்தால்
நாசங்கள் நலிவேது? பூமிதன்னில்
கொன்றொழிக்கும் கொடுமைகளும் ஏதாம்! ஐயா!'

வள்ளலாரை வியந்து பெருங்கவிக்கோ பாடியுள்ள கவிதைகள் இனிமையானவை. உண்மைகளை உணர்வோட்டத்துடன் எடுத்துச் சொல்பவை.

'மதம்சாதிப் பேயாட்டம் மமதை ஆட்டம்
மார்க்கங்கள் விதவிதமாய்க் காட்டும் ஆட்டம்.
சதிஆட்டம் பித்தலாட்டம் தான்நான் என்றே
தன்னிட்டம் போலாடும் தடியாட்டங்கள்
குதிஆட்டம் போடுகின்ற நாளில் அன்பின்
கோலாட்டம் தானாடி சமர சத்தின்
மதிஆட்டம் சன்மார்க்கம் காட்டி வென்ற
வள்ளலாரைப் போலொருவர் வையம் உண்டோ?'

என்று வியந்து போற்றுகிறார். தொடர்ந்து வள்ளலாரின் சிறப்புகளைக் கூறி, செஞ்சொற்கவிதையாக சன்மார்க்க இனிமை பற்றிப் பாடுகிறார்.

"முக்கனியைப் பிழிந்த சுவைச் சாறோ எந்த
முறை ஒழுகும் மனிதர்க்கும் இனிக்கும் ஆறோ?
அக்கனியின் சாற்றில்பால் தேன்பருப்பு
அறிசுவை நெய் தெங்கிளநீர் கலந்துண்டாமலா

மக்கள்யார் உண்டாலும் இனிக்கும், ஒப்பில்
மனத்தடுப்பில் இச்சுவையைக் காய்ச்சிக்கட்டி
தக்கமுறை வரஉண்ணும் தத்துவம் போல்
சாகாத 'சன்மார்க்க' இனிமை விண்டார்!'

வள்ளலார் குறித்துக் கவிஞர் மனம் லயித்துப் பாடியுள்ள பாடல்கள் படித்துச் சுவைத்து மகிழ்ச்சியுறத் தகுந்த இனிய படையல்கள்.

அவற்றில் ஒன்று—

பொருள்விளக்கே பெரிதென்றே எண்ணித் தீய
பூரியர்கள் ஆட்டங்கள் போட்ட போது
அருள்விளக்கே மெய்யென்று துணிந்து செய்கை
அகல் விளக்கை ஏற்றியென்றும் அணையா வண்ணம்
இருள் விலக்கச் செய்ததவ ஞானி எங்கள்
ஈடில்லா வள்ளலாரின் தாள்கள் நெஞ்ச
மருள்விலக்கும் பேரமுத ஊற்றாம் என்றும்
வற்றாத சீவநதி இன்பப் பாய்ச்சல்!'

இருள் மூடும் தமிழகத்தில் அருட்கதிராய் வந்து மண்ணிலே மனிதகுலம் ஒன்றே என்று நல்மார்க்கத்தை அறிமுகம் செய்த வள்ளலாரை விதவிதமாய்ப் போற்றி இசைக்க பெருங்கவிக்கோ அலுக்கவில்லை. வேறொரு இடத்தில் வள்ளலார் பெருமையை அவர் இவ்வாறு பாடுகிறார்:

'இருட்சாதி மதத்தொழுநோய் இவ்வுலகம் முற்றும்
இவன்பெரியன் நான்பெரியன் என்பதன்றிவேறு
அருட்தன்மை எல்லோர்க்கும் காட்டுவதாய் இல்லை
அவரவர்கள் தம்பெயர்க்கே அதர்மங்கள் கண்டார்

பொருட்தன்மை பெரிதல்ல புண்ணியங்கள் அல்ல
பூமியுள்ள மனிதரெல்லாம் மதங்களாலே பிரிந்தே
மருட்தன்மை அடையாமல் சமரசத்தைக் கொண்டே
மன்பதையில் உய்வழியை வள்ளலாரே
கண்டார்!'

இன்னொரு இடத்தில் இவ்விதம் இசைத்திருக்கிறார்:

'வன்மனம் தன்னலம் பல்கிடும் மதங்களை
வாய்மையென்றே நம்பியே
மனிதர்கள் தமக்குள்ளே வேற்றுமை கற்பித்தே
வழக்காடும் தன்மை யன்றோ?

உன்மதம் என்மதம் ஒன்றாகி மனிதர்கள்
ஒருமதம் சமரச மாகி
உள்ளொளி வள்ளலார் உயிராசை வென்றால்
உலகமே ஓர்குடும்பம் அன்றோ?'

பெருங்கவிக்கோ தனக்குச் சரி என்று படுவதை—தனது உள்ளத்தில் தோன்றும் உண்மையை—அப்படி அப்படியே வெளிப்படுத்தும் இயல்பு பெற்றிருக்கிறார்.

'ஆண்ட வன்தாள் போற்றுவதில்
ஆன்றோரே மகிமையிலை,
பூண்ட இறைமைப் பணியாம்
புரிசேவை செய்பவர்கள்

நற்பணி தொழ யானும்
நாணவில்லை! இந்நாட்டில்
புற்றரவுக் கூட்டம் போல
பொல்லாத செய்துவிட்டு

இறைவனின் பெயராலே
ஏமாற்றம் நடத்துகின்றார்
குறைமதியர் இவரைவிடக்
கோடிமேல் தொண்டரென்பேன்!'

இவ்வாறெல்லாம் அவர் கருத்துக்களை ஒளிபரப்புவதனால் அவர் ஒரு நாத்திகர் என்று பலர் எண்ண இடம் ஏற்படுகிறது.

கவிஞர் ஆணித்தரமாக அறிவிக்கிறார்—

'ஆத்திகம் என்பதும் நாத்திகம் என்பதும்
அவரவர் மனப்போக்கு
தீத்திறம் இரண்டிலும் உண்டென்றே உண்மை
தெளிவதே நன்னோக்கு!

மதங்கள் பலவாறு மல்கியதே வையம்
மடமையை மாய்த்ததுவா?
விதவிதமாகவே வேதங்கள் காட்டலால்
வேதனை மாறியதா?

உதவிகள் நன்மை உண்மையென்பதும்
ஒருமத உடைமையல்ல
அதர்மமும் தர்மமும் ஆத்திகம் நாத்திகம்
அறைவதில் மட்டுமில்லை.'

பண்பு நலன்களாலேயே ஒருவன் நன்மணி மனிதன் ஆவான் என்றும், பழியிலா வாழ்வே பண்பின் ஒழுக்கமே பயன்தரு உயர்வாகும் என்றும் அவர் உறுதியாய் கூறுகிறார்.

எது தெய்வம் என்று கேட்டுப்பெருங்கவிக்கோ தெளிவு படுத்தியுள்ள கவிதைகள் அவரது உளப்பண்பை, நல்நோக்கை, மனவிரிவைப் புலப்படுத்துகின்றன.

'தீதில்லா நெறியினிலே தெய்வம் உண்டு!
திக்கெல்லாம் உறவாடும் இயற்கைத் தாயாள்
மோதிவரும் அழகுருவில் தெய்வம் உண்டு!
முதிர்கின்ற அனுபவத்தில் தெய்வம் உண்டு!
யாதினிலும் இனியதெய்வம் நம்மை ஆக்கும்
நற்தெய்வம் கற்பிக்கும் ஆசானேதான்!

உழைக்கின்ற கரங்களிலே தெய்வம் உண்டு!
உண்மையிலே நன்மையிலே தெய்வம் உண்டு
விழைக்கின்ற தொண்டினிலே தெய்வம் உண்டு
வெற்றியிலே நற்தெய்வம் உண்டு! ஏழை
அழைக்கின்ற குரலினிலே தெய்வம் உண்டு!
அன்னவர்கள் துயர்தீர்ப்பான் உண்மைத்
தெய்வம்!
தழைக்கின்ற கொழுந்துறை வாழ் மக்கள் தம்மின்
தமிழ்த் தொண்டில் தனித் தெய்வம்
என்றும உண்டு
தென்னையிளங் கீற்றினிலே தெய்வம் காண்பேன்!
சிறுமையிலா அருமையிலே தெய்வம்
காண்பேன்!
புன்னை மரச் சோலையிலே பூக்கும் வையப்
பொழிலெல்லாம் தெய்வத்தைக் காண்பேன்!
நன்றாய்
என்னைநான் எண்ணித்தான் பார்க்கும் போதென்
இதயத்தில் தெய்வத்தைக் காண்பேன்! ஒப்பில்
அன்னைமொழி எழுத்தில் நல் எழுது கோலில்
அகிலம் உள் அனைத்திலுமே தெய்வம்
காண்பேன்?'

உண்மையான ஆன்ம வழி நடை பயிலும் அருளாளர் கவிஞர் சேதுராமன் என்பதை அவரது கவிதைகள் பறை சாற்றுகின்றன. தன்னைப் பற்றி அவரே கூறியிருப்பது கவனத்துக்குரியது:

'போதை இல்லாத
நீதிக் கவிஞன் நான்
பாதை என்பாதை
பண்பான சீர்பாதை!
கைக்கூலி கட்குக்
கைகட்டி வாய்பொத்திப்
பைக்கூலி பெறுகின்ற
பாதையென் பாதையல்ல.

மெய்க்கூலி பெறுதற்காய்
மேன்மையாம் ஆன்மீகத்
தெய்வத்தாள் பற்றித்
திசையெல்லாம் தமிழ்வளர்ப்பேன்.'

# 7. அறச் சீற்றமும் புதுமை நோக்கும்

துறை தோறும் மண்டிக் கிடக்கின்ற சிறுமைகளும் சீரழிவுகளும் பெருங்கவிக்கோவின் உள்ளத்தை உறுத்துகின்றன. அவரைக் கோபம் கொள்ளச் செய்கின்றன. ஐயோ, நம் நாடும் நம் மக்களும் இப்படி இருக்கிறார்களே என்ற வேதனையால் எழும் அறச்சீற்றம் அவர் கவிதைகளில் சூடாகப் பரவிப் பாய்வதை பல இடங்களில் காண முடிகிறது.

'நமக்குள் தமிழர்க்குள் நாம் காணும்
பெருங்குறை என்?
நமக்குள் நாமே நாவளர்த்து நயம் பேசி
கருத்து வேறு பாடுகளைக் கடை விரித்து,
நாசத்தை
விருத்தி செய்வதன்றி வேறுவினை கண்ட
தென்ன?'

என்று அவர் கேட்கிறார்.

நாட்டில் எங்கெங்கும் காணப்படுகிற முரண்பாடுகளை நெஞ்சில் பதியும்படி அவர் எடுத்துச் சொல்கிறார்-

'ஊருக் குழைப்பதாய்க் கூறுகின்றார்—பொது
உண்டியலில் கையை வைக்கின்றார்—அந்தோ
யாருக்கோ உபதேசம் கூறுகின்றார்—சொந்த
தம் வாழ்வில் ஊழலைச் சேர்க்கின்றார்—அட

பேருக்கோ திரிந்து அலைகின்றார்—செத்த
பிணம், போல் வயிறை வளர்க்கின்றார்—
தேருக்கச் சாணியைப் பிடுங்கிவிட்டு—ஐயோ
தெருவில் ஊர் உலா வருகின்றார்:

கூட்டம் கூட்டி முழக்குகின்றார்—பின்னே
கும்மாளம் போட்டுக்கேடு செய்வார்—பேச்சில்
தேட்டம் எல்லார்க்கும் பொது என்பர்—வாழ்வில்
சேர்ப்பதனைத்தும் தனக்கே என்பார்—பசி
வாட்டம் போக்கும் வழி அறிந்தும்—அந்த
வாசல் தன்னை அடைத்து விட்டே
ஏட்டில் எழுதிக் கிழிப்போம் என்பார்—நெஞ்சில்
எத்தனை எத்தனை நிலைத்தவைகள்!'

எழுத்தாளர் என்றும், எழுத்தினால் பாரைத் திருத்திடுவேன் என்று பெரும் பேச்சு பேசி அகந்தை வளர்க்கும் பேனா மன்னர்கள் பற்றிய உண்மையை கவிஞர் சித்தரிக்கிறார்.

'எழுத்தால் திருத்துவேன் என்று வந்தான்
—தன்னின்
எழுதுகோலில் நஞ்சை வைத்தான்—வாயில்
கொழுத்த திமிராம் வஞ்சம் வைத்தான்—நெஞ்சில்
கோடிப் பாம்பைக் கொஞ்ச வைத்தான்—அட
பழுத்த எட்டி மரம் போலக்—கனிந்து
பாரை ஏய்த்துப் பிழைத்து விட்டு—அட
அழுத்தமாக நான் எழுத்து வேந்தன் என—
அந்தோ
அஞ்சாமல் கூறி நிமிர்ந்து நின்றான்.'

திமைகள் வளர்த்து, மோசத் தீமையே முன்னேறும் படி செய்வோர் பற்றி வருத்தத்துடன் அவர் குறிப்பிடுகிறார்

'வேசித் தனத்தை முதலாய் வைத்தார்— நாட்டில
வீறு கொண்டே எழுந்து விட்டார்— நன்மை
பேசி வாயால் மழுப்புகின்றார்—அந்தோ
பேடிமைத் தீமை வளர்த்து விட்டார்—விந்தை
மோசத் தீமையே முன்னேறும்—என்ன
... ... ...யானறியேன்!'

இன்று இங்கு, நம் நாட்டில் உள்ள நிலைகள் பற்றி பெருங்கவிக்கோ நிறையவே கருத்துக்கள் சொல்லியிருக்கிறார் தன் கவிதைகளில்.

'ஊன் வளர்ப்பார் சிலபோர் உடல்வளர்ப்பார்
பலபோ

நான், எனதென்கின்ற நாசச் செருக்கினிலே
கூனாகிக் கிடக்கின்ற குருடரும் பலருண்டு
நீனா நானா வென்று நித்தமும் வீண்பேச்சு
தங்கள் பணிக்கூடம் தான்பேசி வம்பளந்து
திங்கள் ஆண்டுகளைத் தேய்ப்பவர் பலருண்டு
பொழுதெல்லாம் பிறர்பற்றி புறம்பேசி புறம் பேசி
கழுதைகள் போலக் கண்டதை மேய்ந்துவிட்டு
ஊர்சுற்றும் கூட்டமும் உண்டு படித்தோரில் !
சீர்கொண்ட தன் பணியில் சிறப்புற மாட்டாமல்
அரசுப் பணிகளிலே அகம் தோய்ந்து உழைக்காம
தரமின்றிச் செல்லும் தடியரும் பலருண்டு
உரிமைக்குக் குரல் கொடுத்து கடமைக்குச்
சாவுமண

விரித்தடிக்கும் கூட்டமும் மேதினியில் இன்றுண்டு
தானும் வாழாமல் தமிழ்நாடும் வாழாமல்
பேனுற்ற தலைபோலப் பிதற்றித் திரிவோரால்
யாருக்குப் பயனாம் நல்லோரே எண்ணுங்கள்'

என்று சிந்தித்துப் பார்க்கத் தூண்டுகிறார் பெருங் கவிக்கோ.

நாடு முன்னேறவும் நாட்டு மக்கள் நலமுறவும் நாம் செய்ய வேண்டியது என்ன? அதையும் கவிஞர் அங்கங்கே வலியுறுத்தத் தவறவில்லை.

தொண்டுக்கு முதலிடம் தருவோம்—எந்தத்
துறையிலும் நன்மை கொணர்வோம்
பண்டுநம் பெருமைகள் அறிவோம்—அருமைப்
பாடுகொள் வினைகளைத் தெரிவோம்
மண்டைக் கர்வம் குறைப்போம்—கெட்ட
வஞ்சகர் வாசலை அடைப்போம்!
தண்டச் சோறின்றி உழைப்போம்—இதற்கே
சாதனைச் சிந்தனை ஒன்றே என்போம்.''

நாடு கெட்டு இன்று நலமின்றிப் போனதில் நம் எல்லோருக்குமே பங்கு உண்டு என்றும் அவர் அறிவுறுத்துகிறார். மனசில் தைக்கும் படி சுட்டுகிறார்—

'நச்சினை விதைத்திட்டே நற்பழம் வேண்டினால்
நாடிக் கைவந்து சேருமோ?
நன்றியைக் கொன்றிட்டே ஒன்றாக விரும்பினால்
நம்பியது கை கூடுமோ?

முச்சந்தி நின்று தான் முழங்கியே பேசிப்பின்
முன்னுக்குப் பின் முரணாய்
முறை கெட்டு நடப்பவர் கறைபட்ட வாழ்வினால்
முன்னேற்றம் இங்கு வருமோ?
பச்சோந்தியாகவே பல வண்ணம் காட்டாத
பாதைகள் புதுமை செய்வோம்
பாரத அன்னையின் ஒன்றான சிந்தனை
பயனாக்கி நாமும் வெல்வோம்'

ஊருக்கு உழைப்பதாய்க் கூறியே, நல்ல உத்தமர் வயிற்றில் அடிக்காதே. என்றும், பேருக்கும் புகழுக்கும் அலையாதோ வஞ்சப் பித்தலாட்டங்கள் நினையாதே என்றும், தமிழின் பெயர் சொல்லி வியாபாரம் தவறான முறையில் செய்யாதே—உமியாய் நல்லவரை எண்ணாதே, கெட்ட உலுத்தத் தனம் பண்ணாதே என்றும் அவர் எச்சரிக்கிறார்.

'அறந்தவறாமல் வாழ்ந்தால்
அகத்தினிய வலிமை ஓங்கும்
திறந்தவறாமல் வாழ்ந்தால்
செம்மைசால் நலங்கள் தேங்கும்
சிறந்தபேர் பணிகள் செய்தால்
செய்தவக் கனிபழுக்கும்
உறவெனக் கவிதை கண்டால்
உளமூன்றும் வாழ்க்கை கூடும்!'

மனிதர்களுக்குள் காணப்படும் மாறுபாடுகள் பற்றியும், அவை நீங்குவதற்கான வழிகள் குறித்தும் பெருங்கவிக்கோ சிந்தனைகள் வளர்த்துள்ளார்.

'மன்பதை அல்லலில் மனவேறு பாட்டினில்
மதி கெடத் துடித்தலும் ஏன்? ஏன்?
மனிதர்கள் மனிதர்க்குள் மாவேறு பாடுகள்
மல்கிடப் பிழிந்ததும் ஏன்? ஏன்?

துன்பமும் துயரமும் மாந்தர் சுயநலமும்
தோளினில் ஏறிய(து) ஏன்? ஏன்?
துரோகமும் வஞ்சமும் பஞ்சமும் வதைத்திடத்
துன்மார்க்கம் ஓங்கலும் ஏன்? ஏன்?

வன்மனம் தன்னலம் பல்கிடும் மதங்களை
வாய்மை யென்றே நம்பியே
மனிதர்கள் தமக்குள்ளே வேற்றுமை கற்பித்தே
வழக்காடும் தன்மை யன்றோ?'

உன் மதம் என் மதம் என்று பேதங்கள் வளர்க்காமல் எல்லோரும் ஒன்றாகி, மனிதர்கள் அனைவரும் சமம் என்ற உணர்வோடு ஒரு மதம் சமரசமாகி, உள்ளொளி பெற்ற வள்ளலார் காட்டிய வழியில் சென்றால் ஒரே உலகமாய் ஒரு குடும்பம் போல், வாழலாமே என்று கவிஞர் கருதுகிறார்.

பெருங்கவிக்கோவின் சீற்றத்துக்கு ஒரு எடுத்துக் காட்டாக இவற்றைக் குறிக்கலாம்—

'வீரம் எங்கடா விவேகம் எங்கடா மானமின்றிச்
சோரம் போகிறாய் தூ! தூ! தூ! நீயொரு
சொரணையிலா
பேரம் பேசிடும் பேடித் தமிழனே! உன்னையும் ஓர்
சேர சோழநற் பாண்டிய மறத்தியா பெற்றிட்டாள்?

கட்சிப் பெயராலே வெட்டித்தனத் திமிர் வீம்பாலே
குட்டிச் சுவராகக் கெட்டுப் போவதில் பயனென்ன?
பெட்டிப் பாம்பு போல் முட்டிப்போட்டுநீ தில்லியிலே
மட்டியான பின் கிட்டே வந்து ஏன் கதைக்கிறாய்?'

என்று சாடுகிறார்,

தமிழரின் தற்கால நிலை கவிஞரின் கோபத்தை அதிகப்படுத்தக் கூடியதாகவே இருக்கிறது.

'விரிந்த சிந்தையும் வெற்றித் திருநோக்கும்
புரிந்த பேரறமும் புடம்போட்ட கொள்கைகளும்
ஞாலத்தில் ஓங்க நனிபெற்ற நம்மினத்தார்
ஏலத்துப் பொருளாகி எடுப்பார் கைப்பிள்ளையாகி
தமிழ்ப் பண் பாட்டுத் தலைமையைத் தான்மறந்து
இமிழ்கடல் சூழ்வையம் இறுமாப்பாய்ப் படை
யெடுத்த
அவனவனுக்கேஆம் ஆள்தோதாய் ஆளாகி
புவனத்தில் கேவலப் பொழுதுபோக்குக் கடிமையாய்
மாற்றார் தமக்கு மருக்கொழுந்து வாடையாய்
கூற்றுவன் போல் கொடியர் கொடுமைக்குக்
காவலாய்
வாயடங்கி வயிற்றை வளர்த்தால் போதுமெனும்
மாயத்தில் கட்டுண்டார்! மதிமறந்தார்! விதி
மறந்தார்!
இச்சைத் துரோகியர்க்குப் பாய்விரித்துப்
பயந்து ஒடுங்கியிங்கே
பிச்சைக்காரர் போல் பேயடிமை ஆகிவிட்டார்
வந்தவனெல்லாம் தமிழன் வாகான பிடரியிலே
குந்தினான் அவனை குப்புறத் தள்ளுகின்ற

அறிவின்றி அமர்ந்தார்நம் அறம்மறந்தார்
மறம்துறந்தார்!
நெறியதுவே என்று நெடிதுநாள் கழித்து விட்டார்.

வேறொரு இடத்தில், இன்றைய இழிநிலையை இவ்விதம் விவரிக்கிறார்—

'கிடைத்ததைச் சுருட்டித் தம்தம்
கிழமையே வளர்க்க எண்ணும்
உடைப்பெரும் சுயநலத்தார்
உயிர்த்தமிழ் நாட்டில் இன்றோ
நடைப்போடப் பெருகி விட்டார்
நானிலப் பொதுந லத்தை
விடைகூறி அனுப்பி விட்டார்,
விடிவெள்ளி மறைத்தார் அம்மா!

புரிந்தவர் கூட இந்நாள்
புரியாமல் நடிக்கின் றார்கள்.
சரியான கொள்கை நெஞ்சம்
தானேற்கும் கொள்கை கூறத்
தெரியாமல் அல்ல! சொன்னால்
தினக்கூலி கிடைக்கா(து) என்றே
உரிமையை அடகு வைத்தார்
உயிர்ப்பெரும் அறிஞர் இந்நாள்'

நாட்டைக் கெடுப்பவர்களில் அரசியல் வாதிகள் முக்கியமானவர்கள். மொத்தமாய் நாட்டின் மோசம் நீக்கிட அவர்கள் சித்தம் வைப்பதில்லை. அவரவர் கட்சிக்கு அமைச்சர் பதவி வேண்டும் என்பதிலேயே அவர்கள் கருத்தாக இருக்கிறார்கள். அதற்காக அவரவர் கொள்கைகளை ஒதுக்கிவிட்டு கூட்டுச் சேர்கிறார்கள்.

பகைமை வளர்த்து நாட்டுவளர்ச்சியைக்கெடுக்கிறார்கள். அரசியல்வாதிகளைநோக்கிப்பெருங்கவிக்கோகடுமையாகக் கண்டனக்குரல் கொடுக்கிறார்.

'பொய்மை போன்ற பொற்றிரு நாட்டில்
பொய்நீர்ச் சாக்கடை புகுந்திடச் செய்தீர்!
காலமெல்லாம் கட்சிகள் வளர்த்து
ஞாலம் இன்று ஓல மிடுகிறீர்!
மனச்சாட்சி கொன்று மறுபடி மறுபடி
தினச்சாட்சி பொய்மை திளைத்து மகிழ்கிறீர்!
தன்னலம் இன்றி இந்நாடு உயர
என்ன செய்தீர்? எல்லாம் சுயநல
வேட்டைக் காடாய் வேடிக்கை செய்தீர்!
ஆட்டுக்(கு) ஓநாய் காவலா? தீய
பேயை மணந்த பெரும்பிழை யாளரே,
நாயின் வால்நீர், நன்கு நிமிர்த்திட
யாரால் முடியும்?'

என்று பாடுகிறார்.

மக்களின் நிலைமையும் அவருக்கு மனக்கசப்பு அளிக்கிறது. விளக்கின் ஒளியை விரும்பிச் சுற்றும் விட்டில் பூச்சிகள் அவர்கள், அப்போதைக்கப்போது யார் சுவை தரினும் மயங்கிச் சுகிக்கும் மூங்கை உயிர்கள்.

'பெரும்பிணி கொண்டலை பேதைகள், என்றும்
திருந்தா மல்வாழ் செயல்மறை கதவுகள்
வருந்தி உழையாதே வளங்கள் தேடிடும்
பொருந்தா வாழ்க்கைப் போலிகள் எவரும்
தடிஎடுத் திட்டால் சத்தமில் லாத
படிவாழத் தெரிந்த பதடிகள்!'

சிறிதளவு உரிமை கிடைத்தால், விடைத்துக் கத்தும் இயல்பினர், அடிமைப்படுத்தினால் அடங்கி வாழும் பண்பினர். தடம் புரண்டலையும் தறுதலைக் குட்டிகள் என்றெல்லாம் வர்ணிக்கிறார் கவிஞர். மக்கள் மக்களாய் வாழ மக்களே தக்க தீர்ப்பைத் தருவரோ என்றும் எண்ணுகிறார்.

எழுத்தாளர்கள் பற்றி மீண்டும் சொல் சாட்டை சொடுக்குகிறார் பெருங்கவிக்கோ.

'ஒன்று வளர்ப்பதே வாழ்நாளெல்லாம்
பயனும் நெறியாய் பாரில் வாழ்பவர்
உடலை ஒருவர்க்கு உரிமை செய்தல் போல்
அ[illegible]வேல் எழுத்தை அடிமை செய்பவர்
ஆளும் வர்க்க ஆட்டம் தோதாய்
நாளும் பாடும் நலிந்த பாடகர்!
சூழ்நிலைத் தோதாய் சுதி இசை கூட்டித்
தாழ்ந்து காணும் சங்கீத வித்துவான்கள்
சமுதாயப் புண்ணை தரம் கீறி ஆற்றும்
அமரத்துவத்தை அறியாக் கூலிகள்
சமயம் வந்தால் தன்னின் மேலேயே
இமயப் பழியை எடுத்தே எறிந்து
காட்டிக் கொடுக்கும் கயமை ஊற்றுகள்
வாட்டும் வறுமை மாற்றா வழியினர்'

இவர்களிடையிலும் ஒப்பிலா அறிஞர், உயர்ந்த சான்றோர் பற்பலர் இருக்கிறார்கள். இவர்களோ சிற்பி கையில் செயல்படா உளிபோல் வாழ்கிறவர்கள் என்று குறிப்பிடுகிறார் கவிஞர். இவர்கள் வாயில்லாப் பூச்சிகள் என்றும், தாழும் நிலையே தான் வந்த போலவும், வாயில் இல்லா வீட்டினைப் போலவும் தாயகத்தில் இருக்கும் மாயப் புலிகள் என்றும் கூறுகிறார்.

'அஞ்சி அஞ்சி அயர்ந்து நெகிழ்ந்து
பஞ்சைபோல் வாழும் பண்பு வேந்தர்கள்'

என்றும் சொல்லி, இவர் பெரும் அறிவை இந்நாடுஇயக்கினால், தவம் வென்றது போல்தான் வரும் நலமே' என்று அபிப்பிராயம் தெரிவிக்கிறார்.

பொதுவாக, மேடைமீது நின்று நீட்டி முழக்கிப் பெரும் பேச்சுகள் பேசிக் களிப்பவர்கள்தான் மிகுதியாக இருக்கிறார்கள். அந்தப் பேச்சைக் கேட்பவர்களோ கை தட்டி மகிழ்கிறார்கள். அந்தக்கரவொலிப் பேச்சாளர்களை கிறக்கத்தில் ஆழ்த்துகிறது. அவர்கள் செயல்திறன் காட்டுவதில்லை. இந்த நிலையை பெருங்கவிக்கோவின் பாட்டு சூடாகச் சுட்டுகிறது.

'நின்று தலைநிமிர்த்தி நெடும் பேச்சுப் பேசிவிட்டுக்
கூட்டத்தின் கரவோசைச் குளிர்ச்சியிலே
மெய்மறந்து
நீட்டிப் படுத்ததலன்றி நேர்மையாய் யான் என்று
திறமை காட்டிச் செயலாக்கம் செய்தவர் யார்?'

'சிறுமைத் தனத்தில் திறமை கொன்று சீரழிந்தேகுவதோ? வறுமை வாழ்வைப் பெரிதாய்க் கண்டு மனம் இழப்பதுவோ?' என்று கேட்கும் கவிஞர், மனிதனாக நடப்பது எவ்விதம் என்று கூறுவது சிந்திக்கத் தூண்டுவதாகும்.

மனிதன் என்பது பொதுச் சொல் எனினும்
மலரும் முகங்கள் பலவிதம்—இந்த
தனித்தனி மனிதர் நடக்கும் வழிகளும்
தனித் தனியாகப் பலவிதம்!

போனவன் போக்கில் போவேன் என்பது
புரியாத் தனத்தின் வித்தாகும்—நெஞ்ச
மானத் தன்மை வகுக்கும் வழிமுறை
மதித்து நடப்பதே சொத்தாகும்?

*அறிஞரைப் போற்றி, அவர்களை வழிகாட்டியாக ஏற்று, அவர்கள் காட்டிய பாதையில் நடக்க வேண்டும் என்று பொதுவாக சொல்லப் படுவது உண்டு. பெருங்கவிக்கோவின் புதிய பார்வை அதை ஏற்றுக் கொள்ளச் சித்தமாக இல்லை. அதற்கான காரணத்தை அவர் தெளிவாகச் சொல்லுகிறார்.*

முன்னே தோன்றிய அறிஞனைப் போற்றினும்
முழு அடிமை நீ ஆகாதே—அடடே
பின்னே அவனை நீ வெல்வது உண்மை
பேரறிவாளன் நீ மறவாதே

நெஞ்சம் இருப்பதோ கையளவில் தான்
நினைவோ உலகை வெல்லும்—எந்த
வஞ்சம் வரினும் வாழ்வோ தாழ்வோ
வாகை உறுதி கொள்ளும்?

*மற்றவர் தீயகுற்றம் தனை மிதி! மனிதத் தன்மை ஊட்டு! இவ்வாறு மனசை வீறுகொள்ளும்படி தூண்டும் கவிஞர்,*

ஊட்டி வளர்த்தவர் காட்டிக் கொடுப்பாரேல்
உந்திப் பழித் தொதுக்கு!—மனமே
நாட்டில் பிழைக்கத் தெரிந்த மனிதரவர்
நம்பிப்பின் செல்லாதே!'

*என்று விழிப்புணர்வு ஊட்டுகிறார். சோர்வு அடையாத படி உற்சாகமாக உழைக்க வேண்டும் என்றும் அவர் ஊக்கப்படுத்துகிறார்.*

ஏற்ற அறக்கொள்கை எவரும் மதிக்காமல்
இன்னல் தருவதாயிருந்தால்—மனமே
போற்றலிலாத தென்றெண்ணிச் சோராதே நீ
பொங்கி நல முடிப்பாய்!
மான வாழ்விலொரு மாசு புகுந்திடில்
வாய்மை நெருப்பாலே—மனமே
ஆனமுறையில் பொசுக்கி முன்னேறு நீ
ஆக்கம் தனைத் தேடு!

என்றும் நல்வழி புகட்டுகிறார்.

உலகத்தில், அன்றாட நடைமுறையில், காணப்படுகிற முரண்பாடுகள் கவிஞர் உள்ளத்தில் வதைக்கின்றன. அந்த உறுத்தல் அவரது உணர்வில் சூடேற்றுகிறது. ஆத்திரமாகச் சொற்கள் கொதித்து வெடிக்கின்றன.

இதோ ஒரு எடுத்துக்காட்டு—

உண்ட சோறு செரிக்காது திருடர்க் கெல்லாம்
உபசரணை செய்கின்றீர் உண்டிச் சாலை
கொண்டு கூட்டிச் செல்கின்றீர் வாங்கிப்போட்டுக்
குடல் நிரப்பி ஆனந்தம் அடைகின்றோரே
அந்தோ
திண்டாடும் ஏழைமகன் விடுதி வாசல்
தெருவோரம் நின்றானே கவனித் தீரா?
முண்டங்காள் உம் கண் என்ன குருடா? அந்த
முழுப்பசியுள் மகன்பசியை எண்ணி னீரா?

நாட்டின் நிலைமையை நினைத்துப் பெருங்கவிக்கோ பாடியுள்ள பாடல்கள் சுடுசரங்களாகவே பாய்கின்றன. தன் கருத்துக்களை வெளிப்படையாக முழக்கமிடுவதில் அவர் எவருக்கும் அஞ்சுவதேயில்லை. இன்றைய நிலையைச் சுட்டிக்காட்டும் பாடல்கள் சில இதற்கு சான்று கூறும்—

பெருங்கொள்ளைக் காரரெல்லாம் இன்று நாட்டின்
பெருஞ்செல்வன் ஆகிவிட்டார்! இன்பே
இல்லாக்
கருங்கல்போல் நெஞ்சுடையா ரெல்லாம் இன்று
கருணைமிகு வள்ளலெனப் பெயரெ டுத்தார்!
அருஞ்செயலைச் செய்கின்றோன் சாக, ஒன்றும்
அறியாத அயோக்கியனோ உயர்ந்து
வாழ்ந்தான்!
துரும்பாக இவரையெலாம் மதிக்கும் நாளே
தொழத் தகுநல் சான்றோர்க்கு விழாநாள்
ஆகும்

... ... ... ... ஏதுசெய்தும்
தம்படிகள் சுருட்டுவதே நோக்கம் வைய
அரங்கத்தில் உழைப்போர்கள் வாட, உண்மை
அயராது போற்றுபவர் ஓட, தீய
கரங்கொண்ட கயவர்கள் வலிமை கொண்டார்!
கவினுலகை ஆள்கின்றார் விடிவுண்டாமோ?
சந்தையிலே விற்கின்ற பொருளாய் நம்மைச்
சனநாயகப் பெயரால் வாட்டி ஆட்டு
மந்தையென மேய்க்கின்றார்! அறிஞரெல்லாம்
வால்பிடித்து வாழ்கின்றார் ஆள்வோர் தம்மை!
சிந்தனையைக் கூர்மை செயவோர் இலையா?
உண்டு!
தினக்கூலி வாங்கியவர் ஊமையானார்!
நிந்தனைகள் கூறுவதாய் நினைக்கக வேண்டாம்!
நிலையீது! இதை மாற்ற என்பா போர்வாள்!

எல்லாம் இறைவன் செயல் என்று சொல்லிக் கொண்டிருப்பது மக்களின் இயல்பாக இருக்கிறது. இந்த

நிலை கவிஞருக்குச் சீற்றம் தருகிறது. அவருடைய சிந்தனைச் சீற்றம் மூடிமறைக்காத சொற்களாகச் சாய்ந்து புரள்கிறது. அவற்றில் பெருங்கவிக்கோவின் முற்போக்கு எண்ணம் கனல்கிறது.

'வஞ்சச் செயலால் வாழும் சிறுமதியர்
தஞ்சமாய் எல்லாம் தனி இறைவன்
செயலென்பார்!

கூடிக் கெடுக்கும் குணங் கெட்டார் கூடத்தான்
நாடியே எல்லாம் நனி இறைவன் செயலென்பான்
பேடிக்குணத்தார் பித்தலாட்டக் கொடியவர்கள்
வாடிக்கை யாயெல்லாம் வாழிறைவன் செய
லென்பார்!

அடுத்துக் கெடுப்பவர்கள், அடங்காது நடப்பவர்கள்
படுத்துக் கிடந்தே பால்தேனும் பழரசமும்
விதவிதமாய் உண்பவரும வெல் இறைவன்
செயலென்பான்

கூனிக் குறுகிக் கும்பி வயிற்றுக்காக
ஆனமட்டும் போராடி அயர்ந்தாரும் கூடத்தான்
எல்லாம் இறைவன் இனிய செயல் என்கின்றான்!
குடிப்பதற்குக் கூழ்கூடக் கும்பிக்கு இல்லாமல்
வெடித்துக் குமுறுகின்ற வீரன் ஏழைமகன்
துடிக்கும் பொழுதினிலும் தூயஇறை செய
லென்பான்

படித்த படிப்பும் பாடமெலாம் ஈதொன்றே!
கட்டழகி இன்பம் கனியழகி நஞ்செய்யிலே
நட்டு உழைக்கும் நனியழகி நம்நாட்டில்
உடுத்துதற்கும் கூட ஓராடை நூலாடை
எடுக்க முடியாமல் ஏழ்மையிலே வாடுகின்றாள்

எல்லாம் இறைவன் செயலென்றே! ஆனாலும்
வல்ல செருக்குடைய வனிதை மாடியிலே
உல்லாச மாயிருக்கும் ஓரத்துச் சன்னலுக்கும்
சில்லாடைப் பட்டாலே திரையிட்டு வாழ்கின்றாள்!
இவர்களும் கூடத்தான் இறைவன் செயலென்பார்!
தவமும் பாவமும் சரிசமமா சிந்தியுங்கள்!
என்ன கொடுமை? இழிவான மடமையிது!'

வள்ளுவர் வடித்த அமைச்சரின் வகை நெறி பற்றிப் பேசவந்த பெருங்கவிக்கோ இற்றைநாள். அமைச்சர்கள் குறித்து சிந்தனைப் பொறிகளைக் கவிதையில் சிதறி யிருக்கிறார். இயல்பைக் காட்டும் படப்பிடிப்பு அவ் வரிகள். கவிஞர் பாடுகிறார்.

அமைச்சர்தமை நினைத்தால் அடிவயிற்றில்
போராட்டம்
இமைப் பொழுதும் சோராது ஏற்ற பதவியினைக்
காப்பாற்ற வேண்டுமெனும் கருத்தால் திறக்காத
தாழ்ப்பால்தனைப் போட்டுச் சதுராடி
வாழ்கின்றார்!
சமுதாயச் சாக்கடையில் தன் பதவிக் கப்பலினை
அமுதாகச் செலுத்தி ஆலவட்டம் போடுகின்றார்!
இல்லாதான் தன்னை எப்பொழுதும் வாய்வைத்துச்
செல்லாக் காசாக்கிச் செகப்புரட்சி செய்கின்றார்!
தூங்காமல் தூங்கிச் சுகம் பெற்றுத் தொழிலாளர்
ஏங்கும் நிலைவளர்த்து எத்திலே பிழைக்கின்றார்!
உழவர் பெருங்குடியை ஊஞ்சலாய்ப் பயன்படுத்தி
அழகாக ஆடி ஆர்ப்பரித்து வாழ்கின்றார்!
வாயடியால் கையடியால் வருகின்ற பொய்யடியால்
போயடித்து வெற்றிப் புன்னகையில் மிதக்கின்றார்!

தாமாளும் தகுதியும் தகுதியால் ஒழுக்கமும்
தூமணி போல் உள்ளமும் தொண்டுத் திருச்செயலும்
என்னவென்றே தெரியாத எத்தனையோ
அமைச்சர்களை
முன்பு மிகக் கண்டோம்! மூன்றிலொன்றை
இன்று கண்டோம்!
கண்கெட்டான் சூரியனைக் கண்டு வணங்குமா
போல்
ரெண்டுங் கெட்டாரெல்லாம் நீநிலத்தில்
அமைச்சரின்று!
கட்சியெனும் முற்றத்தில் காலத்தின் இரதத்தினிலே
தட்டிப் பறித்ததுதான் சார்அமைச்சர்
பதவிகளாம்!'

*படித்தவர்களின் மோசமான போக்குகள் குறித்து பெருங்கவிக்கோ பல இடங்களில் சொற்சாட்டை சொடுக்கியிருக்கிறார். சொல் ஈட்டியாக அவர் வீசியுள்ள சில கவிதைகள் படித்துச் சுவைக்கப்பட வேண்டியவையாகும்.*

'பாலல்ல வெளுத்த தெல்லாம்! உண்டுடுத்திப்
பவனிவரு வோரெல்லாம் மனிதரல்ல
ஆலல்ல மரங்களெல்லாம்! அதனைப்போல
அருங்கல்வி கற்றபுகழ் மாந்த ரெல்லாம்
சாலபெரும் நல்லோரும் அல்ல! பல்லோர்
சரியான முழுமூடக் கயவராகி
ஏலமிடு பொருள்போலே ஆனார் இன்று!
என்னென்பேன்! இது பெரிய
வெட்கக்கேடு!

வானகமே மழை நீரைப் பருகிவிட்டு
வையத்தை வெறுப்பதுபோல், அறம்
செய்கின்ற
தானத்தான் பொருளையெலாம் ஏப்பம்விட்டுத்
தன்கையை விரிப்பது போல், நேர்மை நெஞ்ச
மானத்தை மாவீரன் துறப்பதைப் போல்,
மாகல்வி படித்தபலர் இன்று தீய
ஈனர்க்குத் துதிபாடிக் கால் பிடித்தே
எத்தர்களாய் மாறிவிட்டார் மானக்கேடு!

வயிற்றுக்காய் எவனேனும் பிச்சைகேட்டால்
வாய்பொத்திக் கைகட்டித் தன்கழுத்தில்
கயிற்றினால் சுருக்கினையே போட்டுக் கொள்ளும்
கண்மூடிக் குருடரெனக் கற்றோர் ஆனார்!
உயிர்போன்ற தம் மொழியை, தம்மினத்தை
ஒருபோதும் எண்ணார்கள்!'

தற்கால நிலைமை கவிஞரைக்கோபத்தால் கொதிக்கச் செய்கிறது. அதனால் காட்டமாகவே கவிதை பாடியிருக்கிறார் பல இடங்களில் காந்தி பேரைச் சொல்லி நாட்டில் நடைபெறுகின்ற கயமைத்தனங்களை அவர் சாடுகிறார் ஓரிடத்தில்—

'கொதிக்கின்றேன் தோழர்களே உள்ளம்! காலம்
கொடுமையிலும் கொடுமையாகப் போன
தேடா!
மிதிக்கின்றார் உண்மை நெறி அவர்கள் இன்று
மிக்கெழுந்தார் தலைவரெனும் பேரால்!
அன்னார்
விதிக்கின்ற செயல்களுக்காய்த் தம்மை ஈந்து
வீணடிமை யானார்கள் நல்லோ ரெல்லாம்

சதிச்செயல்கள் வாழ்கிறது ஐயோ! இன்று
தர்மந்தான் சாகலாமோ கொடுமை என்னே!

கதர்ச்சட்டை போடுகின்ற பலபேர் இன்று
காதகராய் இருக்கின்றார் அச்சட் டையாம்
புதர் நடுவில், கொடும் பாம்புக் கூட்டத்தார்கள்
கோயிலான நம்நாட்டைப் பணயம் வைத்தே
அதர்மத்தில் நடக்கின்றார்! உண்மைக் கோமான்
அண்ணலினை, அயோக்கியத்தை மறைப்
பதற்கு
விதவிதமாய்ப் பயன்படுத்தி ஆள்கின் றார்கள்
வேசியைப்போல் ஆனார்கள் வெட்கம்!
வெட்கம்!”

*கலைத்துறையில் காணப்படும் கீழ்நிலைகள் எண்ணிக் குமைகின்றார் பெருங்கவிக்கோ. அன்புத் தமிழர்கள் வளர்த்த அருங்கலையை இன்று ‘நாய் நரிகள் எல்லாம் புகுந்தே ஆடும் நாசத்தின் தலையுச்சி’ ஆக்கி விட்ட அவலநிலையை நினைத்துக் கொதிக்கின்றார். படக்கலையில் காணப்படுகிற சிறுமைச் செயல்களை வர்ணித்து வருந்துகிறார். கலையின் பேரால் போடப்படுகிற கும்மாளங்கள், ‘நாடி நலக் கலை வளர்த்த தமிழர் நாடே! நாசமாய் நீ போவதும் உன் தலையெழுத்தா?” என்று வேதனைப்படுகிறார்.*

‘நம்நாட்டு நாடகத்தை நசுக்கி விட்டார்!
நாசத்தால் கலைத்தாயைக் கொல்கின்றார்கள்
கும்மிருள் தான் சூழ்ந்ததின்று! பல நல்லோர்கள்
குடிப்பதற்குக் கூழின்றி, ஆடை யின்றி
அம்மம்மா, பெருந்துன்பச் சேற்றில் வீழ்ந்தார்
அம்மணிகள் வறுமையினால் கற்பைவிற்று

விம்முகிறார் மனதுக்குள்! வெளியே வந்து
வேடிக்கை காட்டுகிறார்! அந்தோ அந்தோ!'

என்று அங்கலாய்க்கிறார் கவிஞர்.

'பொதுத் தொண்டு' குறித்துப் பாடும்போது, இன்றைய நிலையை வேதனையோடு அவர் குறிப்பிடுகிறார்.

'இன்றுஎவன் நம் முன்னால் ஆள்கின்றானோ
இவனே நம் கடவுளென எண்ணி அன்னான்
பன்றியைப் போல் நடந்தாலும் பாதம் போற்றிப்
பணிகின்றோம்! நாயை விடக் கீழாய்!
முன்னோர்
நன்றியினை மறந்து விட்டோம் புத்தன் ஏசு
நற்காந்தி நபிகள் பிரான் போன்றோர்
கொள்கை
கொன்று விட்டோம் குழிதோண்டிப்
புதைத்தும் கூடக்
கொஞ்சமேனும் நாணமின்றி இருக்கின்
றோம் நாம்!

பெரும் புகழைப் பெறவேண்டும் என்றால் நாட்டில்
பேசுதல் போல் செயவேண்டும்! உயிரை
ஈந்தும்
அருஞ்செயலைச் செயவேண்டும்! அன்புவேண்டும்
அநியாயம்! நம்மவர்கள் என் செய்கின்றார்?
வருந்துகின்ற தீச்செயலைச் செய்தேனும் நல்
வாய்ப்பதனை ஏற்படுத்திப் புகழாம் இன்ப
விருந்து பெற நினைக்கின்றார்! இந்தப் போக்கை
விரட்டுகின்ற போர்ப்படையாம் என்றன்
பாட்டு!'

ஒழுக்கமில்லாப் பொதுவாழ்வு ஓட்டைப்பானை; உயிரில்லா நடைபிணமும் அதுவே என்று கூறும் கவிஞர், படுதுரோகம் செய்யும் ஈனர் தம்மை இழுத்து வந்து சந்தியிலே நிறுத்த வேண்டும்; அவரை எல்லாம் கழுவேற்று கின்ற நாளே விழாநாள் ஆகும் என்று கோபமாய் பேசுகிறார்.

நாட்டின் நிலையும் மக்களின் நிலையும் எண்ண எண்ண கோபம்தான் வெடிக்கிறது. பெருங்கவிக்கோ விற்கு. இக் கொடுமைகள் எல்லாம் மாறுவதற்கு வழியே இல்லையா என்று கொதிக்கிறது அவர் உள்ளம்.

'உழைக்கின்ற மகனுக்குக் கஞ்சி இல்லை,
உழுகின்ற உழவனுக்கு உடுத்த இல்லை,
அழைக்கின்றார் அறிஞர்பேர் சொல்லி ஆனால்
அவர் பெரிய அயோக்கியராய் வாழ்ந்து விட்டு
தழைக்கின்ற கொள்கைக்கு மதிப்பொன் றுண்டா?
தங்க முறை நீதிநேர்மையாய் நடந்தால்
பிழைப்பதற்கு வழியுண்டா? குற்றம் கொன்று
பெரும்பூமி வாழ்பவர் யார்? சிந்தியுங்கள்!

மக்களெல்லாம் முழுக்குருடர்! குருடர்க்குப் போய்
மற்றுமொரு முழுக்குருடன் வழியைக் காட்டத்
தக்கோன் போல் வடிவெடுத்தான், நடித்துக் காட்டித்
தமிழர்களை யேமாற்றுகின்றான்! ஈதை
முக்காலும் அறிகின்ற சான்றோ ரெல்லாம்,
முழுவயிற்றுக் கஞ்சிக்காய் வாழ்வை விற்றார்!
எக்காலம் இக்கொடுமை மாற்றுவோம் யாம்?
என்னருமைப் பர்வலரே! எண்ணிப் பாரீர்!'

படக்கலை இதர கலைகளை எல்லாம் பாழாக்கி வருவதைக் கண்டு கவிஞர் வேதனையோடும் உளக்கொதிப்

போடும் பாடல்கள் பாடியிருக்கிறார். பிழைப்புக்காக அங்கு நல்லவர்களும் கெட்டுப் போவதை எண்ணி மனம் வருந்துகிறார். கலையை வளர்க்கிறோம் என்று சொல்லிக் கொண்டு எல்லோரும் வயிற்றைத்தான் வளர்க்கின்றார் என்பதைச் சுட்டுகிறார்.

தமிழரின் பெருமைகளை எண்ணி மகிழும் பெருங்கவிக்கோ இன்றையத் தமிழரின் இழித்தன்மைகளை எடுத்துக்கூறப் பின் வாங்குவதில்லை. தமிழனுக்குப் பகை யார் என்று கேட்டு, இந்தத் தமிழன்தான், தமிழன் தான், தமிழன் தான் என்று அழுத்தமாகச் சொல்கிறார். அமிழ்தினில் நஞ்சைக் கலப்பது போல, அன்று முதல் இன்று வரை நடப்பதனாலே தமிழனுக்குத் தமிழனே பகைவன் என்கிறார் அவர். அவனது குணக்கேடுகள் பற்றியும் கூறுகிறார்.

'நன்றியைக் கொள்வதிவன் அன்றாட மாச்சு
நம்பின பேருக்குத் துரோகம் செய்வதே மூச்சு
பன்றிகள் போலலைந்து பணம்பற்றியே பேச்சு
படித்தவன் கூட ஐயோ! பண்பினை விடலாச்சு!
காட்டிக் கொடுப்பதிவன் கைவந்த கலை
என்பான்
கண்மூடித் திறக்குமுன்னே காதகக் கொலை
செய்வான்!
ஊட்டி வளர்த்த தமிழ் உயர்வுக்கு உலை
வைப்பான்!
உண்மையைத் துணிந்துசெய உளமஞ்சிச்
சிலையாவான்.

பெருங்கவிக்கோவின் புதிய பார்வைக்கும், புதிய சிந்தனைக்கும் சான்றாக 'கோவிந்தன் கொடுங்கோலன்' 'கடவுள் எனக்குக் கடன்காரன்' என்று அவர் பாடியுள்ள பாடல்களைக் குறிப்பிட வேண்டும்,

கோவிந்தா கோவிந்தா என்றொருவன் குரல் எழுப்பி, கொடும் வெயிலில் சாலையிலே உருளுகின்றான் வயிற்றுக் காய்!

'கோவிந்தா கோவிந்தா என்றே மற்றொருவனும் தான்
கோபுரம்போல் மாளிகையில் பணச் செருக்கில் புரள்கின்றான்
கும்பிட்ட இருவருக்கும் கொடுத்ததிலே வஞ்சமென்றால்
கும்பிட்ட ஒருவன்நீ கொடுங்கோலன், அன்றோ? சொல்!'

என்றும் திருப்பதி ஏழுமலையானை கேட்கிறார் கவிஞர். 'வம்புக்குச் சொல்லவில்லை வடவேங்கடத்தானே! வந்து குவிகின்ற பொருள் உனக்கு ஏன்? வறியார்க்கே தந்துவிடு' என்றும் கூறுகிறார்.

கடவுள் எனக்குக் கடன்காரன் எனக் கூறும் கவிஞர் ஏன் அவ்விதம் கூறுகிறார்?

'கடவுளே, நீ எனக்குக் கடன்காரன், அருள் கதவை அடைத்த கொடுங்கோலன்!'

என்று கடவுளிடமே அவர் கூறுகிறார்.

எனக்குத் தானாடா நீ கடன்காரன்? இங் இருப் போர்க்கெல்லாம் தான் கடன்காரன் என்றும் சொல் கிறார். அது எப்படி?

'உனக்கும் உதவினேன் உண்டியல் பெயரால்
உதவிக்கு உதவி உதவாச் செயலால்

நீ எனக்குக் கடன்காரன் என்கிறார்.

பிறந்தது முதலாய் இறந்தநாள் வரைக்கும், பெரும் பெரும் அனுபவம் பெற்றுவிட்டேன்; வரம் அருள்வாய் என வணங்கி விட்டேன். வந்ததும் பறித்தாய் நொந்து கெட்டேன் என்று பாடுகிறார் கவிஞர்.

**'உலகைப் படைத்தவன் நீயே என்றால்**
**உயிர்களுக் கெல்லாம் கடன்காரன் நீ!'**

என்றும் கடவுளுக்கு நினைவுபடுத்துகிறார்.

# 8. தன்னம்பிக்கையும் தன்மான வீரமும்

பெருங்கவிக்கோ தன்னம்பிக்கை மிகுந்தவர். தனது திறமைகளை நன்கு உணர்ந்தவர். தன்மானம் மிக்கவர். அதில் முகிழ்த்த வீரமும் துடிப்பும் கொண்டவர்.

அவருடைய இப்பண்புகள் அவரது கவிதைகளில் ஒளிப்பொறி சிதறிப் பல இடங்களிலும் பரவிக் கிடப்பதைக் காணலாம்.

'காலமெல்லாம் விழித்திருந்தே
கடமையாற்றும் கவிஞன் நான்
அவனும் இவனும் எவனும் ஒன்றாய்
ஆகும் கொள்கை யுடையவன் யான்
விருப்பு வெறுப்பை வென்று வாழும்
வேதாந்தி போல் ஞானி நான்'

என்று அவர் அறிவிக்கிறார்.

என்னைப் போல் முயற்சிக்கே இவ்வுலகில்
எவன் பிறந்தான்! கையில் செப்புப்
பொன் பொருள்கள் சிறிதுமிலா நிலையில் கூடப்
புலம்பாமல் அஞ்சா நெஞ்சத்

தன்னேரில்லாத வகை உழைக்கின்றேன்!
தாரணியில் தமிழே மேன்மைப்
பன்னலமும் பெருகிடப் பேராசை கொண்டே
பணிசெய்தேன்! பகைமை வென்றேன்!''

என்று கவிஞர் கூறுகிறார்.

பெருங்கவிக்கோ ஓயாத உழைப்பில் மகிழ்ச்சி காண்பவர். பிறருக்கு உதவி புரியும் நல்ல மனம் பெற்றவர். இவை பற்றி அவர் ஓரிடத்தில் குறிப்பிடுகிறார்—

'ஓடியாடித் தினம் உழைத்து மகிழ்கிறேன்
ஓய்வுக்கு நேரமில்லை—பாக்கள்
பாடித் தேடித்தினம் பண்பட்டுத் தேர்கின்றேன்
பயணம் முடியவில்லை.

பிறர்க்குதவி செய்யப் பெருங்கேடு வந்தாலும்
பின்னுக்குப் போகவில்லை—நெஞ்சம்
அறந்தவறிப் பழி ஆக்க நினைப்பினும்
அதனை யான் செய்யவில்லை.

ஊரார் பணத்திலே நீராடி என்னையான்
ஊட்டி வளர்க்கவில்லை—யானும்
பேராக வேண்டுமென்றே வஞ்சகர் மார்பினைப்
பிடித்துத் தழுவ வில்லை.

உண்மை நெறியுண்டு உறுதிப் பணிவுண்டு
ஊக்கப் பெருக்கமுண்டு—சிங்கத்
திண்மைக் குணத் தமிழ் செயல்வீர வாளுண்டு
தீமைக் கொலைகளுண்டு!'

அவரது துணிவு குறித்துக் கவிஞர் இவ்விதம் பாடுகிறார்.

'இதய அகலில் ஏற்றிய தீபம்
என்றன் துணிவடா—துன்ப
விதவிதமான புயலின் நடுவினிலும்
வென்றதம் மணியடா!'

பெருங்கவிக்கோவின் துணிச்சல் வியக்கப்பட வேண்டியதேயாகும். தனக்குப் பிடிக்காத முறையில், சரியில்லாத கருத்தை, யார் எங்கே சொன்னாலும், அந்த இடத்திலேயே எதிர்ப்புக் குரல் கொடுக்கத் தயங்கமாட்டார் அவர். கவி அரங்கத்தில் தலைமை வகிப்போருடன் அவர் கருத்து மோதல் நடத்தியிருக்கிறார்.

பெருங்கவிக்கோ ஐயப்ப பக்தர். சபரி மலைக்குப் போவதற்கு நோன்புகள் ஏற்று நெறிமுறைகளை கடைப் பிடிப்பவர். அவருடைய கோலத்தை ஒரு கவி அரங்கத்தின் போது தலைமைவகித்த பகுத்தறிவுவாதி பழித்துப் பேசி விட்டார். அதனால் கொதிப்புற்ற கவிஞர் உணர்ச்சி வேகத்தோடு கவிதையில் சாடினார்—

தவிப்புடைய நெஞ்சன் நான்
சார்வதோ தெய்வ நெறி!
சாமியே சரணமெனச்
சார்வாசல் அவ்வாசல்

நேமித்த ஒழுக்கமுறை
நேர்மை நிலைஉணர்ந்தே
இக்கோலம் பூண்டுள்ளேன்
இதனைத் தலைமைகொள்

தக்கோன் அறியாமல
தவக்கோலம் பழிக்கின்றான்!
ஆமாமாம் சாமிகளாய்
அரைவயிற்றுக் கஞ்சிக்காய்

சீமான்கள் தாள்பற்றித்
திருடரைப் போய்ப்புகழ்ந்து
தாமிங்கே வாழ்கின்ற
சதிகாரர் தம்மைவிட

நாமிங்கே என்றேனும்
நன்முறை கெட்டோமா?
தலைமை தாங்குகின்ற
தனிப்பெரும் பித்தரேநீர்

நிலைமை புரியாமல்
நெஞ்சார எனைப்பழித்தீர்!
போதை இல்லாத
நீதிக் கவிஞன்நான்

பாதை என்பாதை
பண்பான சீர்பாதை
கைக்கூலி கட்குக்
கைகட்டி வாய்பொத்தி

பைக்கூலி பெறுகின்ற
பாதையென் பாதையல்ல!
மெய்க்கூலி பெறுதற்காய்
மேன்மையாம் ஆன்மீகத்

தெய்வத்தாள் பற்றித்
திசையெல்லாம் தமிழ்வளர்ப்பேன்
சாமியே சரணமெனத்
தான் நினைத்துப் பற்றற்று

யாமிங்கே வாழ்கின்றோம்
யாருக்கும் அச்சமில்லை.
தெய்வீக வழிப்பாதை
சிற்றளவும் அறியாநீ!

செய்கைஎனைப்பழிக்கும்
சிறுமையை விட்டுவிடு!
வான்தவ மோனத்தின்
வாகைபெறச் செல்பவன்யான்

நான்என தென்கின்ற
நாத்தீகப் பேர்வழிநீர்!
என்பாதை நீபுரியாய்,
இருவருக்கும் பாதைவேறு!

இப்படி மேடையிலேயே சுடச்சுடச் சொல்களால் பாய்ச்சினார் பெருங்கவிக்கோ. இது போன்ற வேறு நிகழ்ச்சிகளும் கவிஞரின் கவிஅரங்க அனுபவங்களில் உண்டு.

ஒரு கவி அரங்கத்தில் தலைமை வகிக்க நேர்ந்த ஒருவரை, ‘தக்கவன் நீ!’ என்று கவிஞர் பாராட்டுகிறார். அதற்குரிய காரணத்தை அவர் கூறுகிறார், ‘உன் தலைமையில் என் கவிதையை நான் தரும் வாய்ப்பை நீ பெற்றிருக்கிறாயே, அதனால் தான்’ என்று பெருமிதத்துடன். ‘புல்லர் தமை வாழ்த்தாத என் பா கொண்டு போற்றுகிறேன், வணங்குகிறேன் பெருங்கவிக்கோ’ என்றும் பாடுகிறார். இவ்வாறு சொல்லக் கூடிய துணிவு எத்தனை பேருக்கு இருக்கிறது?

இந்த நெஞ்சுத் துணிவு பெருங்கவிக்கோவிற்கு உள்ளதற்குக் காரணமே, எவர்க்கும் அஞ்சாது, எவர் தயவையும் கெஞ்சாது, தனது எண்ணங்களை, உண்மையை,

உள்ளவாறு உரைக்கும் இயல்பினைப் பெற்றிருப்பது தான்.

கவிஞர் தனது தன்மையை ஒரு அரங்கில் வெளிப் படையாகவே எடுத்துச் சொல்லியிருக்கிறார்—

'உண்மைதான் கூறவந்தேன்...
உள்ளபடி காட்டினேன் காண் எவரின்
நெஞ்சும்
புண்பட்டால் அதற்கு நான் பொறுப்பு அல்ல!
பொய் சொல்லி மெய்மறைத்துப்
பேருக்காகக்
கண்மூடிக் கருத்துரைக்க அறியேன்! நானோர்
கவிக் கரும்பைக் கடித்துணரும் குழவி!
மேலாம்
வண்ணத்தால் பொய்பூசி பித்தளையாய்
வாழ்கின்ற போலிகளை வதைக்கும்
என்பர்!'

தன் திறமையில் திடமான நம்பிக்கை கொண்ட உள்ளம் தான் இவ்விதம் நாவலிக்க முடியும். அவர் தேர்ந்து கொண்ட கொள்கையில், பாடுபடுகிற லட்சியத் தில், அவருக்கு தீவிரமான பற்றுதல் இருக்கிறது. அதை எப்படியும் செய்தே முடிக்க வேண்டும் என்ற உறுதி அவருக்கு இருக்கிறது. அது அவருடைய தன்னம்பிக் கையை வளர்க்கிறது.

'சிதறிக் கிடக்கும் என்றன் இனத்தைச்
சேர்த்து வைக்கப் புறப்பட்டேன்—நம்முள்
பதறிச் சாகும் தமிழினத்தின் வெற்றிப்
பாதை அமைக்கப் புறப்பட்டேன்!

உலக இனத்தின் ஆணிவேர் நம்
உரிமை நாட்டப் புறப்பட்டேன்—நம்முள்
கலகம் மூட்டிப் பார்த்தவர் தம்
கதை முடிக்கப் புறப்பட்டேன்!
வையகத்தின் நாவசைத்த
வண்டமிழ்த்தாய் ஓங்கவே—கோடிக்
கையசைத்துக் கயமை சாடும்
கருத்தும் ஏந்திப் புறப்பட்டேன்!'

என்று கொள்கை முழக்கம் செய்கிறார் கவிஞர்.

தனது ஆற்றலை அவர் நன்கு உணர்ந்திருப்பதால், 'விஞ்சி எழ கவிக்கோ நான்; எவன் தயவும் தேவை இல்லை' என்று தலைநிமிர்ந்து முன்னேறும் தைரியம் அவர் பெற்றிருப்பதால் உறுதியாகப் பாட முடிகிறது அவரால்.

ஆற்றல் தான் எனக்கு அருந்துணைவன்!
உயிர் நண்பன்!
கூற்றம் எதிர்பார்த்தாலும் கொள்கை தனக்காகப்
போராடி அதனை பொடிப் பொடி யாய்ச்செய்யும்
வீரம் உடையேன்! விவேகம் மிக உடையேன்!
நஞ்சாய்ப் பழகும் நரித்தனக் காரருக்கும்
கொஞ்சும் அன்பை ஊட்டிக் கொடுப்பவன் நான்!
பாய்ந்து வரும் பகைக்கும் பண்பாடு கெட்ட
வர்க்கும்
நாய்கீழ் வாழும் நன்றியிலாத் தீயர்க்கும்
ஏய்ப்போர்க்கும் ஈன எத்தர்க்கும் கூடயான்
தாய்ப்பால் கொடுக்கும் தகுதியை வளர்ப்பவன்
நான்;

என்று அவர் தன்னைப் பற்றிக் கூறிக்கொள்கிறார்

'உண்மைக்குப் புறம்பாகும் காக்காய் பிடிப்போரைக் கால் தூசாய் மதிக்கும் ஆண்மை' அவரிடம் இருக்கிறது.

மெய்யே நினைத்து விடிவே கருதி, வெல்லும் வகையில் உழைப்பேன்; மேன்மை எய்யும் உணர்வை இதய வலையில் இட்டே எஃகாய்ச் சமைப்பேன் என்றும், உண்மைப் பலமோ உலகைப் பணிய வைக்கும் பாதை வகுத்துச் சிரிக்கும் என்றும் உறுதிக் குரலில் அறிவிக்கிறார் பெருங்கவிக்கோ.

'பொறுமையே எனது வாழ்வுக்—கூதல்
குளிர்குறை போர்வை ஆகும்.
தறுகண்மைத் திருப்தி ஒன்றே—வெற்றி
தரும் பொருள் ஆண்மை நல்கும்.
வறுமை என் பெருமை ஆகும்—பற்றில்
வர்ழ்க்கையென் நிறைவேயாகும்
பெறும் பேறு நம்பிக்கையே—வலிமை
பெய்மன உயிரின் மூச்சாம்!'

உண்மையைத் துணைகொள்ளும் திறனையும் உள்ளத்தில் திருப்தி காணும் மனநிறைவையும் பேறுகளாகப் பெற்றுள்ள பெருங்கவிக்கோ, இத்தகைய நற்பண்புகளை எல்லாம் எங்கிருந்து பெற முடிந்தது என்பதை ஒரு இடத்தில் தெளிவுபடுத்தியிருக்கிறார்.

'துன்பச் சுமையைத் துணிவோடென்
கவித்தூணில்
அன்பாய் இறக்கி வைப்பேன்; அவள் எனக்குச்
சுமைதாங்கி
வெல்லும் கவிச்சுடரே விரிஉலகில் என்
சொத்து!

**உண்மைக்கும், அன்புக்கும் உயரிய பண்புக்கும்**
**திண்மைக்கும் என்திறமைச் செல்வாக்கு**
**வளர்வதற்கும்**
**காரிகை அன்னவளே கடவுளாய் நிற்கின்றாள்!'**

நல்லோர் இதயத்தில் நடமிட்டு, நலம் தருகின்ற கவிதைமகள் தான் அவருக்கும் வலிமை தருவதாக கவிஞர் நம்புகிறார். அவருள் ஊற்றெடுத்துப் பொங்குகிற கவிதை ஆற்றலும், அது தரும் தன்னம்பிக்கையும் தான் பெருங் கவிக்கோவிற்கு வலிமை சேர்த்துள்ளன என்று கூறலாம்.

அவருடைய மனச்சாட்சியின்படி நடப்பவர் கவிஞர். அந்த அகச்சுடர் வெல்வதற்காகவே அவர் அய்யப்பனை நாடி சபரிமலைக்குப் போகிறார். இதை அவரே கூறுகிறார் —

**'பொய்யுரைப்பார் பக்கமென்கால் போகவில்லை**
**பொறாமை சேர் நெஞ்சரை யான் மதிக்கவில்லை**
**நெய்யுரைத்து வாயாலே கையால் நஞ்சை**
**நேயமுடன் ஊட்டுகின்றார் தம்மைக் கண்டும்**
**அய்யகோ என்றே யான் அலறவில்லை**
**ஆணவத்தை மதிக்கவில்லை! இருந்த போதும்**
**அய்யப்பன் கோயில் ஏன் செல்வாய் என்பீர்**
**அகச்சுடராம் மனச்சாட்சி வெல்லச் செல்வேன்'**

பெருங்கவிக்கோவின் உள்ளத்து நேர்மையும், அஞ்சாத போக்கும் வெள்ளைமனமும் அவருடன் பழகியவர்களுக்கு நன்கு தெரியும். தன்னலம் கருதி எப்படியெல்லாமோ நடித்து வாழ்க்கையில் வெற்றி பெற முயலும் மனிதர்கள் மத்தியில், அவருடைய நற்பண்புகள் காரணமாக, அவர் பெருந்துன்பங்களை எதிர்கொள்ள நேரிடுகிறது. அதற்காக அவர் மனம்சோர்வதில்லை. இதையும் கவிஞர் தன் கவிதையில் பதிவு செய்திருக்கிறார்:

'எண்ணியதைச் சொல்வேன் எதுவரினும்
அஞ்சுகிலேன்!
உள்ளொன்று வைத்துப் புறமொன்று
பேசிவரும்
கள்ளத்தன மெனக்குக் காட்டத் தெரியாது!
நல்லவர் போல் நன்கு நடித்துப் பிறர்
நலத்தைக்
கொல்கின்ற கொடுமை கொஞ்சமும் புரியாது!
வஞ்சம் புரட்டால் வையத்தை ஆட்டுவிக்கும்
நஞ்சையென் நல்லகுரல் நவிலவே நவிலாது!
பிஞ்சில் பழுத் தறியேன், பெருந்துன்பம்
ஏற்றதனால்
நஞ்சையும் அமுதமாய் நாளுக்கும்
நெஞ்சுடையேன்!'

பெருங்கவிக்கோவின் தன்னம்பிக்கை இமயம் போல் உயர்ந்தது, பெரியது, வலிமை மிக்கதாகும். எனவேதான் அவரால் 'சரித்திரம் படைப்பேனம்மா' என்று நெஞ்சுயர்த்திப் பாட முடிகிறது.

'இருட்டுக் குகை வழியில்—நானோர்
இதய விளக்கானேன்!
மருட்டும் சதிவலைக்குள்—நானோர்
வழிகாண் மொழியானேன்!
குருட்டு விழியார்க்கெலாம்—நானோர்
கோடிக் கண்ணானேன்!'

என்றும்,

அஞ்சிச் சாவார்முனே—நானோர்
அயரா உழைப்பானேன்!
கெஞ்சிப் பிச்சை கேட்பார்—முன்னே

கிளர்ச்சி வள்ளலானேன்!
பஞ்சப்புயல் நடுவில்—விஞ்சிப்
பாயும் வானூர்தி ஆனேன்!'

என்றும், 'முட்களில் சுகத்தைக் காண்பேன்— துன்ப முடிவினில் மாற்றம் செய்வேன்' என்றும் கவிஞர் அறிவிக்கிறார்.

'திடமனத்து உறுதியே என் உடைமை
திறமுள சொத்தாம் விஞ்சும்
கடல்போலத் துயரம் என்றன் உண்மை
கருதியே முடி துணைவன்
கடமை செய் அறிவே ஆம் என்—மேன்மை
கனிதரும் ஆயுதம் ஆம்'

என்றும் அவர் கூறுகிறார்.

'இன்பம் துன்பம் இரண்டும் சமமாய்
எண்ணித் துணிகின்றேன்—உண்மை
என்ன என்பதைத் தேடி நாடவே
இதயம் பணிகின்றேன்,

...எந்தக்
கூலிக்கும் என் அறிவை விற்காக்
கொள்கை சுமக்கிறேன்'

உயர்ந்து நடக்கிறேன் என்றும் பெருங்கவிக்கோ தன்னைப் பற்றிப் பாடியிருக்கிறார்.

# 9. சமூகப் பார்வையும் வாழ்வு நெறியும்

பெருங்கவிக்கோ மனித நேயமும் கருணை உள்ளமும் பெற்றுள்ள கவிஞர். சமூகத்தில் நீடித்து நிலவுகிற அவலங்களும் பொருளாதார ஏற்ற இறக்கங்களும், ஏழைகள் உழைப்பாளிகள் அனுபவிக்கிற வாழ்க்கைக்கொடுமைகளும் பிறவும் அவர் உள்ளத்தில் குமுறல் ஏற்படுத்துகின்றன; சிந்தனைகளைத் தூண்டுகின்றன. இந்நிலைமைகள் மாற வேண்டாமா என்று மக்களைக் கேட்டு, சிந்திக்கும்படி உணர்வூட்டும் கவிதைகளை அவர் படைத்துள்ளார்.

**'நாள் முழுதும் பாடுபடும் ஏழை, துன்ப**
**நரகத்தில் உழல்கின்றான்! வேலைசெய்து**
**தோள்கடுக்க உழைத்திட்ட தோழன்:கட்டத்**
**துணியின்றிப் பணமின்றிப் பதறும் போது**
**ஆள்கொழுத்தே அலைகின்றான் பணக்கொழுப்பன்!**
**அவன் பின்னால் சுற்றுகிறான் தினக்கொழுப்பன்!**

**பாட்டாளி பதறுகிறான், ஆடை நெய்யும்**
**பண்பாளி கதறுகிறான் எழுத்தாளன்சேர்**
**பாட்டாளி பணத்தாளி வெளியீட்டான்கால்**
**பந்தாக உருளுகின்றான்; உழவன் ஈங்கே**

ஒட்டாண்டி ஆகின்றான், உண்மை உள்ளோன்
உதைபட்டுச் சாகின்றான், பொய்யைத்
தம்மின்
கூட்டாளியாய்க் கொண்டோன் மஞ்சம் கொஞ்சிக்
குளிக்கின்றான்! அந்தந்தோ வெட்கம்
வெட்கம்!"

சமூக முரண்பாடுகளை கவிஞர் இவ்வாறு படம் பிடித்திருக்கிறார். இப்படி வாழ்க்கை நிலைமைகள் இருப்பதற்கு இறைவனே காரணம்; எல்லாம் இறைவன் செயலே என்று மக்கள் நம்புகிறார்கள். கஷ்டப்படுகிறவர்களும் புலம்புகிறார்கள்; சுகபோக வாழ்வு அனுபவிக்கிறவர்களும் அவ்வாறே சொல்கிறார்கள். இது எப்படி உண்மையாக இருக்க முடியும்? இது பற்றி சிந்திக்க வேண்டுகிறார் கவிஞர்.

'வஞ்சச் செயலால் வாழும் சிறுமதியர்
தஞ்சமாய் எல்லாம் தனி இறைவன் செய
லென்பார்!
கூடிக் கெடுக்கும் குணங்கெட்டார் கூடத்தான்
நாடியே எல்லாம் நனி இறைவன் செயலென்பார்!
பேய்க் குணத்தார், பித்தலாட்டக் கொடியவர்கள்
வாடிக்கையா யெல்லாம் வாழிறைவன்
செயலென்பார்!
அடுத்துக் கெடுப்பவர்கள், அடங்காது நடப்பவர்கள்
படுத்துக் கிடந்தே பால் தேனும் பழரசமும்
விதவிதமாய் உண்பவரும் வெல் இறைவன்
செயலென்பார்!
கூனிக் குறுகிக் கும்பி வயிற்றுக்காக

ஆள் மட்டும் போராடி அயர்ந்தாரும் கூடத்தான்
எல்லாம் இறைவன் இனிய செயல் என்கின்றார்!
குடிப்பதற்குக் கூழ்கூடக் கும்பிக்கு இல்லாமல்
வெடித்துக் குமுறுகின்ற வீரன் ஏழைமகன்
துடிக்கும் பொழுதினிலும் தூய இறை
செயலென்பான்
படித்த படிப்பும் பாடமெலாம் ஈதொன்றே!
கட்டழகி இன்பக் கனியழகி நஞ்செய்யிலே
நட்டு உழைக்கும் நனியழகி நம்நாட்டில்
உடுத்துதற்கும் கூட ஓராடை நூலாடை
எடுக்க முடியாமல் ஏழ்மையிலே வாடுகின்றாள்
எல்லாம் இறைவன் செயலென்றே! ஆனாலும்
வல்ல செருக்குடைய வனிதை மாடியிலே
உல்லாசமாயிருக்கும் ஓரத்துச் சன்னலுக்கும்
சில்லாடைப் பட்டாலே திரையிட்டு வாழ்கின்றார்!
இவர்களும் கூடத்தான் இறைவன் செயலென்
பார்!
தவமும் பாவமும் சரிசமமா சிந்தியுங்கள்!"

என்று யதார்த்த நிலைமைகளை கண்முன்னே கொண்டு நிறுத்தி, சிந்தித்துப் பார்க்கும்படி வேண்டுகிறார்.

அன்றாட வாழ்வில் தென்படுகிற முரண்பாடுகளை சுட்டிக்காட்டி கவிஞர் ஆத்திரத்தோடு பாடியுள்ள கவிதைகள் படிப்போர் மனதில் பதியக் கூடியவை. வாழ்க்கையின் அவலங்களை எண்ணி மனம் குமைந்து கொதிப்புறும்படி செய்யும் ஆற்றல் பெற்றவை.

குணமில்லாத் தீயர்கள் பதவி பெற்று, பொது வாழ்வில் ஏறிக்கொண்டு, தன்னலமே பெரிதாக எண்ணிச்

செயல் புரிகிறார்கள். உணவின்றித் துடிக்கின்ற மக்கள் கோடி, உளம் நொந்து புலம்புகிற நிலையைக் கண்டும் கூட அவர்களுக்காக இரக்கப்படாது, தமக்குப் பணம் வேண்டும் என்பதிலேயே குறியாக இருக்கிறார்கள் பொதுத் தொண்டு என்று பேசுபவர்கள். பாவியர்கள் அவர் அழியும் நாளே நன்னாள் என்கிறார் கவிஞர்.

'ஒட்டியதன் வயிற்றோடு போராடித்தான்
ஒருகவளம் சோற்றுக்குக் கைவண்டியைத்
தொட்டிழுக்கும் ஏழையினைப் பார்த்து நம்மின்
தொண்டர்களை நினையுங்கள் நாட்டை
ஆள்வோன்
கட்டிலிலே பஞ்சணையில் ஒயிலாளோடு
கண்துயிலக் கட்டுதற்கும் ஆடையின்றிப்
பொட்டலிலே வாழ் ஏழைதனை எண்ணுங்கள்!
பொதுத்தொண்டு செய்தவன் யார்?
பயன்தான் என்ன?'

என்று கேட்டு, எண்ணும் திறமுடையாரை எண்ணும்படி, காரணம் கண்டறியும்படி தூண்டுகிறார் கவிஞர். நாம் பிறந்து வளர்ந்து எல்லாவற்றையும் பார்த்தும்,

'வகை வகையாய் ஓசைகளில்
செவிசாய்த்தோம், வாழ்வின் தீமைகளைச்
சாய்த்தோமா?
தவியாய்த் தவிக்கின்றோம், கணநேரம் நாம்
நினைத்தால்
புரட்டுத்தனமும் பொய்மைக் குணக்கேடும்
முரட்டுத்தனமும் மோசக் குணக்கேடும்
திருட்டுத்தனமும் தீமைக் குணக்கேடும்

குருட்டுத்தனமாய்க் குவலயம் மீதிங்கே
பவனிவரக் கண்டோம்! பாதகம் செய்வோர்கள்
அவனிக்கு முதலாளி! ஆசைக் கிறுக்குடையோர்
பற்றற்ற துறவியாய்ப் பாசாங்கு செய்கின்றார்'

இந்த ரீதியில் இன்னும் பல வாழ்வுச் சித்திரங்களைத் தீட்டி, மக்களோ 'சிந்தனையே இன்றிச் செயல்கள் செய்கின்றார்; காதிருந்தும் செவிடராய், கண்ணிருந்தும் குருடராய் மேதினியில் வாழ்கின்றார்' என இடித்துரைக்கிறார் பெருங்கவிக்கோ

மனிதரின் இன்றைய நிலை கவிஞருக்கு வேதனை தருகிறது; கோபமும் உண்டாக்குகிறது. ஆகவே அவர் பழித்துரைத்துப் பாடுகிறார் உணர்ச்சி வேக கவிதைகளை.

'பாலல்ல வெளுத்த தெல்லாம்! உண்டுடுத்திப்
பவனி வரு வோ ரெல்லாம் மனிதரல்ல,
ஆலல்ல மரங்களெல்லாம்! அதனைப் போல
அருங்கல்வி கற்ற புகழ் மாந்தரெல்லாம்
சால பெரும் நல்லோரும் அல்ல! பல்லோர்
சரியான முழுமூடக் கயவராகி
ஏலமிடு பொருள் போல ஆனார் இன்று!
என்னென்பேன்! இது பெரிய வெட்கக் கேடு!

வானகமே மழைநீரைப் பருகி விட்டு
வையத்தை வெறுப்பது போல், அறம் செய்கின்ற
தானத்தான் பொருளையெலாம் ஏப்பம் விட்டுத்
தன்கையை விரிப்பது போல், நேர்மை நெஞ்ச
மானத்தை மாவீரன் துறப்பதைப் போல்,
மாகல்வி படித்தபலர் இன்று தீய

ஈனர்க்குத் துதிபாடிக் கால்பிடித்தே
 எத்தர்களாய் மாறிவிட்டார் மானக்கேடு!'

படித்துப் பட்டங்கள் பெற்றவர்கள் மனசாட்சி இன்றி, துணிச்சல் இன்றி, தாதர்களாம் பேடிகளாய் வாழமுற்படுவதைக் கண்டும், எண்ணியும் சீற்றம் கொள்ளும் பெருங்கவிக்கோ, அவர்களது போக்கை வன்மையாகச் சாடிப் பல இடங்களில் கவிதை பாடியிருக்கிறார். அவர்கள் நிலை மாறவேண்டும்என்று உறுதியாய்க் கூறுகிறார். அவற்றில் ஒன்றை இங்கே குறிப்பிடுவது பொருந்தும்-

'படித்தேநல் பட்டங்கள் பெற்ற சான்றோர்
 பச்சோந்திக் கூட்டம் போல் வாழ்கின்றார்கள்
இடித்துரைக்கத் தெரியவில்லை! எவர் வந்தாலும்
 இளிக்கின்றார் போய்ப்பல்லை தன் வாழ்வுக்காய்
நடிக்கின்றார், கிடைப்பவற்றைச் சுருட்டிக்
 கொண்டு
 நண்டுகள் போல் விரைகின்றார்! இவர்கள்
 போக்கை
அடிக்கின்ற நாளில் தான் தமிழும் வாழும்
 அடிமை யெனும் விலங் கொடியும்! அறிவு,
 சேரும்!"

தொண்டென்றால் பொருள் என்ன? அன்பு நெஞ்சில் சுடர்விட்டு எரிகின்ற விளக்கே என்று தெளிவு படுத்துகிறார் பெருங்கவிக்கோ. 'பண் பின் விடிவெள்ளி பொதுநலத் தொண்டேன்பேன்' என்றும் கூறுகிறார்.

பொது வாழ்வில் ஈடுபடுவோர் பண்புநலம் சிறந்தவர்களாய் விளங்க வேண்டும். பகுத்தறிவால் உண்மைகளை உணரும் திறமும் அவர்க்கு வேண்டும். கேள்வி ஞானத்

தால் தெளிவு பெறுவோராகவும் அவர்கள் இருத்தல் வேண்டும்.

'பகுத்தறிவே காதினுக்குக் கதவும் ஆகும்
பாசாங்குக்காரர் பலர் வருவார் உன்போல்
மிகுத்தறிவு உள்ளவர்கள் இல்லை; நீயே
மேலாளர் எனச்சொல்லி ஏற்றிப் பின்னர்
தகுந்தமுறை பயன்படுத்திச் செயல் முடித்துத்
தரங்கெட்டுப் போய் விடுவர்! அதனால் இந்த
வகைகெட்ட மனிதர்தம் ஏமாற்றுச் சொல்
மயங்காத செவிவேண்டும் மாண்பும் வேண்டும்'

என எச்சரிக்கிறார் கவிஞர்.

நாடு நலம் பெறுவதற்கு மாண்புகள் பல ஓங்க வேண்டும் என்று அவர் வலியுறுத்துகிறார். முன்னேற்றம் எங்கும் ஏற்படுவதற்கு என்ன என்ன வேண்டும் என்றும் அவர் அறிவுறுத்துகிறார்.

'மாண்பு பல இந்நாட்டில் ஓங்கவேண்டும்
மலர் அறிவு நிலைபெறவே வேண்டும்!
காண் இன்பம் எல்லாம் இங்கெல்லோருக்கும்
கண்டிப்பாய்த்தான் கிடைத்தல் வேண்டும்
வேண்டும்
கூண்டினிலே வாழ்கிளியாய்ப் பிறரை எண்ணிக்
குரங்காகத் தானாகிக் கொடுங்கோல் செய்யும்
மூண்டஇகழ் மூர்க்கரினை ஒறுக்க வேண்டும்
முன்னேற்றம் நாள்தோறும் வையம் வேண்டும்

வையத்தில் பொய்புரட்டு மடியவேண்டும்
வரலாற்றில் தமிழர்புகழ் ஓங்கவேண்டும்

ஐயத்தைக் களையும் நல்லறிவு வேண்டும்
... ... ... ... ... இங்கே
நையத்தான் வாழ்கின்ற வாழ்வு மேலும்
நாம் அடையா நிலை பெறவே வேண்டும்
இந்த
வையத்துள் ஊரை ஏமாற்றுகின்ற
வஞ்சர் செயல் தானொழிய வேண்டும்
வேண்டும்!'

ஊரும் நாடும் உலகமும் உய்வதற்காக நலன்களும் வளங்களும், அன்பும் ஒற்றுமையும் எங்கும் பெருக வேண்டும் என்று நல்லெண்ணம் வளர்க்கும் விரிந்து பரந்த பேருள்ளம் பெற்றவர் பெருங்கவிக்கோ. அவர் கவிதைகளில் இவ்உள்ளத்தின் ஒளி சிதறிக் கிடப்பதை ரசிகர்கள் காண முடியும். வரம் வேண்டும் என்று குரு தேவனை எண்ணித் துதிக்கும் இசைப்பாடலில் இது நன்கு ஒளிர்வதை உணரலாம்.

தானும் தன்னை சேர்ந்தவர்களும் வாழ வேண்டும் என்று கோரி வரம் கேட்கவில்லை கவிஞர். வையம் வாழ வாழும் வரம் வேண்டும் என்றே அவர் பாடுகிறார்.

'கரவுடையார் நெஞ்சமென்றன்
கவிதையினால் இளக வேண்டும்
இரந்துண்ணும் தீமை உலகில்
இல்லாமல் ஆக வேண்டும்'

என்று அவர் விருப்பம் தெரிவிக்கிறார்.

ஒரு நாட்டில் வாழ்வில்லை. அதே சமயம் இன்னொரு நாட்டில் வளங்கள் கொழிக்கின்றன. வளம் பெற்ற நாடு வறுமை நாட்டை வாழ வைக்க வேண்டும்; தீய தாழ்வை நீக்க வேண்டும்.

'வறுமை யெலாம் நீங்கவேண்டும்
வையகமே பகிர்ந்துண்ணும்
தறுகண்மை வாழவேண்டும்
தலையான பண்பு வேண்டும்'

உலகமெல்லாம் ஒரு குடும்பம் போல் வாழ வேண்டும். பகைமை கொண்டு ஒருவரை ஒருவர் வெட்டிச் சாய்க்கும் போக்கு நீங்க வேண்டும். நிலையான அறங்கள் வளர்ந் தோங்க வேண்டும்.

'பட்டினிகள் ஒழிய வேண்டும்
பகிர்ந்துண்டே வாழ வேண்டும்
கெட்டவர்கள் திருந்த வேண்டும்
கேவலங்கள் மறைய வேண்டும்'

இவையெல்லாம் ஈடேற வரம் வேண்டும் என இசைக் கின்ற பெருங்கவிக்கோவின் உள்ளம் உண்மையான மனித உள்ளம் என்பதில் ஐயம் உண்டா?

சாத்திரத்துக் குப்பைகளை எருவாக ஆக்கி
சமயங்கள் வேற்றுமையைக் குழிவெட்டிப்
போட்டு
கோத்திரங்கள் சாதிமுறை மண்ணெடுத்து மூடி
குறிக்கோளில் மதங்களுடை வேற்றுமையை
வீழ்த்தி
ஏத்து புகழ் ஒழுக்கநெறி உண்மைபுகழ் அன்பு
உயிர்வாதை செய்யாத குணங்கள் பின்பற்றித்
தீத்திறங்கள் வாராத சமரசத்தின் மார்க்கத்
தெளிவொன்றே உலகிணைக்கும்'

என்று வள்ளலார் வழியில் முன் செல்வதில் ஆர்வம் கொண்டுள்ளார் பெருங்கவிக்கோ.

எல்லோரும் இன்பமாய் வாழ வேண்டும் என விரும்புகிறார் பெருங்கவிக்கோ. அவரவர் குடும்பமும் உறவின் முறையாரும் வறுமை இல்லாமல் வாழவும், தீமை உள்ள சிறுமைகள் இல்லாமல் சீர்பெறவும் ஒவ்வொருவரும் எண்ண வேண்டும் என்று அவர் கூறுகிறார். ஆசையை அடக்கு, இன்பங்களைத் துறந்துவிடு என்று சந்நியாசிகள் போதிப்பதை கவிஞர் ஆதரிக்கவில்லை.

'ஓங்கும் நல்லாசை உயரட்டும் வான்விஞ்ச
தேங்கு நல்நிலைகள் சிறக்கட்டும் பறக்கட்டும்!
கொதிக்கும் மனத்தாசை கொழுந்து விட்டே
எரியட்டும்!
மதிக்கும் அருளாட்சி மாட்சி அங்கே செழிக்கட்டும்!
மறவாதீர் விருப்பொன்றே மங்கலமாய்
வாழ்வதற்குத்
திறமான கருப்பை!'

என்று அவர் அறிவுறுத்துகிறார்.

பெருவேந்தன் புத்தன் பேராசையை துறந்தான். துறப்பதற்கு அவனிடம் இருந்தது. அதனால், ஒப்பற்ற வேந்தனவன் துறந்தான். ஒன்றுமே இல்லாத ஓட்டாண்டிகளான சாதாரண மக்கள் இன்றே விடுக்கின்றேன் எல்லாம் துறக்கின்றேன் என்றால் எதைத் துறப்பார்கள்?

'நின்று வருந்தி நேர்மை உழைப்பீந்து
வென்று பின்னர்நாம் விரும்பும் நலம்பெற்றே
சென்றால் துறவுக்குச் சிறப்புண்டாம் ஒன்றுமே
இல்லாதான் புத்தனை எடுத்துக்காட்டாய்க் கூறி
வல்லடி பேசுவதா வாய்மை? புத்தன் போல்
சித்தம் வரவேண்டல் சிறப்பு அவர் கொண்ட
இத்தரை மதிபொருளை இழக்க ஈட்டியபின்!'

பெருங்கவிக்கோ சிந்தனையின் புதிய வீச்சும் புதுமை நோக்கும் இதில் சுடர் விடுகின்றன. துறப்பது பெருமை தான்; தகுதி சேர்த்து, வாழ்க்கை வசதியும் வளங்களும் அதிகமான பிறகு துறக்க வேண்டும்; அச்செயல்தான் மாண்புடையதாகும் என்று கவிஞர் கருதுகிறார்.

'கோடி கோடியாகக் குறையாத பெருஞ்செல்வம்
தேடித்தேடியே செம்பொருள் குவியுங்கள்
குவித்த பொருளை குவலயத்திற் களியுங்கள்
தவித்த நெஞ்சத்தால் தவப்புத்தன் போல் துறந்து
செல்லும் நிலையெண்ணிச் சிறப்பைக் காண் போமே!
வெல்லும் நிலையீதே வேறுநிலையானறியேன்!'
பேரறத்தைச் சிந்தியுங்கள் பெருங்கொடைகள் செய்திடுங்கள்!'

என்று அவர் எடுத்துச் சொல்கிறார்.

பாதகமில்லாத வாழ்வுதான் நிலையாக நிற்கும். யார் தீமை செய்தாலும் நாசமாய்ப் போவார்கள்' யார் நன்மை செய்தாலும் நற்பெருமை அடைவார்கள், இவை தான் நீதி, இதை மனசில் இருத்துங்கள் என்றும் அவர் அறிவிக்கிறார்.

'அன்பு நலம் நெஞ்சத்தில் சுரக்க வேண்டும்
அறிவு நலம் எங்கனுமே சிறக்க வேண்டும்
தன்னலமில் உயர்வுநெறி தழைக்க வேண்டும்
தமிழனெனில் தமிழுயர்வை எண்ண வேண்டும்
இன்னலிலே உதவியவர் போற்ற வேண்டும்
இன்ப துன்பம் சமநிலையில் வாழவேண்டும்'

என்றும் நலம் மிகுந்த வாழ்வின் தன்மைகளை சுட்டிக் காட்டுகிறார் பெருங்கவிக்கோ,

தோல்வி கண்டு அஞ்சி வாழ்தல் சோம்பேறிகள் வழக்கம். பிறர் கால் பிடித்தே அதனை மாற்றல் கயவர்களின் பழக்கம். அடுத்தடுத்து வீழ்வே வரினும் அச்சம் கொள்ளாத! உன்னைக் கெடுத்த வஞ்சர் போற்றி வாழும்? கீழ்மை எண்ணாதே. நேர்மை ஒன்றே நீனிலமும் நிலையான சொத்து; ஏற்ற கூர்மை அறிவு முயற்சியாலே கொடுமைகள் ஏத்து! இவ்வாறு மக்கள் உணர வேண்டிய உண்மைகளை தம் கவிதைகளில் மின்னச் செய்கிறார் கவிஞர்.

'உறுதி யெனும் மூச்சில் உயர்வதே முதலாகும்
ஊக்க மெனும் ஆக்க நோக்கமே நலமாகும்
இறுதி வாராமல் எண்ணுதல் உயர்வாகும்
இதயம் வளர்க்குமிப் பயிற்சியே பயிராகும்'

என்றும் அவர் சிந்தனை விருந்து அளிக்கிறார்.

தருமநெறி பற்றி எண்ணிப் பார்க்கத் தூண்டும் பெருங்கவிக்கோ, சாவையும் வாழ்வையும் சமமாக மதிக்கும் தன்மை பெறவேண்டும் என்று கூறி, அந்த மன நிலையை விவரித்துப் பாடியுள்ள பாடல் உள்ளத்தில் பதிய வைத்துக் கொள்ள வேண்டிய வாழ்க்கை உண்மைகளை விவரிக்கிறது.

பிறந்த நாளும் இறந்த நாளும் ஒன்று எனக் கருதும்படி கூறும் கவிஞர் பெற்றவரும் மற்றவரும் ஒன்று; வீணாகச் சென்ற நாளும் வென்ற நாளும் ஒன்று; குற்றங்களும் குணங்களும் ஒன்று! அன்பு கொண்டவரும் வஞ்சகரும் ஒன்று என மதித்திடச் சொல்கிறார்.

'பத்து மாதம் சுமந்த தாயும் பாதகங்கள்
செய்யலாம்—கல்வி
பரிந்தூட்டும் தந்தைகூடப் பண்பிலாதே எய்யலாம்

ஒத்த உயிர் உடன்பிறப்பும் மெத்தப் பொய்மை
பெய்யலாம்
ஓங்குபுகழ் ஞானி உள்ளம் கூடக்கள்ளம்
செய்யலாம்
கற்புடைய பெண்களிலும் காதகிகள் உண்டடா
வேசிக்
கன்னியருள் கூடப்பண்புப் பெட்டகங்கள் நன்றடா!
கற்றவருள் கூடத்தீய கள்வர்களும் உண்டடா
ஒன்றும்
கல்லாதாரில்கூட உண்மை நல்லவர்கள் நன்றடா!'

ஆகவே விருப்பு வெறுப்புகள் கொண்டு வீழ்ச்சி அடையாமல், பகை வளர்த்து இன்னலில் ஆழாமல், அனைத்தையும் கண்டு தேர்ந்து தெளியும் ஞானமும் கூரிய சிந்தனை ஆற்றலும் பெறவேண்டும் என்பதே கவிஞரின் குறிக்கோள்.

'குறிக்கோள் நெஞ்சம் கொண்டு சுமந்தே
கோபுர வாழ்வைக் குறிப்பேன்—இன்ப
வெறிகொள் எண்ணம் சுமந்து சுமந்தே
விரும்பித் துன்பம் ஏற்பேன்!
மெய்யே நினைந்து விடிவே கருதி
வெல்லும் வகையில் உழைப்பேன்—மேன்மை
எய்யும் உணர்வை இதய உலையில்
இட்டே எஃகாய்ச் சமைப்பேன்!'

என்று அவர் தனது உள்ளத்தின் இயல்பையும் வெளிப் படுத்துகிறார்.

நினைத்தது எல்லாம் நினைத்தபடி நடக்காமல் போகலாம்; அதற்காக நெஞ்சம் மலைக்கலாகாது; மனத் தினில் எண்ணியவை மாறிப் போய்விடின் மயங்கிச்

சளைக்கக்கூடாது என்று உணர்த்த விரும்புகிறார் பெருங் கவிக்கோ. உலக நியதிகளையும் வாழ்வின் முரண் களையும் விளக்கி, 'நெஞ்சே மலைக்காதே' என்ற பாடலை அவர் பாடியிருக்கிறார். முடிவாக அவர் தைரியம் ஊட்டுகிறார்.

'எல்லையில்லாத சோதனையில்லிறை
எண்ணிவாய் மூடாதே—உன்றன்
வல்லமை முயற்சி காட்டி வெல்லாமல்
பேடியாய் வாடாதே!
துன்பம் வந்தால் சோர்ந்து போகாதே
துயரச் சேற்றினிலே—மலர்வதோ
இன்பத் தாமரை இதை மறவாதே
இதயமே முன்னேறு!'

தோல்வி கண்டு துவண்டு விடாமல் சுடர் முகம் தூக்கு! வெற்றிக்குக் கால் கொள்வது உனது உழைப்பு தான். எனவே கடமை மறவாதே என்று கவிஞர் ஊக்கம் அளிக்கிறார்.

வாழ்வில் வெற்றி பெறுவதற்கு வேண்டிய பண்புகள் குறித்து பெருங்கவிக்கோ பாடியுள்ள கவிதை என்றும் நினைவில் நிறுத்த வேண்டிய நல்லுரை யாகும். அவர் சொல்கிறார்—

'கடல் போன்ற எண்ணம் வேண்டும்
கருத்தெல்லாம் பிறருக்காகத்
தடம்புரளாத வாறே
தகைவளம் காக்க வேண்டும்
திடம் வேண்டும் திறமை வேண்டும்
சேராறு தம்மை வாரி
உடன்கொண்டும் அலைகள் வீசும்
ஓயாத பணியும் வேண்டும்!

விரிவானம் போன்ற நெஞ்சம்
வேண்டுமாம் அங்கே வையம்
புரிசெயல் விளக்கம் காணும்
பகலவன் நிலவைப்போன்ற
இருவிழி நோக்கம் வேண்டும்
இருவிழி அறிவு கொண்டே
தருநலம் பலவும் ஆக்கும்
தரம்வேண்டும் திறமை வேண்டும்!'

*ஏடுகள் பற்பல எழுதிப் பயனில்லை; இதயத்தில் செம்மை வேண்டும்; ஒற்றுமையை வலியுறுத்தும் சிந்தனையை வளர்த்து நன்றாய் நாம் உழைத்தால் வெற்றி நோக்கி நெஞ்சு நிமிர்த்தி நடக்கலாம் என்றும் உறுதி கூறுகிறார் கவிஞர்.*

# 10. இயற்கையை வியத்தல்

கவிஞர்கள் பெரும்பாலும் இயற்கையை வியந்து பாடுவதே இயல்பாக—மரபாக—இருந்து வருகிறது. நிலாவை நீலவானை, விண்மீன்களை, மலர்களை, மற்றும் பல இயற்கை நலன்களையும் அழகுகளையும் போற்றியும் ரசித்தும் கவிஞர்கள் பாடாமல் இருப்பதில்லை.

ஆனால் பெருங்கவிக்கோ இவ்வகையில் ஒரு விதிவிலக்காகவே திகழ்கிறார். இயற்கை அழகுகளையும் காதலையும் பெண் வர்ணனைகளையும் அவர் விரும்பிப் பாடியதில்லை என்றே சொல்லலாம்.

'கவிஞரின் பாடல்களில் இயற்கை, காதல், இளமை நலம், அமைதி முதலியனவற்றை அரிதாகவே காண்கிறோம், தமிழுக்காகப் போராடும் இந்த மறவரிடத்தில் களப்போர் வெறுப்பையும் காண முடிகிறது. உலகில் எங்கெங்கு போரினாலும் பூசல்களினாலும் கொலைகள் நடை பெற்றுள்ளனவோ அவற்றை யெல்லாம் கவிஞர் வெறுத்து உலக அமைதியைப் பாடியிருக்கின்றார். தமிழ்க் கவிஞராக, இந்தியக் கவிஞராக, உலகக் கவிஞராக, மானிடம் பாடும் மகத்தான கவிஞராகப் பலவாறு காட்சி தருகிறார் பெருங்கவிக்கோ' என்று. 'கவிதைக் கதிரோன்' என்ற தொகுப்புக்கு ஆய்வுரை எழுதியுள்ள பேராசிரியர் டாக்டர் இரா. குமரவேலன் குறிப்பிட்டிருப்பது நினைவு கூரத் தக்கதாகும்.

எனினும், பெருங்கவிக்கோ இயற்கை அழகுகளை ரசிக்கத் தவறுவதில்லை என்பதை அவரது கவிதைகளிலும் பயண நூல்களில் இடம் பெற்றுள்ள விவரிப்புகள் உணர்த்துகின்றன.

துருக்கி சென்றபோது கவிஞர் கண்ட வான வனப்பை அவர் உரைநடையிலும் கவிதையிலும் பொறித்திருப்பது படித்துச் சுவைப்பதற்குரிய பகுதியாகும்,

'விமானம் இஸ்டான்புல் நோக்கிப் புறப்படப் போகிறது. ஓடி மேலே எழும்பியவுடன், கடல் வெளிகள் கண்ணுக்குத் தெரிந்தன. பின் மலைவெளி, பின் சமவெளி வெட்டவெளி தெரிந்தது. மேக மூட்டங்கள் கலைந்து சென்றன. வட்ட வடிவத்துக்குள்ளே விட்டெறிந்த பறவை போன்று குட்டி விமானம் செல்கிறது, மேல் வானம் நீலம். கீழ்வானமும் இடை இடையே திட்டுத் திட்டான கார்மேகக் கூட்டங்களோடு நீலம் கலந்த நிலையில் இருந்தன. சுற்றிச் சுற்றிச் சுவர் வைத்தாற் போல, வெண்மேகக்குவடுகள் சூழ்ந்திருந்தன. விமானம் மேலே விரைகிறது.

'ஏறுதே ஏறுதே ஏறுதே—விமானம்
இடிக்க எண்ணி வானம் நோக்கி ஏறுதே!
மீறுதே மீறுதே மீறுதே—கடலின்
மேலே சென்று வானம் நோக்கி மீறுதே
கூறுதே கூறுதே கூறுதே—கொள்கை
கொண்டோர் உறுதி கொண்ட தன்மை
கூறுதே!
வீறுடன் பறந்து சென்று விம்முதே-கார் கொள்
மேகத் தடை விழித் தெழுந்து வேகம் ஆகுதே!'

இவ்விதம் இயற்கையை வியந்து பாடும் போது கூட, கொள்கை கொண்டோர் உறுதி கொண்ட தன்மையை

அது எடுத்துக் காட்டுகிறது என்று குறிப்பிடுகிறார் கவிஞர்

இவ்வாறே, இருள் விலகி விடியல் தோன்றுவதை விவரிக்கும் ஒரு சந்தர்ப்பத்திலும் சில உண்மைகளை இயற்கை அறிவுறுத்துகின்றது என்று பொருத்தமாகப் பாடியிருப்பது பாராட்டுதலுக்குரியது.

'பரிதி கீழ் வான்
வாரி இருந்து வண்ணக் குழம்பைச்
சீரின் கலந்து தெளித்திடும் நேரம்,
கருக்கிருள் கலைந்தது! காலை எழுந்தது!
வருத்தம் சோர்வை மனிதரே விடுத்துத்
திருத்தம் காணத் தெளிவு பெறுக!
பெருமை தேடப் பீடுடன் முயல்க!
ஆற்றல் சிறகை அகல விரிக்க
நோற்றல் தவத்தால் நுண்மை தேடுக!
மாற்றம் சுருதி மதி இழக்காதீர்!
கூற்றம் வருமுன் குடிப்புகழ் சமைக்க
இரவு மயக்க எண்ணம் விடுக!
கரவு நெஞ்சக் கயமை கெடுக!
உறவால் வையகம் உவக்க எண்ணுக
துறவு மனத்தால் தொண்டு பண்ணுக
என்றறை கூவல் நன்று விடுத்தல் போல்
தண்சிற கார்க்கும் பன்மணிப் புள்ளினம்
அறிவிக்கின்ற ஆர்புள் ளொலிகள்
வெறி விலக்கல் போல இருளும் விலக்கும்'

என்று இனிமையாகப் பாடியுள்ளார்,

இயற்கையில் அழகு சிரிக்கின்ற தன்மைகள் குறித்து பெருங்கவிக்கோ ஒரு நீண்ட கவிதையில் விரிவாகவே பாடு

கிறார். காடு குறித்துக் கவிதை இசைக்கும் முன்னர் அவர் பொதுவாக விவரிக்கிறார்—

'வானாகி அழகுத்தாய் சிரித்ததாலே
வையத்தாய் சிரிக்கின்றாள்! வளைந்து சூழும்
கோனாகிக் காற்றென்பான் வீசும் அன்பால்
குவலயத் தாய் சிரிக்கின்றாள்! இன்பம் இன்பம்
ஊனாகி உயிராகி உலகம் முற்றும்
உள்ளதெல்லாம் இயற்கைத் தாய் சிரித்து
நின்றாள்!
தேனாகி நீராகித் தீயும் ஆகித்
திக்கெல்லாம் சிரிக்கின்றாள்! விந்தை விந்தை!
விண்ணகத்தில் கதிரவனாய், மதியாய் நின்று
விளையாடி ஒளிசிந்தி நகைத்து நின்றாள்!
மண்ணகத்தில் வான்மழையைப் பெற்றே இன்ப
மலர்ச்சியினை வளர்ச்சியினை விரித்து
நின்றாள்
கண்ணகத்தில் கடல்மலையில் காணும் காட்சிக்
கவின் பொருள்கள் அனைத்திலுமே திளைத்து
நின்றாள்'

என்று கவிஞர் வியக்கின்றார்.

மேலும் அழகு சிரிக்கும் விந்தைகள் பலவற்றைக் கூறி விட்டு நயமாக இசைக்கின்றார் :

'அழகைத் தான் உயிரென்றால் உடலே வையம்!
ஆகும் இவ்விரண்டாலே அகிலம் உய்யும்
விழைகின்ற இன்பத்துள் அழகிருப்பாள்!
விரும்பாத துன்பத்தும் அவள் சிரிப்பாள்!

தழல் நடுவின் தீ நாவில் சார்ந்து நிற்பாள்!
சாகாத என் கவிதை ஒளிர்ந்து கற்பாள்!
சுழல் காற்றுப் புயலிடையும் நகைப்பாள்! கண்கள்
சுற்று பார்வை முற்றுமவள் கற்று நிற்பாள்!
மதுகைக்கத் தனிச் சுவையை ஈயும் ஒப்பில்
மாதுளத்தின் முத்தினிலே மகிழ்ந்திருப்பாள்
எதுகைக்கு வந்தாலும் எதுகை ஆக்கும்
ஈடில்லாப் புலவனுளம் சிரிப்பாள்! இங்கே
அது கைக்கும் இது கைக்கும் என்பாருக்கும்
அம்மானின் மகளழகில் சுவையாய் நிற்பாள்
இது கைக்கு வரைய வொண்ணா ஓவியம் தான்
எழிற்றாயாள் அழகைத் தான் என்ன
என்பேன்!

நயமும் சுவையும் கலந்த கவிதை இது, காடு பற்றிக் கவிஞர் பாடியுள்ள பகுதிகளும் படித்துச் சுவைத்து இன்புற வேண்டியவை. எடுத்துக்காட்டாகச் சில வரிகளை இங்கு கூறலாம்—

'பச்சை மரகதமாய், பன்னூறு அதிசயமாய்
இச்சைக் கிசைந்த எழில் மேனித் தன்னொளியாய்
ஆடும் பொன் விளக்காய், ஆசை தமை ஒழித்த
ஞானியர் தமக்கும் பேர் நல்கும் இருப்பிடமாய்,
வானை அளாவும் வனப்புள்ள கனமரங்கள்
செறிந்து வளர்ந்து திகழ் நிழல் தான் கொடுக்கும்
கைபுனைந் தியற்றாக் கவினெல்லாம் இயற்கைத்
தாய்.

தைபுனைந் தியற்றும் தனிப் பெரும் காவியமாய்
இருந்தே அழியாத இன்பத்தை என்றென்றும்
அருந்தக் கொடுத்த அழியாத செல்வம் தாய்
நிறைந்து நிற்பதன்றோ, நெஞ்சினிக்கும் காடு!'

இன்னும் காட்டில் கிடைக்கும் பொருள்கள், வாழ்கிற பறவைகள் மிருகங்கள், விஞ்சும் அழகு நிறைந்த காட்டின் பத்தை எல்லாம் அழகாகச் சுட்டிக் காட்டுகிறார் கவிதையில்.

அப்படி இயற்கை வளங்களையும் அழகையும் பாட முற்பட்ட போதுகூட, மனிதர்கள் செய்யும் கொடுமை பற்றி வேதனையோடு சுட்டத் தவறவில்லை அவர்

'நாட்டகத்தில் நடக்கின்ற கொடுமை—அன்பு
நல்லோரை நடுங்கச்செய் கொடுமை பண்பை
ஈட்டுகின்ற அறிவோர்க்குத் தீமையாலே
ஈனத் தனம் செய்யும் கொடுமை—இன்பக்
காட்டகத்தே கிடையாது! கரடி சிங்கம்
கடுவரியுள் புலியுடனே மான்கள் கூடக்
கூட்டுறவாய் வாழ்கையிலே மனிதா நீயோ,
கொடுமைக்கே வாழ்கின்றாய்! வெட்கம் வெட்கம்!

பறவையினம் ஒன்றாகக் கூடும் காட்சி
பங்கயப்பூ மலர்ந்திருக்கும் காட்சி ஒக்கும்
உறவாகி அவையெல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்தே
உள்ளன்புக் கிலக்கணமாய் வாழும்! மாந்தர்
கரவுக்கே அங்கிடமே இல்லை; பொல்லாக்
கயமைக்கே இடமில்லை! திருட்டும் இல்லை!
புறங் கூறும் நிலையில்லை! கீழ் மேல் என்னும்
பொல்லாங்கும் அங்கில்லை! பொறாமை இல்லை!'

என்று சமுகத்தில், நாட்டில் நிலவுகிற சிறுமைகளை பெருங்கவிக்கோ சாடுகிறார்.

# 11. உவமை நயம்

உவமைகள் கவிதையின் அழகை அதிகப்படுத்து கின்றன; கவிதைக்கு வலிமை சேர்க்கின்றன. சொல்ல விரும்பும் கருத்தைத் தெளிவுபடுத்த உவமைகள் உதவு கின்றன.

அத்துடன் கவிஞனின் கற்பனை வீச்சையும், அனுபவப் பரப்பையும், சிந்தனைத் திறத்தையும் அவை புலப்படுத்துகின்றன. வாழ்க்கையையும் மனிதர்களையும் இயற்கைச் சூழலையும் கவிதை படைப்போன் எவ்வளவு ஆழ்ந்து கவனித்திருக்கிறான் என்பதை அவன் கையாளும் உவமைகள் எடுத்துக்காட்டுகின்றன. ஒரு உண்மையை சுட்டிக் காட்ட விரும்புகிற படைப்பாளி படிப்போரின் மனதில் அதை அழுத்தமாகப் பதியச் செய்வதற்காக பொருத்தமான உவமைகளை எடுத்தாள்கிறான். சில சமயம், பொருந்தாத விஷயங்கள் போல் தோன்றுகிற வற்றைக்கூட, தான் சொல்ல வந்த விசயத்தோடு பொருத்திக் காட்டி வெற்றி பெறுகிறான். அப்போது படைப்பாளியின் திறமை அதிகம் ஒளி வீசுகிறது என்றே சொல்ல வேண்டும்.

கவிதைப் படைப்புகளை அழகு படுத்தவும் மெரு கூட்டவும் உவமைகளைப் பயன்படுத்துகிறார்கள் கவிஞர் கள். பெருங்கவிக்கோவும் ரசித்துப் பாராட்டும்படியாக உவமைகளைத் தமது படைப்புகளில் ஆங்காங்கே பதித்து வைத்திருக்கிறார்.

கவிஞர் ஒரு உண்மையை எடுத்துச் சொல்ல முனை கிறபோது, அடுக்கடுக்காய் பல உவமைகளை அழகுறக் கூறிச் செல்வதை அநேக இடங்களில் காண முடிகிறது. அவை தெளிந்த நீரோட்டம் போல், இயல்பாய் சரள மான சொல் ஓட்டமாக அமைந்துள்ளது. ரசனைக்கு நல்விருந்தாகும்,

எடுத்துக்காட்டாக ஒன்றைக் கூறலாம்—

'இருள்நடுவே ஏற்றிவைத்த விளக்கைப் போலும்
இதயவாசல் திறக்கின்ற திறத்தைப் போலும்
பொருள்தந்த இன்பநிலைத் தன்மை போலும்
பூரித்தார் நெஞ்சத்தின் மகிழ்வைப் போலும்
மருள்நீக்க எழுகின்ற உண்மை போலும்
மணமக்கள் காண்கின்ற மணவி ழாதான்
திருமணமாய் முன்னடத்தல் கண்டோம்!'

மணவிழா இனிது நடத்தலுக்கு இப்படி அநேக உவமைகளைக் கூறிச் சிறப்பிக்கிறார் கவிஞர்.

உவமையைப் படைக்கும்போதுகூட பெருங்கவிக் கோவின் மனித நேயமும், உழைப்போரின் அவல நிலைக் காக மனவேதனை கொள்ளும் இயல்பும் மேலோங்கி ஒலிப்பதை அவரது கவிதைகளில் காணமுடியும்.

'மண்ணைத் தோண்டியே பயிர் விளைக்கும் தொல் புகழ் பெருமக்கள்தான், தூண்டில் முள் புழுவை உண்ட துள்ளுமீன் போல வாழும் நிலை' என்று ஒரு இடத்தில் பொருத்தமாக அவர் வர்ணித்திருக்கிறார்.

ஆடை உற்பத்தி செய்கிறவர்கள் போதுமான அளவு உடை உடுத்த இயலவில்லை. உழைக்காத செல்வர்களோ பகட்டாக அணிந்து மினுக்குகிறார்கள். இந்த முரண்பாடு ஒழிக்கப்பட வேண்டும் என்று வலியுறுத்த

வந்த கவிஞர் ஒரு உவமையைக் கூறி விளக்குவது கவனிப்புக்குரியது :

‘உற்பத்தி செய்தோ னுக்கோ
ஓராடை மேலே இல்லை!
பிற்புத்திச் செல்வ ருக்கோ
பெருந்துணிப் பட்டுப் போர்வை!
சிற்பத்தைச் செய்தோன் கண்ணைத்
தீக்கம்பால் குத்த லைப்போல்
அற்பர்கள் வதைக்கும் போக்கை
ஆழத்தில் புதைப்போம்’

தமிழில் எத்தனை எத்தனையோ உயர்ந்த படைப்புகள் இருக்கின்றன. அவற்றின் பெருமை தமிழ் நாட்டுக்கு வெளியே பரவவில்லை. தமிழகத்தில் கூட அவற்றின் மாண்பை அனைவரும் அறியும்படி உணர்த்தப்படவில்லை. நமது செல்வச்சிறப்புகளை உலகத்துக்கு எடுத்துச் சொல்ல எவரும் முனையவில்லை. இந்த நிலையை எடுத்துக்கூறும் பெருங்கவிக்கோ அடுக்கு அடுக்காய் உவமைகளையும் பொருத்தமாகப் பாடியுள்ளார். உண்மை நிலையை அழுத்தமாய் சுட்டுவதற்கு அவ்வுவமைகள் உதவுகின்றன. கவிதை இதோ—

‘புதையலைத் தோண்டிப் பேழையிலே பூட்டி
வைத்துக்
கதையளந்த தன்மையைப் போல்—கனல்துண்டைப்
பாதுகாப்பாய்
ஒளி மறைத்து வைத்த உயிர்ப்பில்லாத் தீமையைப்
போல்
வண்ண எழிற் சோலை வாசலை அடைத்ததுபோல்
தண்ணிலவை வேண்டுமென்றே தான் சிதைத்த
கொடுமையைப் போல்

பண்ணார்ந்த இசை யமுதின் பயன்கேளாச்
செவியினைப் போல்
கண்ணின் ஒளியை நம் கையால் மறைப்பது போல்
களிபேருவகைக் கவித் துவத்தைச் செம்பொருளை
உலக உலா வலம் வரவே ஓங்குவிக்கும் செயலின்றி
சில சொல்லி நமக்குள்ளே திறம் பேசி
ஏமாந்தோம்.'

இற்றை நாள் தமிழரின் இனிய சமுதாயம் காய்ந்து மயங்கி கனியிழந்து போய்விட்டது அதனை பேரறிஞர்கள் ஆய்ந்து அறிந்த போதிலும் இந்த இழிநிலைக்காக வருந்தவில்லை என்ற உண்மையை கவிஞர் சுட்டிக்காட்டுகிறார். ஓரிடத்தில்- தமிழர் சமுதாயத்தின் காய்ந்த நிலைக்கு ஏற்ற ஒரு உவமையைப் பொருத்தியிருக்கிறார் அங்கே,

'பூத்துக் கிடந்த பொய்கை ஓர் நாளில்
காத்துக் கிடந்த கரவுடையான் உள்ளம்போல்
வற்றி வறண்டு வளம்குன்றிப் போனதுபோல்'

என்று.

மனிதரின் நிலைக்கும் செயலுக்கும் இயற்கையை, அதன் போக்குகளை. உவமை ஆக்குவது போல, இயற்கையின் செயல்பாடுகளுக்கு மாந்தரின் இயல்புகளையும் செயல்களையும் கவிஞர் உவமித்துக் கூறுவது சுவைத்து இன்புறத் தக்கது ஆகும்.

'ஈனம் செய்தவர் நெஞ்சு போல்—தீய
எண்ணம் கொண்டவர் துஞ்சல் போல்
மானம் இழந்தவர் வாழ்வு போல்—எங்கும்
வந்து சூழ்ந்திடும் மேகமே'

என்பது கவிதை

ஒரு கவி அரங்கத்தில் பெருங்கவிக்கோ தலைமை தாங்க நேர்ந்தது. அங்கே அரங்கில் அவர் போற்றும் அறிஞர்கள் சிலரும் இருந்தார்கள். அவர்களில் ஒருவரை தலைமை வகிக்கும்படி செய்யாமல், தம்மைத் தலைவராக் கியது பொருத்தமில்லை என்று கூற விரும்பிய கவிஞர் அழகான உவமைகளோடு இனிய கவிதையில் சுட்டியது நயமானதாகும். அவ்வரிகள்தான் இவை :

'வெண்ணிலா எரியும் போது
    விளக்கினை ஏற்றல் போலும்
தண்ணிய தடாகத் துள்ள
    தாமரைப் பூவை அந்தோ!
கண்ணிலான் பார்க்கச் செய்ய
    கட்டாயப் படுத்தல் போலும்'

என்னை நீர் தலைமை ஏற்கப் பணித்தீரே என்று குறை கூறியுள்ளார்.

கற்பனையில் ஆழ்ந்து விடாமல் வாழ்க்கை யதார்த் தங்களைப் பாடும் கவிஞர்கள் செயலை அவர் இவ்வாறு வியக்கிறார் —

'புனல்நடு ஓடம் போவதைப் போலே—வரும்
புகைநடு கனலும் ஒளிர்வதைப் போலே
வனம்நடு பசுமை மிளிர்வதைப் போலவே-ஆல்
மரம்நடு நிழலின் குளிர்மையைப் போலே
மனம்நடு அன்பின் மகிழ்ச்சியைப் போலே-
    கற்பின்
மாதரார் நடை கண்ட நெறியினைப் போலே
கனவிலா வாழ்வு நனவுகள் பாடும்-
    போற்றும் கவிஞர்'

மரபு ரீதியிலே கவிதைகள் யாத்து தமது ஆற்றலை நிரூபித்துள்ள பெருங்கவிக்கோ, யாப்பில்லாக் கவிதைகள் பாடுவதிலும் தமது திறமையை வெளிப்படுத்த முடியும் என்று காட்டுவதற்காக 'புதுக்கவிதை' முறையிலும் கவிதைகள் படைத்திருக்கிறார். அவற்றில் காணப்படுகிற உவமைகள் வாழ்வின் யதார்த்தங்களைப் பதிவு செய்துள்ளன.

'அரும் பாடுபட்டு
உழைக்கும்
கிராமத்துப் பெண்களின்
தலைகளைப் போல
பருவத்தின் வளர்ச்சியின்றி
புற்க ளெல்லாம்
பொசுங்கிக் காய்ந்தன.

பரலை ஆற்றின்இரு
பக்கக் கரைகளிலும்
உள்ள
பனை மரங்களும்
உடை மரங்களும்
பசியால் மெலிந்த
வறிஞர்களைப் போல
வாடின.

கள்ளிச் செடிகளும்
முள்ளுப் புதர்களும்
காய்ந்து கிடந்த
விறகுகளும் சுப்பிகளும்
உழைத்து உழைத்து

ஒய்ந்து போன
உழைப்பாளிகளின்
உள்ளத்தைப் போல
கருகிக் கிடந்தன!

எப்போதாவது வரும்
திருவிழாக்களில்
எப்படியும்
மகிழ நினைக்கும்
ஏழை எளிய
மக்களின்
மனதைப் போல
வழித்தட மெல்லாம்
ஆங்காங்கே உள்ள
ஆற்றின், கேணிகளிலும்
கிடங்குகளிலும்
தண்ணீர்
தேங்கி நின்றது,'

இவ்விதம் வகைவகையாய் உவமைகளை அழகாகவும் பொருத்தமாகவும், கற்பனை நயத்தோடும் கவிதைத் திறத்தோடும் பெருங்கவிக்கோ கையாண்டிருக்கிறார். அவரது கவிதைப் படைப்புகளில் அவை நிறைந்து காணப் படுகின்றன. அவற்றில் ஒரு சிலதான் இங்கு எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. ஆய்வு மாணவர்கள் பெருங் கவிக்கோவின் உவமைகள் பற்றி விரிவாக ஆராய்ச்சி செய்தால். அது பயனுள்ளதாக அமையும்.

இங்கு இன்னுமொரு உவமைக் கவிதையை மட்டும் எடுத்துக்கூற விரும்புகிறேன்,

நன்கு கல்வி கற்ற அறிஞர் பலர் மெய்த் துணிவோடு, நாட்டு நலம் கருதி, உண்மைகளை சுட்டிக் காட்டி. தவறு செய்வோரை மக்கள் மத்தியில் அம்பலப்படுத்தி, நேர்மை வழிநின்று நல்லன புரிய முன்வராததை சீறியும் சினந்தும் கண்டித்தும் எள்ளியும் பாடியிருக்கிறார் பெருங்கவிக்கோ பல இடங்களில். அந்த விதமான கவிதை ஒன்று. இதில் உவமைகள் பல சேர்ந்துள்ளன—

'வானகமே மழைநீரைப் பருகி விட்டு
வையத்தை வெறுப்பதுபோல்,அறஞ்செய்கின்ற
தானத்தான் பொருளையெலாம் ஏப்பம் விட்டுத்
தன்கையை விரிப்பது போல், நேர்மைநெஞ்ச
மானத்தை மாவீரன் துறப்ப தைப்போல்,
மாகல்வி படித்தபலர் இன்று தீய
ஈனர்க்குத் துதிபாடிக் கால்பி டித்தே
எத்தர்களாய் மாறிவிட்டார் மானக் கேடு!'

# 12. குறுங் காப்பியங்கள்

காலத்தின் தேவையையும், தாய் மொழியின் வளர்ச்சியையும் வளத்தையும் கருத்தில் கொண்டு புதுமையான கவிதைப் படைப்புகளில் தனது திறமையைக் காட்டி, பாராட்டத் தகுந்த வெற்றிகளைப் பெற்றிருப்பவர் பெருங்கவிக்கோ.

சமூகத்திலும் நாட்டிலும், மக்களிடமும் குறைபாடுகள் மலிந்து கிடக்கின்றன. கொடுமைகள் மண்டி வளர்கின்றன. அவற்றை எல்லாம் எடுத்துச்கூறி, மனிதர்கள் மனிதர்களாக வாழ்வதற்கான வழிவகைகளை சுட்டிக் காட்ட வேண்டியது படைப்பாளர்களின் கடமையாகும். கவிதைகள் மூலம் இதை சிறப்பாகச் செய்ய முடியும்.

இதை நன்கு உணர்ந்த பெருங்கவிக்கோ உணர்ச்சியும் வேகமும் நிறைந்த கவிதைகள் இயற்றியுள்ளார். தனித் தனியாக, சிறு சிறு கவிதைகளும்-நீண்ட கவியரங்கப் பாடல்களும் எழுதி, புதிய புதிய கருத்துக்களைக் கூறி சிந்தனை ஒளி பரப்பி வந்துள்ள கவிஞர், குறுங்காப்பியம் வழியாகவும் மக்கள் மனசில் பதியும்படியாக உண்மை நிலைமைகளை சித்திரித்திருக்கின்றார்.

இவ்வகையில் பெருங்கவிக்கோவின் 'விடிந்தால் விடுதலை?' என்ற குறுங்காப்பியம் குறிப்பிடத் தகுந்தது.

நாட்டுக்கு விடுதலை கிடைத்து விட்டது என்று "சுதந்திர நாள்" கொண்டாடப் படுகிறது. ஆயினும்

மக்களுக்கு உண்மையிலேயே விடுதலை கிடைத்திருக்கிறதா? சமுதாயத்தின் ஒவ்வொரு துறையிலும் ஒழுக்கக் கேடுகளும் பொய்மையும் தலைவிரித்து ஆடுகின்றன. மக்கள் தெளிவின்றி வாழ்கிறார்கள். படித்தவர்கள் சொரணையற்று வசிக்கிறார்கள். குடிப்பவர்களும் பொறுப்பற்றவர்களும் பெருகி விட்டார்கள்.

இத்தகைய போக்குகள் நீங்கி என்று விடிவு ஏற்படுகிறதோ, என்று பொய்மையும் பேடித்தனமும் போயொழிகிறதோ, என்று தீமை ஒடுக்கப்பட்டு நன்மை ஓங்கி வளர இடம் ஏற்படுகிறதோ, நாட்டிலும் சமூகங்களிலும் மலிந்து கிடக்கிற கீழ்மை இருள் எல்லாம் என்று முற்றாக மறைந்து மனித வாழ்வில் ஒளி நிறைந்த விடிவு தோன்றுகிறதோ, அன்று தான் உண்மையான விடுதலை பிறந்தது என்று கொள்ள முடியும். இதை அறிவுறுத்துவதற்காகவே பெருங்கவிக்கோ 'விடிந்தால் விடுதலை' என்ற குறுங் காப்பியத்தை படைத்திருக்கிறார்.

ஒரு 'சுதந்திர நாளின் முதல் நாள் இரவில் கவிஞருக்கு ஏற்பட்ட அனுபவங்களின் அடிப்படையில் இதன் கதை அமைந்துள்ளது,

அருட்கனி என்ற நேர்மையாளன், பிறர்க்கு உதவும் பண்பாளன், நல்ல மனிதன் தான் இக்காப்பியத்தின் தலைவன். விடுதலைக்கு முதல் நாள் இரவு தன் பணி முடித்து வீடு திரும்பும் அருட்கனி பேருந்து கிடைக்காமல் அவதிப்படுகிறார். மிகுந்த சிரமங்கள் அனுபவித்து, வழியில் அந்தப் பேருந்தைப் பிடிக்கிறார். அதில் உள்ள சிலரின் இழி செயலாலும் சுயமைத் தனத்தாலும் அவர் அடையும் துன்பங்களையும், பேருந்துப் பணியாளர்களின் போக்குகளையும், நீதி வேண்டிச் சென்றபோது காவல் துறையினர் நடந்து கொண்ட தன்மைகளையும், கொடுமைகளைக் கண்டும் சகமனிதர்கள் கொதிப்புறாமல் பொங்கி எழுந்து தட்டிக் கேட்காமல்—துயரங்கள்

அனுபவிக்கும் நல்லவனுக்கு உதவ முன் வராமல் இருக்கிற நிலைமையும், அருட்கனி உடல் சோர்ந்து உளம் வாடி, உடுத்திய வேட்டியையும் இழந்து, அரை ஆடையுடன் தன் வீடு சேர்வதையும் இக்குறுங்காப்பியம் எளிய, உணர்ச்சியும் ஓட்டமும் கொண்ட கவிதைகளில் விவரிக்கிறது.

காப்பிய இலக்கணத்துக்கு ஏற்ப நகர் வர்ணனையுடன் கதை தொடங்குகிறது. சென்னை மாநகரம் அதன் சிறப்புகளோடும் சிறுமைகளோடும் யதார்த்தமாகப் படம் பிடிக்கப்பட்டுள்ளது, கவிதையில் நகரின் தங்கொளிப் பெருமைகளைப் பாடுவது போலவே, 'புலையர் நகரினைப் போல், கொடும் பூமி கெடுக்க அரக்கரெலாம், நிலையாய்க் குடி புகுந்தார் என நினைக்குமளவுக்குச் சோரங்கள் மலிந்து கிடப்பதையும் உள்ளபடி பாடியிருக்கிறார் விஞர் நன்மை தீமை என்ற 'இரண்டு வகை நடு இந்த கர் வருந்திப் பிதுங்குவதாம்' என்று அறிமுகப் டுத்துகிறார்.

அடுத்து, அருட்கனியின் பண்புகள் நன்கு எடுத்துச் சால்லப் படுகின்றன. கவி ஆற்றலில் இணையிலா ரறனையான்; அறநெறிப்படி வாழ்வான், மறந்தும் மற்றவர்க்கே தீமை மனத்தாலும் நினையாத வலிமையுளான் திருப்பேராண்மை கொண்ட சீர் பேருளத்தான்; கயமை மாய்த்திடத் துடித்தெழு போர் வீரன் என்றெல்லாம் அவனது பண்பு நலம் பேசப்படுகிறது. முக்கியமாகக் குறிப்பிடத் தகுந்தது—

'சாமி இறைப்பற்றாளன்—எனின்
தண்ணார் இறைமையை எண்ணிவந்தால்
தீமை தன்னால் மடியும்—என்ற
சித்தாந்தம் இவனுக்கு ஒப்பதல்ல!'

அருட்கனியின் இல்லம், அவரது நற்பணி, அவர் ஈடுபடும் பல்வேறு வகைப் பயன்பணிகள், அவரது பணிச்

சிறப்புகள் என்று விரிவாக விவரித்தபடி வளர்ந்துள்ளது காப்பியம்.

பஸ் பயணத்தின் சிரமங்களும் கூறப்படுகின்றன.

'வருந்து நிலையினிலே—பேருந்தின்
வாசலேறிப் பின்னே உள்ளே சென்று.
இறங்கும் நிலைவரைக்கும்—அந்தோ
எத்தனை எத்தனை எத்தனை இடையூறு
கிறங்கிக் கிறுகிறுப்போம்—இடியில்
கிடந்து வதங்கி சோர்ந்து போவோம்
துறந்த துறவியைப் போல்—உந்தித்
தொடர்ந்து முயன்று ஏறிப்பின் நமை
மறந்தே செலவேண்டும்—இந்த
வகையில் கூட்டம் மண்டும், மண்டுமே!'

இது ஒரு சிறு எடுத்துக்காட்டு.

பேருந்தினுள் அருட்கனி சந்திக்க நேர்ந்த அனுபவங்களை சொல்கிற காவியம் சமூகத்தின் சீரழிவுகளையும் நாட்டின் அவலங்களையும் கூறுகிறது. விடுதலைத் திருநாள் பற்றிக் கூறி உண்மையான விடுதலை பற்றிய சிந்தனைகளை வலியுறுத்துகிறது.

'தீண்டாமை இந்த நாட்டில்
தெருவெல்லாம் சிரிக்க, ஈதை
பூண்டோடு ஒழிப்ப தாக
புறம்புறம் பேசு வோர்கள்
ஆண்டிடத் தாங்கள் மேன்மை
அணிபெறத் தலைவ ராக
தீண்டாமை வளர்த்தால் இந்தத்
தேசத்தின் வாழ்வும் உண்டோ?

அரசியல் வேட்டைக் கேதான்
அயராமல் விழிக்கின்றார்கள்
தரமிலார் உலுத்தர் தம்மை
தாம்சேர்த்து ஆட்டம்ஆடி
கரமேற்கும் வெற்றி கண்டு
கயவர்கள் கால்கள் பாதை
சிரம்வைத்தே ஆளும் ஆட்சி
தேவையா? விடுதலையா?'

இவ்விதம்—இன்னும் வேகமாகவும்—எண்ணச் சுடர்களை அள்ளிச் சிதறுகிறார் பெருங்கவிக்கோ. உள்ளத்தின் தவிப்பும் துடிப்பும் அனல் தெறிக்கின்றன சொற்களில்,

பொய்மையை உண்மை சென்று
போற்றியே துதிக்கும், நல்ல
நெய்யிலே நஞ்சு வீழ்ந்து
நெடும்பசி புகுந்தழிக்கும்
வெய்யிலில் உழைப்போர், ஆற்றல்
வீரத்தின் மரபில் வந்தோர்,
செய்கையில் கீழோர் வீழ்ந்தே
சீரழிந்தார்கள் வெட்கம்!

சுதந்திரம் யாருக்காக?
சுயநலக் காரரேதான்
விதம்விதமாக ஓங்க,
வேடிக்கை மனித ரெல்லாம்
பதம்பெற்று வாழக் கற்றார்
பாதகர் தம்மைப் போற்றி
நிதம் வாழல் சுதந்திரம்மா?
நெடுந்தூரம் நமக்கதற்கும்!''

என்று உளம் நைந்து கூறும் கவிஞர் வேதனையோடு நாட்டினை நினைத்துப் பாடுகிறார்—

'ஈடிலா என்றன் நாடே
இன்றமிழ் அன்னை நாடே!
பேடியர் வீரம் இல்லாப்
பேதையர் வாழும் நாடாய்
வாடிநீ போவ தும்ஏன்?
வரலாற்றை மறப்பதும்ஏன்?
நீடிய துயிலை என்று
நீகளை வாயோ நாடே!'

காப்பியத் தலைவன் கவி அருட்கனியின் எண்ண ஓட்டமாக வேகத்துடன் தனது சிந்தனைகளையே பெருங் கவிக்கோ கவிதையாக்கியிருக்கிறார். அவற்றில் உண்மைகள் ஒளி வீசுகின்றன.

நாட்டின் இழிநிலை மாறவேண்டும், மாற்றப் பட வேண்டும். அதற்கு வழிதான் என்ன?

'நல்லவர் வாய்தி றந்தால்
நல்லவர் ஒன்று சேர்ந்தால்
நல்லவர் ஆண்மை பெற்றால்
நல்லவர் செயல்கைக் கொண்டால்
அல்லவர் தேய்வர் ஈன
அல்லல்கள் குறையும் தீய
அல்லலில் வாழ்வோ ரெல்லாம்
அணிநலம் அமைவா ரன்றோ!'

என்று கேட்கிறார் கவிஞர்.

எங்கனும் ஓலம், எங்கனும் ஏமாற்றுக்கள், எங்கனும் சூழும் துன்பம் எஙகனும் இடர் வெள்ளங்கள். எங்கனும்

சூது சூழ்ச்சி எங்கணும் வேதனைகள். எங்கணும் இதுவே நாட்டின் இயல்பென்றால் நாடா இது?

மேலும், குடிகாரர் மிரட்டுகின்றார். கொலைகாரர் தலைமை கொண்டே பாதகம் செய்கின்றார்கள். தடிகாரர் வாழ்கின்றார்கள். தகைமையர் அவர் பின்னாலே எடுபிடி மக்களாகி எல்லாமே இழந்தார்!

'விடுதலை நல்லோ ருக்கா,
வீணர்க்கா என்றகேள்வி
நடுநிலைநின்று பார்ப்பார்
நன்கெண்ணிச் சொல்லவேண்டும்
கெடுதலைப் புரிகின்றார்கள்
கேடெலாம் புரிகின்றார்கள்
இருநிலம் ஏய்க்கின்றார்கள்
இதுதானா விடுதலை?ஏன்?'

என்று சூடாகக் கேட்கின்றார் கவிஞர்.

வாழ்வெல்லாம் உழைக்கின்ற வல்லாருக்கே, வளர்ச்சிகள் பெருகிடவே வேண்டும். அன்னார் தாழ்வெல்லாம் நீங்கிடவே வேண்டும். சான்றோர் தன் வழியில் இந்நாடு நடக்க வேண்டும் என்று அவர் விரும்புகிறார்.

அறவழியில் நடப்போர்க்கே ஏற்றம் வேண்டும்: அஞ்சாத புதுமை நெறி மலர வேண்டும். இவ்வாறு இன்னும் பல நல்விருப்பங்களை முன் வைக்கும் கவிஞர் இன்றைய நிலைமைகள் குறித்து விருப்பு வெறுப்பின்றி விமர்சன ரீதியில் கருத்துக்களைப் பொறித்துள்ளார்.

'கெடுதல்கள் மாறும் போதும்
கீழ்மைகள் சாகும் போதும்
அடுதல்கள் உண்மை தன்னை
அழித்திடாப் போதும், விஞ்சும்

நடுநிலை உயரும் போதும்
நன்மையின் உண்மைப் போதும்
விடுதலை விடியும்; அந்நாள்
விடிந்தாலே விடுதலையாம்!'

என்று காப்பியத்தை முடிக்கிறார் பெருங்கவிக்கோ

அவர் இயற்றியுள்ள மற்றொரு குறுங்காவியம் 'வைகறை வரும்!'

மரபு வழியில் கவிதைகள் இயற்றும் பெருங்கவிக்கோ புதுக்கவிதை எனப் பெயர் பெற்று வளர்ந்துவிட்ட யாப்பில்லாக் கவிதையை வெறுத்து ஒதுக்கவில்லை. புதுக்கவிதைப் போக்கிலும் கவிதை படைத்து, புதுமையை வரவேற்றிருக்கிறார். மரபும் புதுமையும் கலந்து. இரு வழியிலும் கவிதைகள் பாடி, 'வைகறை வரும்' என்ற குறுங்காவியத்தை அவர் எழுதியுள்ளார்.

மக்களின் வாழ்க்கை நலனுக்குத் தீங்குகளும் நாட்டின் வளர்ச்சிக்கும் வளத்துக்கும் ஊறுகளும் செய்து கொண்டு, மனித இனத்தின் பெரும் கறையாக நீடித்து வளர்கிற சாதி வேற்றுமைகளையும், அவற்றால் விளையும் கேடுகளையும் எடுத்துக்காட்டும் விதத்தில் படைக்கப்பட்டிருக்கிறது 'வைகறை வரும்' என்கிற சிறு காவியம்.

சாதி பேதங்கள் மக்களை மனிதராக வாழவிடாது கெடுக்கின்றன. சாதி வேற்றுமைகள் நீக்கப்பட்டு, எல்லோரும் தமிழர் என்ற ஓர் இனமாக வாழவேண்டும் என வலியுறுத்துகிறது அது. அத்துடன் சிற்றூர்கள் திருந்திட வேண்டியதன் அவசியத்தையும் கூறுகிறது.

'சிற்றூர் திருந்திட வேண்டும்—இந்தத்
தேசம் திருந்திட வேண்டில்.
சிற்றூர் கல்வி பெற வேண்டும்—நம்மின்
சிறுமை தவிர்த்திட வேண்டில்.

சிற்றூர் அறிவுக் கதவைத்—திறக்கும்
திறங்கள் மலர வேண்டும்
சிற்றூர் வளர்ச்சி ஒன்றே—தேசச்
சிறப்பின் கருவூலம் ஆம்!'

என்று பெருங்கவிக்கோ அறிவிக்கின்றார்.

அவருடைய இயல்பின்படி உண்மைகளை, நியாயமான சிந்தனைகளை நேர்மைத் துணிவுடன் கவிஞர் இச்சிறுகாப்பியத்திலும் பொருத்தமாக இணைத்திருக்கின்றார்.

'குந்தியே வாழ்கின் றாரே
கும்பியை நிரப்ப லன்றி
எந்தஓர் சீர்தி ருத்தம்
இந்துநல் மதம்செய் தார்கள்
மந்தைகள் மேய்க்க எண்ணும்
மாந்தர்போல் மக்கள் தம்மின்
சிந்தனை கொன்றே இந்து
திருமதம் கெடுக்கின் றாரே!'

இது ஒரு சான்று,

நல்வகையில் கீழ்சாதிச் சான்று காட்டி கல்வி நலம் கண்டவர்களும், பதவி நலம் கண்டவர்களும், பிற நன்மைகள் பெற்றவர்களும், 'தான் மேலாய்ப் போனதன்றி, கிராமத்தின் இழிநிலையை மாற்றுதற்கு' முன்வராமல் ஒதுங்கிப் போவதைக் கவிஞர் சாடியிருக்கிறார்.

இவ்வாறே சாதிபேரால் சலுகைகள் பெற்று அரசாங்கப் பணியில் அமர்ந்து வசதிகளை அனுபவிப்போரில் அநேகர் தம் சாதியினர் பற்றிக் கவலைப் படுவதில்லை. 'பாவையர்பல் சுகம் தேடி, மேல் குலத்துப் பூவையரை மணம் பெற்று.' தம் ஊரைவிட்டு விலகிச்

சென்ற தாழ்குலத்தார் நம்மவர் தேவைகளை நினைப்ப தாழ்குலத்தார் என்று ஒதுக்கப்பட்டவர்களிடையிலும், படிப்பாலும் உத்தியோகத்தாலும் திருமணத் தொடர்பு களாலும் மேம்பட்டவர்கள் உயர்ந்தவர்கள் என்றும், வசதிகளைப் பெற முடியாதவர்கள் கீழானவர்கள் என்றும் பிரிவுகள் ஏற்பட்டிருப்பதைக் கவிஞர் சுட்டிக் காட்டுகிறார்.

'தாழ்ந்தவர் என்றே ஒதுக்கியவர்கூட
தங்களுக்குள் ஒற்றுமை—என்றும்
வாழ்வு தருமென்ற வாஞ்சை அறமின்றி
வம்பிலே வாழ்ந்திருப்பார்'

என யதார்த்த நிலையை உணர்த்துகிறார். மனிதர்கள இப்படி வேறுபாடுகள் காண்பதற்காக பெருங்கவிக்கோ பரிதாபப்படுகிறார்,

'உண்ணுகின்ற சோறெல்லாம் ஒன்றே நன்கு
உடுத்துகின்ற உடையெல்லாம் ஒன்றே காதல்
பண்ணுகின்ற இடமெல்லாம் ஒன்றே வாழ்ந்து
பயன்காணும் பூமியதும் ஒன்றே என்றும்
நண்ணுகின்ற உயிர்காற்றும் ஒன்றே நம்பி
நானிலத்தில் வாழ்வதும் ஒன்றே ஓடும்
திண்மைதரு குருதியதும் ஒன்றே! ஏனோ
தினவெடுத்த மாந்தர் வேறுபாடு காண்பர்!'

'மேல் சாதி கீழ்சாதி எங்கய்யா இருக்கு? உயர்வு தாழ்வு பேசுறியே! எல்லாரும் செத்தா ஒண்ணாத் தானப்பா, மண்ணிலே, சுடுகாட்டிலே வக்கிறாங்க!' என்று ஒரு கதாபாத்திரத்தைப் பேச வைத்திருக்கிறார்

'தேவையற்ற சாதி இருள்
தேசமெங்கும்

140 □ வல்லிக்கண்ணன

கவ்விக் கொண்டிருக்கிறது!
ஆவியாக
இந்த இருளைக் கருதும்
அரசியல்வாதிகள்
மடிப்புக் கலையாக சட்டைகளோடும்
தடிப்புக் குலையாத உடம்புகளோடும்



கவ்விக் கொண்டிருக்கிறது!
ஆவியாக
இந்த இருளைக் கருதும்
அரசியல்வாதிகள்
மடிப்புக் கலையாக சட்டைகளோடும்
தடிப்புக் குலையாத உடம்புகளோடும்
முறுக்கான தோற்றமுடன்
மாற்றம் தருவோம்
மாற்றம் தருவோம்என்று
ஏமாற்றம் தந்து
சாதிவாணிகம் நடத்திச்
சரியான இலாபகரமான
தொழில் நடத்திக்
கொண்டிருக்கிறார்கள்!'

விடுதலை இந்தியாவில், முதல் போடாமல் முன்னேறுகிற மொத்த வியாபாரிகள் இவர்கள். இவர் சிரஞ்சீவித்தனத்தின் வாகனங்களாக சில்லரைத் தரகர்கள் எங்கும் இருக்கிறார்கள். இப்படியாக இந்த நாட்டில் ஒப்படி நடத்திக் கொண்டிருக்கும் இவர்களுக்குக் கிடைத்த நீர்ப்பாசன வசதிகள்தான் அவ்வப் போது வரும் தேர்தல்கள் என்று உண்மை நிலையை உள்ளபடி சித்திரிக்கிறார் பெருங்கவிக்கோ.

பாமரர்களிலும் கேவலமாக
கலப்புமணம் தாழ்சாதியில் நடப்பது
ஏதோ ஒரு கேவலத்திலும்
கேவலமாக எண்ணும்
கீழ்மைப் போக்குதானே
இன்னும் உள்ளது!

இந்து மதத்துல
சாதித் தாழ்வின் காரணமாக
சமத்துவம் மறுக்கப்படும் வரை
நீதி என்பது அங்கே
எங்கே நிலைக்கும்?'

இவ்விதம் சமூக விமர்சனத்தையும், தனிமனிதர் பற்றிய கண்டனங்களையும், கீழ்மைப் போக்குகள் மற்றிய சாடல்களையும் முக்கியப்படுத்தி, உண்மை— நேர்மை— நீதி நிறைந்த சிந்தனைகளுக்கே முதலிடம் தந்து பெருங்கவிக்கோ இக்குறுங்காவியத்தை உருவாக்கியிருக்கிறார். அதனால் காவியத்தின் கதை அம்சம் சத்தின்றி ஒதுங்கிப் போய் விட்டது.

எனினும், சுட்டிக் காட்டப்பட வேண்டிய குறைபாடுகளை துணிவாகச் சுட்டியும், சொல்லியாக வேண்டிய சிந்தனைகளை அழுத்தமாகச் சொல்லியும் அவர், மரபும் புதுமைப் பாங்கும் கலந்த முறையில், இக்காவியத்தை ஆக்கியிருப்பது பாராட்டுதலுக்குரியது.

'கடந்தகால நச்சுமர அறியாமையை
வருங்கால வைகறைச்
செந்தழல்
பொசுக்கும்.

அப்பொழுதில்
மையிருள் கலையும்!
மனித சாதிகளின்
பொய்யிருள் போகும்!
வைகறை வரும்!'

என்ற நம்பிக்கை ஒலியுடன் கவிஞர் இக்காவியத்தை நிறைவு செய்திருப்பதும் பாராட்டப்பட வேண்டியதாகும்.

# 13. காவிய நாடகம்

'கவிதைத் துறையில் புதிய சாதனைகளை சாதிக்க வேண்டும் என்ற உள்ளத்தின் தணியா ஆவேச எழுச்சி' கொண்ட பெருங்கவிக்கோ கவிதை இலக்கியத்தின் பல்வேறு வடிவங்களிலும் தனது ஆற்றலைக் காட்டியிருக்கிறார். அப்படிப்பட்ட ஒரு எழுச்சியின் விளைவாகவும், திறமையின் மலர்ச்சியாகவும் விளங்குவது 'கௌதமரின் கண்ணீர்' என்ற காவிய நாடகம்.

இலங்கை இனக் கலவரத்தையும், சிங்கள வெறியரால் தமிழ் மக்கள் அனுபவிக்க நேரிட்ட கொடுமைகளையும் வதைகளையும், புத்த மதத்தினர் என்று கூறிக் கொள்ளும் சிங்களவர்கள் புத்தரின் அறவுரைகளை மிதித்துத் துவைத்து விட்டு வன்முறைச் செயலில் ஈடுபட்டு வெறியாட்டம் ஆடியதையும் மனவேதனையுடன் எடுத்துச் சொல்கிறார் கவிஞர், இக்காவிய நாடகத்தில்.

'உலக மூலைகளில் எங்கெங்கோ மனித இனம் கொடுமைப்படுத்தப்படுவதை, அழிக்கப் படுவதைக் கண்டு இரக்கப்படும், பாடும் அருமைச் சகோதரர்கள், நமக்குப் பக்கத்தில் பதினெட்டுக் கல் தொலைவில் நமது சகோதரர்களுக்கு நடந்த பெரும் கொடுமைகளை, இரத்த ஆறு ஓடியதைக் காண வேண்டாமா?' என்ற நியாயமான வேதனை பெருங்கோவின் உள்ளத்தை வாட்டியது. கொந்தளித்துத் தவித்த கவியுள்ளத்தின் வேட்கைக்கு

வடிவம் கொடுக்க அவர் முனைந்ததின் விளைவுதான் 'கௌதமரின் கண்ணீர்'.

புத்தரின் சீடர்கள் என்றும், பௌத்த தர்மத்தைப் போற்றுவோர் என்றும் சொல்லிக் கொண்ட துறவிகளும் கயவர்களுமே வெறிச் செயலில் ஈடுபட்டு. அப்பாவித் தமிழ் மக்களைக் கொன்று குவித்ததையும் தமிழ் மக்கள். அவர்கள் உழைத்துப் பண்படுத்தி வளம் சேர்த்த நாட்டை விட்டு ஓட வேண்டிய அவசியம் ஏற்பட்டதையும் எடுத்து சொல்வதற்கு கௌதம புத்தரையே காவியத் தலைவனாக —நாடக நாயகனாக— நடமாட விட்டுருப்பதும், வெவ்வேறு மதப் பற்றாளரை (புத்த பிச்சுக்கள், தமிழ்த் துறவி, கிறித்தவப் பாதிரி, இசுலாமிய இமாம்) ஆகியோரை சந்தித்து உரையாடச் செய்திருப்பதும் பாராட்டப்பட வேண்டிய உத்தி ஆகும். மேலும், விடுதலைப் புலிகள், இராணுவத்தினர், உழைக்கும் மக்கள் இலங்கைக் குடியரசுத் தலைவர், மற்றும் அமைச்சர்கள் முதலானோரை புத்தர் சந்தித்துப் பேசுவதும், அவர்கள் தத்தமது கொள்கைகளையும் கருத்துக்களையும் கூறுவதும் இறுதியில் கௌதமர் குடியரசுத் தலைவர் மற்றும் அமைச்சர்களிடம் அங்குலி மாலன் கதையைக் கூறி அறிவுரை கூறுவதும் காவியத்துக்கு நாடகத்தன்மையை அளிக்கிறது.

'இனத்தால் மொழியால் வேறு வேறாக
இந்த வையம் வளர்த்தவர் யார்?
மனத்தால் பேதமை மாறுபாடாக்கி
மன்பதை தன்னைக் கெடுத்தவர் யார்?

எந்த மொழியோ எந்த இனமோ
எவரெவர் பேசி வாழ்ந்தாலும்
அந்த இனத்தனும் மனித இனமாய்
ஆவான் என்பதை அறியாரோ?

மனித இனமேோர் இனமே என்னும்
மார்க்கம் தந்தார் இலையாமோ?
தனித்தனி மதங்கள் தனித்தனி வளர்ச்சி
சாவின் மறுபதிப் பாகிடுமோ?

மனிதம் ஒன்றே மன்பதை ஒன்றே
மார்க்கம் வந்திடும் நாளெதுவோ?
தனித்தும் வெறிசெய் இனத்தின்மோகம்
சாய்ந்து போகும் நாளெதுவோ?'

இந்த உயரிய சிந்தனையை தமிழ்த்துறவி வாயிலாக வெளிப்படுத்துகிறார் பெருங்கவிக்கோ.

புத்தர் இசைக்கும் கீதம் மூலமும் உயர்ந்த, சீரிய எண்ணங்களை கவிஞர் ஒலி பரப்புகிறார்.

'கருணை உலகில் மலர்கவே—மனம்
கண்ணியத்தால் நிறைகவே!
அருளே உலகை ஆள்கவே!—பிற
அதர்மம் எல்லாம் வீழ்கவே!

இவ்வாறு தொடங்கி மேலும் பல பாக்களாக நல்லெண்ணங்கள் வளர்ந்துள்ளன. மனிதரை வாழ்விக்கக் கூடிய—மனித குலத்தை உய்விக்க வல்ல—நற்சிந்தனைகள் அவை.

பெருங்கவிக்கோ பல இடங்களில் வலியுறுத்தி வருகிற முக்கிய உண்மைகள் சிலவற்றை இக்காவிய நாடகத்திலும் பதிவு செய்திருக்கிறார். அவை இங்கு எடுத்தெழுதப்பட வேண்டியவையே யாகும்.

'புத்த மதத்தின் முன்னோடி—நவப்
புனிதத் தமிழர் வாழ்வுநெறி—பல்
சித்தர் வாழ்ந்த வாழ்க்கைமுறை—எம்
செந்தமிழ் தந்த அறமுறையாம்.

எங்கள் தமிழர் உலகுவளர்
ஏற்ற கொள்கை போற்றிநிதம்—தமிழ்
தங்கக் கொள்கை மறந்தோமே—குறள்
தந்த நெறியும் துறந்தோமே!

பல்கும் பலப்பல மதங்களிலே—எம்மோர்
வாழ்வை ஒன்ற வைத்தாரே—தமிழ்
வெல்லும் நெறியை மறந்தாரே—அந்தோ
வேதனை மேல் வேதனைகள்!

வந்த மதத்தை வளர்த்தார்கள்—தமிழர்
சொந்த நெறியை மறந்தார்கள்—உயிர்ச்
செந்தமிழ்நல் பாலமன்றோ—எம்மைச்
சேர்த்து வைக்கும் தெய்வமய்யா!

சாதியாலே கெட்டழிந்தோம்—ஈன
சாத்திரத்தால் கெட்டழிந்தோம்'

இத்தகைய ஊன்றி உணர்தற்குரிய உண்மைகளை இக் காவிய நாடகம் உணர்ச்சியோடு அறிவிக்கிறது.

பெருங்கவிக்கோவின் மற்றொரு கவிதை நாடகம் 'காலக்கனி' அளவில் பெரியது. 359 பக்கங்களைக் கொண்டது. தற்கால நிலைமைகளை நன்கு எடுத்துக் காட்டும் சமூக சித்திரமாகும், இறந்த காலப் பெருமைகளை விவரிக்கும் வரலாற்று ஓவியமாகவும், எதிர்காலச் சிறப்புகளை வியப்புறக் காட்டும் கற்பனைப் படைப்பாகவும் அது விளங்குகிறது.

மூன்று காலங்களிலும் எந்தக் காலம் மாண்பு உடையது என்ற பிரச்னை எழுகிறது. வளங்கள் மிகுந்து நலன்கள் நிறைந்து திகழ்ந்த இறந்த காலம் தான் உயர்ந்தது என்ற எண்ணம் வளர்க்கும் ஓவியன் எழிலவன் காவிய நாயகனாகச் செயல்படுகிறான். தற்கால அவல

நிலை, மக்களின் துயரங்கள், அவர்களின வறுமை வாழ்க்கை பற்றி எல்லாம் பேசுகிறான். எத்தர்கள், பொய்யர்கள் முதலானோர் உயர் நிலையில் உல்லாசமாக வாழ்வதை சுட்டிக் காட்டுகிறான்.

'எங்கும்
நீலித்தனத்தின் நிறைந்த சாதனை!
பேச்சில் பெரிய நீச்சலடித்து, வாய்
வீச்சால் வயிறு வளர்க்கும் பேதைகள்!
அடுத்துக் கெடுக்கும் அகமறி வஞ்சகர்கள்
உடுத்தும் உடையை உண்ணும் உணவைப்
பார்த்து வயிறெரி பாதகர்! துரோகம்
தேர்ந்து செய்யும் திருட்டு நெஞ்சினர்
காட்டிக் கொடுத்துக் கயமைத்தனத்தால்
ஈட்டும் பதவி பிடிக்கும் எத்தர்கள்
இப்படி இவர்கள் ஒப்படி நடத்தி
செப்படி செய்வதால் செயல்கள் நாசம்!'

சமூக நிலைமை இவ்வாறு இருக்கையில். இவற்றில் எதை ஓவியமாய் தீட்டி மகிழ என்று அவன் சூடாகப் பேசுகிறான்.

அவனது நோக்கும் கொள்கையும் சரியல்ல என்று பிறர் குறை கூறுகிறார்கள்.

'எங்கணும் நம்மவர் எழுச்சி வேண்டும்
பொங்கும் புதுமை தங்கும் அறிவார்
செயல்கள் சிந்தனை வேண்டும்'

அதற்குத் துணை புரியும் விதத்தில் கலைகள் விளங்க வேண்டும் என்று ஒருவன் வலியுறுத்துகிறான். ஓவியன் சிந்தை மாற்றம் கொண்டு, பன்னல ஓவியங்களும் வரைய வேண்டும் என்று அவனிடம் அன்பு கொண்ட முல்லை என்பாள் வேண்டுகிறாள்.

குழப்பமுற்ற ஒவ்யன் நள்ளிரவில் கனவில் தன் குரு நாதரைக் காண்கிறான். அவர் பல உண்மைகளை அவனுக்கு உணர்த்துகிறார். இறந்த காலத்தினுள் பயணம் செய்தும் இனிவரும் எதிர்காலத்தில் சென்று காணவும், மீண்டும் தற்கால நிலை பெறுவதற்கும் உதவக் கூடிய மூன்று கனிகளை குரு அவனுக்கு அளிக்கிறார். அவற்றின் உதவியால் அவன் இறந்த காலத்தில் வாழ்ந்தும், எதிர் காலத்தினுள் சென்றும் அனுபவம் பெற்று, நிகழ் காலத்துக்கு மீண்டு அறிவுத் தெளிவு பெறுவதாகக் காவிய நாடகம் விவரிக்கிறது.

காலங்களினூடே எழிலவன் பயணம் செய்து கண்டு அறிகிற அனுபவங்கள் நாடகச் சுவையோடு விறுவிறுப் பாக அமைக்கப்பட்டுள்ளன. அறிவின் ஆற்றலையும், இறைவனின் திறனையும், ஆன்ம சக்தியையும் கவிஞர் இக் காவியத்தில் உறுதியுடன் பதிவு செய்துள்ளார்.

'மதியே பெரிதுகாண், மதிஅறி வியலால்
எதிர் இக்காலம் எங்கனும் மாட்சி!
இறைவன் என்பவன் இணையிலா அறிவின்
நிறைவில் சிரிப்பான்; நெஞ்சகம் வஞ்சக
எண்ணம் விடுத்தால், ஈடிலா உண்மை
நண்ணும். அதனால் நனிவளர் ஆன்மா
ஒப்பிலாச் சக்தியின் உறைவிட மாகும்.
அப்பெரும் சக்தியோ அகிலம் ஆளும்!'

இறுதியில், எழிலவன், அவரவர் வாழும் தற்காலம் தான் நற்காலம் என உணர்கிறான்.

'அவரவர் வாழும் அவ்வக் காலம்
அவரவர் சிந்தனை ஆக்கும் காலம்!
நிகழ் காலத்தினை நெஞ்சகம் வையான்
தகவெதிர் காலம் தான் பெறான், என்றும்
ஓங்கிய உழைப்பும், உயர்ந்த நெறியும்

வீங்கிய புகழும் விளைத்த அறமும்
வாழும் கண்முன் மலரும் காலமே!'

என்று அவனுடைய குருவும் அறிவுறுத்துகிறார்.

பெருங்கவிக்கோ, அவரது இயல்பின்படி, ஆழமான கருத்துக்களையும், ஒளிரும் சிந்தனைகளையும் இக்காவியம் நெடுகிலும் எடுத்துக் கூறியுள்ளார், இயற்கையின் அழகையும் ஆற்றலையும் வியந்து பாடும் கவிதை வரிகள் காவியத்துக்குச் சுவை சேர்க்கின்றன. இறந்த காலத்தின் மாண்புகளையும் குறைகளையும், எதிர் கால வளர்ச்சிகளையும் வர்ணிக்கும் பகுதிகள் கவிஞரின் கற்பனை விரிவுக்கும், கவிதைத் திறனுக்கும் சான்றுகளாக அமைந்துள்ளன.

'நனவு தற்காலம் கனவெதிர் காலம்!
நனவே கனவின் கனிவாய் முகிழ்க்கும்!
நேற்றென்பதுவோ கூற்றம் வாய் வீழ்ந்ததாம்;
தோற்றும் நாளையோ சொல்வதற் கிலையால்
இன்றென்பதுவே கண்ணறி உண்மையாம்!
நன்றிது தெளிக! நயம்தனை அறிக நீ!'

என்று குருவின் அறிவுரை மூலம் காலத் தத்துவத்தைக் கவிஞர் தெளிவுபடுத்தியிருக்கிறார் மேலும்,

'தெளிக சிந்தை! தேர்க நல்லறம்!
துணிவு கொள் இறைமைத் தொண்டிலே
முன்னில்!
பணிவுகொள், இகழ்வார் பதறிட நிலம்வெல்!
பாதை தவறேல் பண்பைப் போற்று
சோதனை வருமேல் துவண்டு போகாதே!
வேதனை மாற்ற மாதிற முடியற்சிகொள்!'

என்று வாழும் நெறியையும் வகுத்துக் காட்டுகிறது 'கால்க்கனி.'

# 14. காவியங்கள்

'எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய சந்தம், பொதுமக்கள் விரும்பும் மெட்டு இவற்றினையுடைய காவியமொன்று தற்காலத்திலே செய்து தருவோன் நமது தாய் மொழிக்குப் புதிய உயிர் தருவானாகிறான்' என்பது மகாகவி பாரதியின் வாக்கு.

தமிழின் முதலாவது புதுமைக் காவியமான 'பாஞ்சாலி சபத'த்தை பாரதியார் தனது கூற்றுக்கு ஆதாரமாகவும் 'இனிப்பிறந்து காவியம் செய்யப்போகிறவர்களுக்கு வழிகாட்டியாகவும் படைத்து வழங்கினார்.

அம்மகாகவி காட்டிய வழியில் காவியம் படைக்கும் ஆர்வம் கொண்ட பெருங்கவிக்கோ 'தாய்மண்' என்ற தனது முதல் காவியத்தை 1976ல் ஆக்கினார்.

தமிழ் காவிய மரபின்படி 'தாய் மண்' எனும் காவியமும் மன்னனின் போக்கு. அவனது காமக்கிழத்தியின் சூழ்ச்சி, அவள் சகோதரனான படைத்தலைவனின் வஞ்சகம், இளவரசியின் காதல், அவள் காதலுக்கு உரியவனான வீர இளைஞனின் துணிகரச் செயல்கள், நல்லவரான அமைச்சர், அவருடைய மகன் வீரநாயகனின் துணைவனாக இருந்து அரும் செயல்கள் புரிதல், காவியத் தலைவனுக்கு ஏற்படும் துன்பங்கள், அவன் பெற்றோரின் வரலாறு, அவர்களது மரணம், தாயின் மரணத்தின் பின் விளைவுகள், இளவரசியின் முனைப்பான நடவடிக்கை

கள், அவளது தியாகம் எனறெல்லாம் கதை புனையப் பட்டிருக்கிறது.

காவியத்தின் எளிய நடையும், சொல் ஓட்டமும், வகைவகையான சந்தங்களும், அழகிய இயற்கை வர்ணனைகளும். கற்பனை வளமும் நயமும் செறிந்த உவமைகளும், உணர்ச்சித் துடிப்பும், ஆழ்ந்த கருத்துக் களும் இப்படைப்புக்கு இனிமையும் வனப்பும் சேர்த் துள்ளன. நலம் பயக்கக்கூடிய உயர் சிந்தனைகளை காவியத்தலைவன் வாயிலாகக் கவிஞர் வெளிப்படுத்தி யிருப்பதும் போற்றுதலுக்கு உரியது.

'மனிதர்களை மதிக்கின்ற வழக்கம் வேண்டும்!
மனிதர்நெறி மனிதரெல்லாம் போற்ற
வேண்டும்!
மனிதர்களை மாடுகள்கீழ் நடத்தி விட்டு
மாநிலத்தை ஆள்வதிலே மகிமை உண்டோ?
மனிதர்களே வையகத்தின் தெய்வங்கள்!அம்
மானுடத்தை மானுடமே மதித்து வாழ்ந்தால்
மனிதர்களில் பேதமுண்டோ? வஞ்சம் உண்டோ?
வரலாற்றில் களங்கமுண்டோ? எண்ணிப்
பாரீர்!'

இது ஒரு எடுத்துக்காட்டு ஆகும்.

இயற்கை வர்ணனைகளில் கற்பனை அழகு மிளிர் கிறது. அத்துடன் உவமையின் வனப்பும் எழிலூட்டு கிறது.

காலைக் கதிரவன் தோற்றம் குறித்துக் கவிஞர் பாடுவது படித்து ரசிக்க வேண்டிய வரிகள் :

'கதிரவன்! அன்னான் கருத்தின் பெட்டகம்!
விதி உடைத் திட்டெழு மதி அறிவைப்போல்

மாயம் எதிர்த்தெழு மாவீரன்போல்
பாய வருகரி பாய்ந்த சிங்கம்போல்
தானொருவனே இத்தாரணி காப்பவன்
நானொருவனே தான் நாயகன் என்றே
எழுந்திடும் பொழுதில் எங்கணும் மஞ்சள்
வழுவறப் பூசி வனப்பாக்கிய போல்
வெயில்முகம் காட்டினான்! வெற்பெலாம் மாட்சி!'

நிலாவின் வனப்பும் அழகிய உவமைகளோடு இனிய கவிதையாக விவரிக்கப்பட்டிருக்கிறது.

'மோர்க்குடத்தின் மேலே—திரண்டு
மிதக்கும் வெண்ணெய்ப் போலும்
சீர்த்த யானைத் தந்தம்—உருண்டு
செய்த தன்மை போலும்
வார்த்து வானில் விட்ட—வெள்ளி
வட்டத் தட்டைப் போலும்
பார்க்கும் வெளியெங்கும்—பொங்கும்
பால் நிலாவின் ஒளியாம்!'

திங்கள் உதயத்தை மற்றோர் இடத்தில் வேறொரு விதமாக வர்ணிக்கிறார் கவிஞர். கவிதையின் எடுப்பும், கற்பனையின் வீச்சும், அடுக்கு உவமைகளின் அழகும் பெருங்கவிக்கோவின் படைப்புத் திறனை நன்கு புலப்படுத்தக் கூடியவை

'கரவுளார் நெஞ்சம் போலும்
கஞ்சர்கள் எண்ணம் போலும்
தரமிலார் நட்டைப் போலும்
தான்தோன்றித் தனத்தைப் போலும்

உரமிலார் செய்கை போலும்
உறை இருள் தடையை நீக்கிக்
கரம்மறை தந்ததைப் போல்
கால் கொண்டான் பிறையும் அங்கே!

உடைவாளின் உறைகிழித்தே
உயர்ந்திடும் வாளைப் போலும்
நடைநலம் காணப்பொங்கும்
நல்லார்வப் புலவன் போலும்
தடைபல உடைந்து வந்த
தமிழ் வெள்ளம் போலும் அங்கே
படை விண்மீன் கூட்டத் துள்ளே
பாயொளித் திங்கள் வந்தான்!'

முடிவில் மன்னன் மகள் முடிசூட்டப் பெற்றதும் மக்களுக்கு நன்மை செய்யும் எண்ணத்தோடு பல நற்கருத்துக்களை உரைக்கின்றாள். நாட்டில் நல்லாட்சி ஏற்படுவதற்கு என்ன என்ன திருத்தங்கள் செய்யப்பட வேண்டும் என்று கவிஞர் கருதுவதை வெளிப்படுத்தும் பகுதி அது.

'வாடிக்கை யாக வருகின்ற கொள்கைகள்
தீதுகள் இருந்தால் திறமாகக் களையெடுப்போம்!
தோதுடன் சமுதாயச் சுடர்விளக்கேற்றிடுவோம்!
நெறியின்றி மனம்போல் நீள்நிலம் தான்வாழும்
பொறி கெட்ட தீயர் புல்லர் தனைத்திருத்தும்
வழிமுறை காண்போம்! வழி வழியாய் மூடத்தின்
கழிமுறை போற்றும் கண்மூடித் தனம்
மறைப்போம்!
குடிசையில் ஒருவரும், கோபுரத்தில்
மற்றொருவரும்!

படிமிசை வாழும் பழங்கொள்கை
தகர்த்திடுவோம்!
நடிக்கின்றார் குபேரனாக நல்ல உழைப்பாளி
இடிக்கின்ற துன்பம் இனிதேற்கும் தீமையினை
நொறுக்கிடுவோம்! அந்த நுட்பமான
கொள்கைகளைத்
தறுக்குடன் கொல்வோம்! தனி உடைமை
தான் தகர்ப்போம்!
எது உடைமை என்றே இன்னும் அறியார்க்குப்
பொதுவுடைமை ஒன்றே போற்று கொள்கை
யென்போம்!"

இவ்வாறு இன்னும் பல எண்ணங்களை ஒலிபரப்பும் பேருரையாக அமைந்துள்ளது அது.

'தாய் மண்" அரசர், மற்றும் அரச குடும்பத்தினர் பற்றிய கதையை சொன்ன போதிலும், வீரமகனின் நெஞ்சுத் துணிவையும் தாய்ப் பாசத்தையும், தாய் மண்ணின் மீது அவன் கொள்ளும் பற்றுதலையும், நாட்டு மக்களின் நலனுக்காக ஆள்வோர் மேற்கொள்ளவேண்டிய கொள்கைகளையும் எடுத்துக் கூறும் நல்ல காவியமாக விளங்குகிறது.

பெருங்கவிக்கோவின் இரண்டாவது நெடுங்காவியம் 'மலைநாட்டின் மீதினிலே' என்பதாகும். இது ஒரு புதுமையான படைப்பு. சமகால வரலாறு, பயண அனுபவங்கள், கற்பனைக் கதை என மூன்று அம்சங்களை இது தன்னுள் கொண்டிருக்கிறது.

மலேசிய மாமுனி— 'தமிழ்ப் பணியாளன், தவநெறியாளன்'—சுவாமி இராமதாசரின் மணிவிழாவில் கலந்துகொள்வதற்காக, சிறப்பு அழைப்பின் பேரில்—மலேசியா சென்றார் பெருங்கவிக்கோ. மூன்று மாத காலம் அங்கே தங்கி, மலேசியாவின் பல பகுதிகளுக்கும் சென்று தமிழ்ப்பணி புரிந்தார்.

மலேசியாவில் தாம் கண்ட இடங்கள், பழகிய மனிதர்கள், தமக்கு உதவிய அன்பர்கள், தாம் நிகழ்த்திய சொற்பொழிவுகள் முதலியவற்றை பெருங்கவிக்கோ இக்காவியத்தில் பதிவு செய்துள்ளார்.

பினாங்கின் கடற்கரை அழகு, ஈப்போவின் எழில் நிறைந்த இடம், கோலாலம்பூரின் சிறப்பு, சிங்கப்பூர் துறைமுகத்தின் பெருமை, மலேசியா சிங்கப்பூர் நாடுகளில் உள்ள தமிழர், தமிழர் இயக்கங்கள், தோட்டங்கள் தொழிற்சாலைகளில் பணிபுரியும் தமிழர்; மலேசியாவில் கல்வி நிலை, சீனர்களின் வாழ்க்கை முறை, சிங்கப்பூர் வானொலி. தொலைக்காட்சி நிலையப் பணிகள், அந்நாடுகளின் தொழில் வளம், செல்வச்சிறப்பு ஆகியவற்றை இக்காவியம் விரிவாகக் கூறுகிறது. உண்மையாக வாழும் மனிதர்கள் பற்றிய செய்திச் சித்திரமாக இப்பகுதிகள் அமைந்துள்ளன. காவியத்தின் முக்கிய பாத்திரமாகச் செயல் புரியும் பாமணி பெருங் கவிக்கோவின் பிம்பமாகவே காணப்படுகிறார். காவியத் தலைவர் சுவாமி இராமதாசரின் அருமை பெருமைகளை, அவருடைய அன்புச் செயல்களை, அருள் தொண்டுகளை இக்காவியம் நன்கு விவரிக்கிறது.

'ஓங்கு புகழ் தமிழர் நிலை உயரவேண்டும்
உலகத் தமிழ்ப் பண்பாட்டை இணைக்க
வேண்டும்
வீங்கு நலம் செய் பணிகள் நிலைக்க வேண்டும்
வேற்றுமையும் சீரழிவும் நீங்கவேண்டும்.'

என்பது சுவாமியின் நோக்கமாக விளங்குகிறது. கோலாலம்பூரிலும், சிங்கப்பூரிலும் அவர் நிகழ்த்திய சொற்பொழிவுகள் தமிழரின் பண்டை வரலாற்றை எடுத்துக் கூறுகின்றன.

கனிமொழி மணிமொழி என்ற இருவரின் காதல் கதை இக்காவியத்தின் பொற்சரடாக மிளிர்கிறது. மலேசியா செல்லும் கப்பலில் பாமணி இளைஞன் மணிமொழியை சந்திக்க நேர்கிறது. அவன் தனக்கு கனிமொழியிடம் ஏற்பட்ட காதலையும், அவள் அறுபத்து நான்கு கலை களையும் பயின்று தேர்ந்த பின்னரே அவனை மணம்புரிய விரும்புவதாக அவள் கூறியதையும் மணிமொழி கூறு கிறான். ஆய கலைகள் அனைத்தையும் அறிந்த சுவாமி இராமதாசரைக் கண்டு உதவி நாடப் போவதாகவும் சொல்கிறான். அவனுக்கு உதவி புரியப் பாமணி முன் வருகிறார்.

சுவாமியின் வழி காட்டலின் பேரில், சுவாமியிடம் கலைகள் பயின்று தேர்ந்த ஒருவரிடம் பயிற்சி பெற்றுத் தேர்ச்சி அடைகிறான் மணிமொழி. அறுபத்து நான்கு கலைகள் பற்றியும் கவிதையில் தெளிவு படுத்தியிருக்கிறார் பெருங்கவிக்கோ. அவற்றில் கவிஞரின் புலமையும் கவிதை ஆற்றலும் நன்கு ஒளி வீசுகின்றன.

எடுத்துக்காட்டாக சிலம்பம் பற்றிய விவரிப்பைக் கூறலாம்.

'இடமும் வலமும் மிகச் சென்றே
இங்கும் அங்கும் காலாடி
திடமாய் வலம் இடம் தானோடி
திசைகள் தன்னை அளந்தாடி
உடலம் பாய்ந்து உறழ்ச்சியினால்
உணர்ந்து கீழ்மேல் தூக்கிப் பின்
அடடே திறமை காட்டினனே
அலைபாய் கங்கை காவிரியாய்!'

அடுத்து வாட்கலை பற்றிய வர்ணனை இப்படி தீட்டப்பட்டுள்ளது—

'மண்டித் தெளிந்து சதிராடி
வலமும் இடமும் சரிசெய்து
மண்டித் திரிந்து சகடமிட்டு
வார்ப்பும் வடிப்பும் மிகக் காட்டித்
துண்டித் திடும் நல்லார்க் கலையை
துறைகள் சால மிகக் கற்று
நன்றாய் மணிமொழி வாள்வீச
நற்குரு அனைவரும் மகிழ்ந்தனரே.'

இவ்விதம் பல்வேறு கலைகள் குறித்தும் பெருங் கவிக்கோ ஆற்றலுடன் வர்ணித்துப் பாடியிருப்பது வியந்து பாராட்டப்பட வேண்டியதாகும்.

இந்தக் காவியத்திலும் இயற்கை அழகு பற்றிய வர்ணனைகளும், உவமைகளும் படிப்போர்க்கு மகிழ்ச்சி அளிக்கும் வண்ணம் நிறைந்து காணப்படுகின்றன.

'ஆண்சிங்கம் தான் அதிகாலையில்
அடர்ந்த பிடரிமயிர் குலுக்கி
மாண்புறு உடலம் சிலிர்க்க எழுந்து
வரு இரை தேடப் புறப்படல் போல்'

கதிரவன் கருக்கல் கரை கடந்தான் என்று காலைக்காட்சி அழகாக சுட்டப்பட்டுள்ளது.

'கற்றவரைச் சூழ்கின்ற வறுமைபோல
கருத்திருளும் சூழ்கின்ற வேளை'
'கரவிலார் இதயம் போல் ஒளிதிகழ்
நன்னகர் கோலாலம்பூர்'

இவ்விதம் சுவைத்து இன்புறத் தகுந்த நயமான உவமைகளுக்குக் குறைவில்லை.

பெருங்கவிக்கோவின் மூன்றாவது நெடுங்காவியமான 'இருண்ட மேகங்கள்' முற்றிலும் சமுதாயப் பார்வை

கொண்டதாகும். சாதி சமுதாயப் பார்வை கொண்டதாகும். சாதி வேற்றுமைகள் சமூகங்களை, ஊர்களை, நாட்டை நாசப்படுத்திக் கொண்டிருக்கும் நச்சுத்தனங்கள் ஆகும். சாதி அடிப்படையில் உயர்வு தாழ்வு பேசி, கலவரங்கள் வளர்த்து, மனிதத்தன்மை இழந்து வெறியர்களாகிக் கண்முடித்தனமாகக் கொலைகள் செய்து களிக்கிறார்கள் சாதிப்பற்று மிகுந்த கொடியவர்கள். இவர்கள் நல்லவர்களை வாழ விடுவதில்லை.

இவ் அவலங்களைக் கண்டு உளம் குமையும் கவிஞர், 'சாதிகளே இல்லாச் சமுதாயம், மதச் சண்டைகள் வாராச் சமுதாயம்' எங்கும் வருகின்ற நாளே நமக்கு விடிவுகள் உண்டாகும் நாளாகும் என்று வலியுறுத்துவதற்காக 'இருண்ட மேகங்கள்' காவியத்தைப் படைத்திருக்கிறார். அவர் பணி புரிந்து வந்த ஊர்களில் நிலவிய சாதி வெறியையும், அதனால் வளர்ந்த பிணக்குகளையும் பகை முற்றி ஒரு பேரூரில் வெடித்த கலவரம் அந்த வட்டாரத்திலும், தொடர்ந்து நாடு முழுதும் பரவிய கொடுமையையும் நேரில்கண்டறிந்தவர் பெருங்கவிக்கோ.

'இன்று தாழ்வு உயர்வு பார்க்கும் பேதமை முன்பை விடச் சற்றுக் குறைந்திருப்பினும், நீறு பூத்த நெருப்பாகவே இன்னும் உள்ளது. இந்த இழிவைப் போக்கிச் சமம் காணும் நெறி வளர்க்கும் உந்துதல் இளமை தொட்டே' அவருக்கு ஏற்பட்டிருந்தது அனுபவங்களையும் உணர்வுகளையும் அடிப்படையாக்கி அவர் 1986ல் 'இருண்ட மேகங்கள்' காவியத்தைப் படைத்தார்.

**'நிலையில்லா உலகத்தில் நிலைத்த தென்ன?**
**நெஞ்சங்கள் இணைகின்ற அன்பொன்றேதான்!**
**மலைபோன்ற உறுதிக்கு மூலம் என்ன?**
**மனதினிலே பதிகின்ற அன்பொன்றேதான்!**

அலை அலையாய்த் துன்பங்கள் வந்த போதும்
அதைத் தீர்க்கும் சக்தி அந்த அன்பால் ஆகும்!
விலை கூறி விற்காதீர் உள்ளம் தன்னை
விதி சமைப்பீர் அன் பொன்றே உம்மைக்
காக்கும்!'

என்று கவிஞர் இக்காவியத்தின் வாயிலாக அறிவுறுத்து கிறார்.

மதங்களினாலும் சாதித் திமிரினாலும் நாட்டில் பிரிவினைகளும் மோதல்களும் ஏற்படுகின்றன. இன்றைய அரசியலும் இணைந்து கொண்டு முறைகெட்ட போக்குகளை ஆதரிக்கிறது. அதனால் எங்கும் பாதகமே பெருகி வளர்கிறது. இந்த உண்மைகளை எளிய நடையில், இனிய சந்தங்களில் மக்களுக்குப் புரிய வைக்கிறார் கவிஞர்.

'அரசியல் மோசடிக்கும்
அவரவர் காசடிக்கும்
உரசிடும் தீக்குச்சாக
உளசாதி முறைகள் தம்மை
வரம் போலப் பயன்படுத்தி
வாகைகள் பெறுவதன்றி
சிரமேற்றே சாதிபேதத்
திமிரொழி திட்டமுண்டோ?'

நெஞ்சில் பழிவாங்கும் எண்ணத்தை வளர விட்டால் நாசம்தான் விளையும்; நன்மைகள் ஏதும் எவருக்கும் ஏற்பட்டு விடாது. அன்புடைமை ஒன்றால் புண்ணியம் வளர்த்தால் நன்மை பிறக்கும் என்று இக்காவியம் கூறுகிறது.

அரசியல் கட்சிகள் சாதிகளைப்பயன்படுதகி எவ்வாறு தங்களை வளர்த்துக் கொள்கின்றன; ஆட்சியைப் பற்றிக்

கொள்கிற கட்சி மன்றத்தில் பெரும்பான்மை கொண்டு விட்டால், மக்களாட்சி என்ற பெயரில் என்னென்ன கூத்துக்கள் பண்ணுகிறார்கள் என்பதை எல்லாம் காவிய வளர்ச்சியோடு கவிஞர் எடுத்துரைக்கின்றார்

'ஒற்றுமையாய் வாழுங்கள், தமிழினம் நாம்
உயர் நாட்டால் இந்தியர்கள் உணர்வால்
ஓங்கும்
பெற்ற திரு உலகத்தின் குடிமக்கள் நாம்.
பேரறங்கள் உயிர்மூச்சாய் கொண்டே வாழும்
சத்துவத்துக் கொள்கைகள் வெல்ல வேண்டும்!'

என்று பெருங்கவிக்கோ தம் விசால நோக்கை வெளிப்படுத்தியிருக்கிறார். இது போற்றப்பட வேண்டிய உயர் நோக்கம் ஆகும்.

# 15. புதுக் கவிதைகள்

பெருங்கவிக்கோ மரபுக் கவிதையில் சாதனைகள புரிந்தவர்; புரிவதில் ஆர்வம் உடையவர். ஆயினும், காலத்தின் தேவையாகக் கவிதைக் கலையில் தோன்றிய புதுக்கவிதை எனும் யாப்பில்லாக் கவிதையை அவர் வெறுத்து ஒதுக்கி விடவில்லை.

'காலம் வழங்கும் புதுமை வளர்ச்சி
கையால் மறைத்துப் பயனில்லை.
ஆலமரம் போல் படர்த்துள தமிழ்க்கவி
அணி நலப் புதுமை வேண்டுதும் யாம்
ஏலப் பொருளாய்த் தமிழை எண்ணி
இதயம் விரும்பு மாரெல்லாம்
ஓலம் இட்டே எழுதியே புதுக்கவி
உரிமை கொண்டாடுதல் பயனில்லை.

எதுகைக்கு வரினும் எதுகை மோனையாய்
எழுதும் மரபு வழி யுடையோர்
இது கைக்கு மென்றே புதுப் புதுப் பாதையில்
ஏகும் மரபுவழி உளமுடையார்,
எது வழி அதிலே எனக் கேட்கின் றீர்களும்!
எவ்வழி செம்மை வழியென்றால்

புதுமை பழமை இரண்டிலும் அழகுடை
புத்துணர் கருத்தைச் சொலல்லொன்றே!'

இப்படி ஒரு பேட்டியில் கவிஞர் அறிவித்துள்ளார். மேலும் அவர் கூறுகிறார்.

'வழிவழி மரபில் எழுதியவரும் தான்
வல்ல புதுமை நாடுகிறார்.
இழிநிலை இலக்கியம் படைக்கும் அறியார்
இது புதுக்கவிதை யென்றேத்துகிறார்.
ஒழிநிலை இதுவே! உணர்ந்தவர் உயர்ந்தவர்
உள்ளத் தூடுள சிந்தனைகள்
எழுநிலை மரபோ, புதுமையோ இரண்டிலும்
இருகண் ஒரு நோக்காயிருக்கும்!'

அழகுடைய புதுமைக் கருத்துக்களை எவ்வழியிலும் சொல்லலாம் என்ற எண்ணமுடைய பெருங்கவிக்கோ. ஒரு குறுங்காவியத்தில் மரபுவகைப் பாக்களுடன் புதுக் கவிதை முறையையும் இணைத்து எழுதியிருக்கிறார், அத்துடன் தனித்தனிப் பாடல்கள் பலவற்றை புதுக் கவிதைகளாகவும் அவர் பாடியுள்ளார். அவை 'எழுது கோலே! உனக்கு ஓர் எச்சரிக்கை!' என்ற பெயரில் ஒரு தொகுப்பாகப் பிரசுரம் பெற்றுள்ளன.

எழுதுகோல் பிடித்து எழுதும் தன்னையும், மேழி பிடித்து உழுத தன் தந்தையையும் ஒப்பிட்டு 'எழுது கோலே, உனக்கு எச்சரிக்கை!' என்ற கவிதையை அவர் இயற்றியிருக்கிறார்.

உழவுத் தொழில் புரிவோர்
'தலைமுறை தலைமுறையாக
ஓயஓயக் கொடுவயலில்
உழுதுகொண்டே இருக்கின்றனர்!

விளைத்த நெல்மணிகளை
கொழுத்தவர்கள் குடல் நிரம்பிடக்
கொடுத்துக் கொண்டே
உள்ளனர்.
ஆனால், இன்னும்
உழைத்தவர்கள்.
விடிவு பெறவில்லையே!
ஏன்?

உழவர்கள் உழுத ஏர்
உலகப் பயன் கண்டதே!
ஆனால் உழுதவர்கள் வாழ்வு
உரமற்றுப் போனதேன்?'

என்று சிந்தனை வளர்க்கிறார் கவிஞர். தான் எடுத்த எழுதுகோல் பயனற்றுப் போகக்கூடாது என எண்ணுகிறார். நொந்த வாழ்வை மாற்ற ஏலாத எழுதுகோலை நோக்கி அவர் எச்சரிக்கை விடுக்கிறார்.

'சதியை உடைக்கும்
சக்தி தா!
அல்லது,
சமநிலை ஆக்கும்
உத்தி தா!
இல்லையேல் உன்னைத்
தூக்கி யெறிந்து விடுவேன்!'

என்பது அவர் கூறும் எச்சரிக்கையாகும்.

'ஒரு உண்மைக்காக' என்ற கவிதை மாபெரும் உண்மை ஒன்றை உணர்த்துகிறது.

'பல நல்லவர்களின்
அழிவிலே தான்
ஒரு வல்லமை பிறக்கிறது!

பல நேர்மைகளின் நிழல்கள்
புதைக்கப் பட்ட பின்பு தான்
ஒரு சீர்மை பரிணமிக்கிறது!
பல தீமைகள் வென்ற
பிறகு தான்
ஒரு உண்மை பிறக்கிறது!'

'கை விளக்கும் கதிரவனாகட்டும்!' என்றொரு கவிதை. விளக்குகள் புனிதமானவைதான். ஆனால், தன் பெருமை அவைகளுக்குத் தெரியாது.

'ஏற்றுகிறவனுக்குத்
தானே தெரியும்—
ஏற்றப்பட்ட விளக்கொளியின்
நோக்கம்
இருளை ஒழித்தல் என்று!'

எனக் கூறும் கவிஞர், தன்னை ஒரு விளக்காக உருவகப் படுத்தியிருக்கிறார். அந்தக் கவிதையில், எல்லையில்லா இருள் நடுவில், உயர்ந்த குறிக்கோள் ஆகிய ஒளியை ஏந்திச் செல்லும் இந்த விளக்கை ஏற்றி வைத்தவன் இறைவன், செல்லும் திசையிலே வெற்றி நல்குவதற்கு, தேவையான எண்ணெய் ஊற்றி, ஆவித் திரியை எரிய விடும்படி இறைவனை அவர் வேண்டுகிறார்.

'உலகமெலாம் இந்த
உன்னத ஒளி பரவ
உயிர்த் தமிழ் சிறக்க வேண்டும்!

உயரிய பொதுமை
மலர! வேண்டும்!'

என அவர் விருப்பம் தெரிவிக்கிறார்.

சென்னையின் பொது மருத்துவமனை பற்றி ஒரு கவிதை. 'நோய்க்கிடங்கிலும்?' என்று பெயர். மருத்துவ மனையின் நிலையை நன்கு சித்திரிக்கிறது அது. முடிவில் ஒரு சிந்தனை.

'தரையிலே சிலர்
அழுக்கடைந்த
படுக்கையில் பலா.
குளிர் சாதன
ஒளிதரும் அறைகளிலே
ஒரு சிலர்!
ஆம், பிரிவினை!

மனித சமத்துவம்
காணாத இந்த
மாறு பாடு
நோய்க் கிடங்கிலும் கூட
நுழைந்துள்ள தேன்?'

சட்டம், சிலருக்கு மட்டுமே சத்துணவு என்று சுட்டிக் காட்டுகிறது ஒரு கவிதை. 'செயலைத் தேடும் தீபங்கள்' என்றொரு கவிதை. எத்தனையோ தீபங்களை எத்தனையோ ஞானிகள் ஏற்றி வைத்துள்ள போதிலும், மக்கள் வாழ்வில் கவிந்திருக்கிற இருள் அகலவேயில்லை. நாட்டில் மனிதருள் வேற்றுமைகளும், கொடூரங்களும் ஒழிய வில்லையே. ஆக்கத்திற்கு வந்த தீப ஒளிகள் அழிவிற்கே பயன்படுத்தப்படுகின்றன. இவற்றுக்கெல்லாம் காரணம் என்ன என்று சிந்திக்கத் தூண்டுகிறது அக்கவிதை.

உழைப்பாளித் தோழர்கள் பற்றி, அவர்கள் உழைப்பை உறிஞ்சிக் கொழுப்போர் பற்றி, எழுத்து வெடிகுண்டுகள் அதிகம் அதிகமாக உற்பத்தி செய்யப் பட்டு விட்டன. அப்படியும் நிலைமை மாறவில்லை. 'ஓ! எழுத்து வெடிகுண்டுகளே! வெடிக்கவில்லையே ஏன்?' என்று கேட்கிறது ஒரு கவிதை.

'வறுமையின் மீது
சினம் கொண்டோம்
சிறுமையின் மீது
ஆவேசப் பட்டோம்.
எரிமலை-பூகம்பம்-ஊழிக்காற்று
என்றெல்லாம்
எழுத்துத் துப்பாக்கிகளில்
அழுத்தமான சிந்தனைகளின்
தோட்டாக்களை நிரப்பி
எட்டுத் திசையும் சுட்டோம்!

அந்தத்தோட்டாக்கள் இன்றுவரை வெடிக்காமலேயே வீணாகிப் போயின. அதனால் எந்த நீதியும் எழவில்லை ஆகவே அவை—

'சமையலுக்குத வாத நெருப்புகள்
தண்ணீர் வராத
வறண்ட நீரூற்றுகள்
ஊமையின் வாய் உளறல்கள்
ஒரு செயலையும் தூண்டாத
உருப்படாத எங்கள்
எழுத்துப் பம்மாத்துக்கள்!'

என்று விமர்சன ரீதியில் பேசுகிறது கவிதை.

'ஒரு புல்லாங்குழலின் ஏக்கம்' என்ற கவிதை, புலலாங்குழல் வீணை பாடல் ஆகியவை அவற்றைப் பயன் படுத்தத் தெரிந்த திறமைசாலிகளிடம் சேர்ந்திருந்தால் நல்ல பலன் விளைந்திருக்குமே என்று எண்ணி ஏங்குவ தாக உருவகப்படுத்தப்பட்டுள்ளது.

'மீட்டத் தெரியாதவனிடத்தில்
கிடைத்த வீணை'
காற்றை
ஊட்டத் தெரியாதவனிடத்தில்
கிடைத்த குழல்,
இராகம் அமைக்கத்
தெரியாதவனிடத்தில்
கிடைத்த பாடல்
பாழாகிப் போனது
யார் குற்றம்?'

என்று எண்ணிப் பார்க்கச் சொல்கிறது.

உச்சி வெயில் நேரத்தில், தொந்தி சரிந்த பெரியவர் உட்கார்ந்திருக்க ரிக்சாவை சிரமத்தோடு இழுக்கும் உழைப்பாளி; வண்டி வண்டியாய் பழங்கள் இருந்தும், ஒரு பழத்தை எடுத்துத் தின்று தன் பசி தாகம் அடக்கக் கூசுகிற விற்பனையாளன்; பூவிற்கும் போதும் தன் தலையைக் காடாக விட்டிருக்கும் பூக்காரி, பொன் செய்யும் தட்டான் மனைவி காதில் பித்தளை— எத்தனை வகை! என்ன உலகம் என்று படம் பிடிக்கிறது- 'உலகம் ஒரு கனவு' எனும் கவிதை.

'மாறும் காலம்
என்று வரும்? எங்கே? எங்கே?
சிந்தனை ஓட்டம்!
தெளிவே இல்லை!'

என்று முடிக்கிறார் கவிஞர். 'உலகம் ஒரு கனவு—ஐயா! உலகம் ஒரு கனவு!' என்று கொடிய வேதாந்தப் பாடலை பாடுகிறான் ஒரு பிச்சைக்காரன்.

இவ்விதம் சமூக யதார்த்தங்களையும், வாழ்க்கை உண்மைகளையும் சுட்டிக்காட்டி, புதுமைச் சிந்தனை களை வளர்க்கும் விதத்தில் புதுக்கவிதைகள் எழுதியிருக் கிறார் பெருங்கவிக்கோ.

# 16. மொழி பெயர்ப்புக் கவிதைகள்

தமிழில் சிறப்பாகக் கவிதை படைக்கும் ஆற்றல் பெற்ற கவிஞர்கள் பிறமொழிக் கவிதைகளை விரும்பித் தமிழில் மொழி பெயர்ப்பெயர்ப்பது உண்டு. மகாகவி பாரதியார், ச.து.சு. யோகியார், தேசிகவிநாயகம்பிள்ளை முதலியவர்கள் தங்கள் மொழி பெயர்ப்புத் திறமையால் பற்பல கவிதைகளைத் தமிழாக்கி, தாய் மொழிக்கு வளம் சேர்த்திருக்கிறார்கள்.

பெருங்கவிக்கோ சேதுராமனும் அம்மரபைப் பின் பற்றி வெற்றி கண்டிருக்கிறார். மகாத்மா காந்தி பேரில் இந்தியாவின் பன்மொழிகளிலும் பாடப்பட்ட கவிதை களை அவர் மொழிபெயர்த்து 'வாழ்க நீ எம்மான்!' என்ற தொகுப்பாக வெளியிட்டுள்ளார்.

இந்திய நாட்டுக்கு விடுதலை பெற்றுத் தந்த காந்திஜி யின் நூற்றாண்டு விழாவில் அவருக்குத் தமிழர்கள் சார்பில் பெருங்கவிக்கோ செலுத்திய உயர்ந்த அஞ்சலி இக்கவிதைத் தொகுப்பு.

இத்தொகுப்பில் தமிழ்க் கவிதைகளுடன் மலையாளம் இந்தி, தெலுங்கு, உருது, குசராத்தி, வங்கம், ஒரியா, சிந்தி, வடமொழி, மராட்டி, அசாம் கன்னடம், ஆங்கிலம் காஷ்மீரம் ஆகிய மொழிகளின் சிறந்த கவிஞர்கள் மகாத்மா பற்றிப் பாடிய நற்கவிதைகளின் மொழி பெயர்ப்புகளும் தரப்பட்டுள்ளன.

மலையாளம் மகாகவி சங்கர குருப்பு, மகாகவி வள்ளத்தோள், இந்தி சிவமங்கலசுமன், சுமத்திரானந்தன் பந்து, தெலுங்கு தாசரதி, சந்தியாலா பாப்பய்யா சாஸ்திரி, உருது மசால் லக்னவீ, சீமாப் அக்பராபதி, குசராத்தி சியோத்சனா சுக்லா, அர்தேஸ் பராம்ஜி கபர்தார், வங்கம் இரவீந்திரநாத் தாகூர், நிர்மலசந்திர சட்டோபாத்தியாயா, ஒரியா இலட்சுமிகாந்த மகா பாத்திரர், குருசரண் பரிசா, சிந்தி கிருஷ்ண கிருபலானி, கிசன்சந்த் தீர்த்ததாஸ் கத்ரி,வடமொழி பண்டித கோபால சாஸ்திரி, விந்தியேசுவரி பிரசாது சாஸ்திரி, மராட்டி நாராயண கேசவ பேஹரே, மாச்வே, அசாம் அதுல் சந்திர ஹாஜரிகா, திருபால் போக் பரூவா, கன்னடம் இசுவாஸணகல், கோவிந்த பாயி, ஆங்கிலம் மேரிசி கிரிஸ்து, பெஞ்சமின் காலின்ஸ் உட்பரி,காஷ்மீர் சம்புநாத பட் ‘அலீம்’, பஞ்சாபி டாக்டர் பாயிவீரசிங், ஆகியோரின் கவிதைகளை கவிஞர். சேதுராமன் மொழி பெயர்த்திருக்கிறார்.ஒரு மொழியின் படைப்பை மற்றொரு மொழிக்குச் சுவையாகப் பெயர்த்துத் தருவது சிரமமான காரியம். அதிலும் கவிதையை மொழிபெயர்ப்பது மிகவும் சிரமமானது. மூல எழுத்தாளரின் உள்ளத்தை உணர்ந்து, அவரது படைப்பின் பொருளை நன்கு அறிந்து கொண்டு, மொழிபெயர்ப்பு என்று தெரியாத தன்மையில் இன்னொரு மொழியில் ஆக்குவதுதான் வெற்றிகரமாகவும் படிப்பதற்குச் சுவையும் இனிமையும் கொண்டதாகவும் அமையும்.

பெருங்கவிக்கோ ரசித்துப் பாராட்டத் தகுந்த முறையில் கவிதைகளை சரளமாகவும் இனிமையாகவும் உணர்ச்சி ஓட்டத்துடனும் தமிழாக்கியிருக்கிறார். மொழி பெயர்ப்பு என்று தோன்றாத தன்மையில் நல்ல தமிழ்ப் பாடல்களாகவே அவை விளங்குகின்றன.

எடுத்துக்காட்டாக ஒன்றிரண்டைக் குறிப்பிடலாம் இங்கே—

வள்ளத்தோளின் மலையாள மூலத்திலிருந்து தமிழாக்கப்பட்டது இது :

'உலகெலாம் அவன் றன் வீடு
ஊர்ந்திடும் புழுப்புல் பூண்டு
நிலமிசைச் செடிகள் கூட
நிலைபெறும் அவன் குடும்பம்!
நலந்தரு தியாகம் ஒன்றே
நனிவரும் படியாம் செல்வம்
பலந்தரு பணிவு யர்வால்
பாரிலென் குருவும் வென்றான்!'

'அன்பினால் உலகை வெல்லும்
அருமைசால் வீரனுக்கே
இன்பவோங் காரம் வில்லாம்
ஈடில்லா ஆன்மா அம்பாம்!
தன்குறி இடமே பிரம்மம்
தகைமை சால் ஓங்காரத்தை
நன்மையாய் மிக நயந்து
நனிநுண்மை உட்கொண்டானே'.

சுமித்ரானந்தன் பந்துவின் இந்திக் கவிதையிலிருந்து தமிழாக்கப்பட்டிருப்பதில் ஒன்று—

'உலகத்தார் எல்லோரும் இன்பப் போக
உடைமையினைத் தேடத்தான் வருகின்றார்கள்
நிலமிங்கே நீ மட்டும் உண்மை தன்னை
நேர்முறையில் தேடிடவே வந்தாய்! வையத்
தலமுற்றோர் எல்லாம் மண் பொம்மையே தாம்!
தகு நீ தான் ஆன்மாவின் அழகனாவாய்!
நலமில்லா உயிரின்மை கொடுமை போட்டி
நலிவுதரும் கொடுமைகளை அகற்றி அங்கே

உயிர்த்துடிப்பைப் பொறுமையினை மேலும் நல்ல
உளப்பணிவை ஒளியையெலாம் முறையாய் எங்கும்
உயர்வுபெற நீ நிரப்பி விலங்குத் தன்மை
ஓங்குவெறிச் சக்தியினை மனிதத் தன்மை
நயமேவும் தாமரையாய் மாற்றி விட்டாய்!
நனி ஆளப் படுகின்ற மக்களுக்கே
அயராதே ஒத்துழைப்பைக் கற்பித்தாயே
ஆட்சியுடைக் கொடும்பளுவை அகற்றிட்டாயே!

'வாழ்க நீ எம்மான்!' எனும் பன்மொழிக் கவிதைகளின் தொகுப்பு மகாத்மா காந்திஜீக்கு சூட்டப்பெற்ற அருமையான கவிதாஞ்சலி என்பதை அதைப் படிப்பவர்கள் உணர்வார்கள்.

புகழ்பெற்ற ருசியக் கவிஞரான தராசு செவ்சென்கோ கவிதைகளையும் பெருங்கவிக்கோ தமிழாக்கியிருக்கிறார். செவ்சென்கோவின் 'இறுதி உயில்' என்ற கவிதையின் சில வரிகள் எடுத்துக்காட்டாக இங்கே தரப்படுகின்றன.

'இன்பத்தின் இருப்பிடம் என்
இனிய உக்கிரேன்—தாய் மண்ணில்

தன்பக்கம் உச்சியிலே
சமாதி எனக்கமையுங்கள்!

என்புதை அக்குழிமேடு
இயற்கைவயல் சூழ்ந்த நீப்பர்

நன்பக்கம் வெளியெல்லாம்
நயனங்கள் காணட்டும்!

நீப்பராற்றின் சலசலப்பின்
முழக்கம் செவி கேட்கட்டும்!

மீப்புனல் தான் கடல்தேடி
மிகை ஓடி இணைபோதில்

தீப்பகைவர் குருதியுடன்
செழித்த வயல் குன்றமெலாம்

பாப்பாடி பயன் விடுத்தே
பறந்திடுவேன் வான்வெளியில்!'

உருசியக் கவிஞர் செவ்சென்கோவின் கவிதைகளை ஆங்கில மொழிபெயர்ப்பில் புரிந்து உணர்ந்துகொண்டு பெருங்கவிக்கோ இனிய தமிழ்ப் பாடல்களாகத் தமிழில் தந்திருக்கிறார். அவரது ஆற்றல் பாராட்டப்பட வேண்டியதாகும். அவருடைய மொழி பெயர்ப்பில் அவை இனிய தமிழ்ப்பாடல்களாக மலர்ந்துள்ளன. பின்வருபவை நல்ல உதாரணமாகும்—

'கடலாடி அசைந்தங்கே
கண்தெரியும் நாவாய்போல
கவின்பொழுது புலரும்முன்
ஒலிகள் தாம்

உடனுறைய இடம்தேடும்
சுருதிகளை இழந்திடுமே!
உணர்சேவல் கூவவில்லை
வன மருகில்.

இடம்தேடும் ஆற்றோரம்
இருந்து வாழ பழுப்புநிற
இவ்வார்த்தைகளோ மெல்லமெல்ல
அலறுமம்மா!'

# 17. பயண அனுபவங்கள்

தமிழ்-தமிழர்-தமிழ் இனம் என்ற உணர்வோடு இவற்றுக்கு உரிமையும் பெருமையும் சேர்க்கும் இலட்சிய வெறியோடு தமிழகம் எங்கும் பணியாற்றி வரும் பெருங் கவிக்கோ, தமிழர் வசிக்கும் உலகநாடுகளிலும் தமிழ் முழக்கம் செய்யும் தொண்டைத் தொடர்ந்து ஆற்றிக் கொண்டிருக்கிறார். 1981-ஆம் ஆண்டிலிருந்து, உலகத் தின் பல நாடுகளிலும் நடைபெறுகின்ற உலகக் கவிஞர் மாநாட்டிற்கு அவர் தொடர்ந்து சென்று வருகிறார். அங்கெல்லாம் நிகழ்கின்ற கவியரங்கம், கருத்தரங்கங்களில் கலந்து கொண்டு, கவிதைகள் கட்டுரைகள் மூலம் தனது கருத்துக்களைத் துணிச்சலோடு முழங்குகின்றார். பின்னர், தனது பயண அனுபவங்களை நூல்களாக வெளியிட்டு தமிழ் வாசகர்கள் பயனடைய உதவுகின்றார்.

இவ்வகையில், பாங்காக் பயணநூல், கெய்ரோவில் பெருங்கவிக்கோ, துருக்கியில் பெருங்கவிக்கோ, இசுரேலில் பெருங்கவிக்கோ ஆகிய நூல்கள் வெளிவந்துள்ளன.

இப்படித் தனது பயண அனுபவங்களை பெரிய நூல் களாக உரைநடையில் எழுதிப் பிரசுரிப்பதற்கு முன்னர், அவர் பன்னாட்டுப் பயணங்களில் தான் பெற்ற இன்பங் களை தனித்தனிக் கவிதைகளாக எழுதி, அவற்றை 'அழகின் வெள்ளம்' எனும் தொகுப்பாகத் தந்துள்ளார்

மலை நாட்டின் செந்தேன் கூடு— ரிஞ்சிங் தோட்டம், தேம்சு எனும் தேனாறு, இயற்கை விந்தை நயகரா

மாட்சி மலர் கண்டிமா நகரம், தாரணியின் சண்பகமலர் சான்பிரான்சிஸ்கோ, பிச்சாவரம் பச்சைக்காடு, இலங்கை பயணத்தின் போது, 'கடல் மேல் மிதந்த கருத்து நாவாய் கள்' எனும் தலைப்புகளில் எழுதப்பட்ட அழகுக் கவிதை கள் 'அழகின் வெள்ளம்' தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

இயற்கைச் சூழ்நிலைகளின் இனிய சித்திரங்களாகக் கவிதைகள் மிளிர்கின்றன. அங்கு குழுமுகின்ற மக்கள் பண்பு ஆண்கள் பெண்களின் இயல்புகள் செயல்கள், கவிஞரின் உணர்வுகள் பற்றியெல்லாம் இக்கவிதைகள் எழிலுறப் பாடுகின்றன. இயல்பான சொல் ஓட்டம், ஓசை நயம், கற்பனை அழகு, வர்ணிப்புத்திறன் உவமை எழில் ஆகியவை பெருங்கவிக்கோவின் கவிதைப் படைப்பு களுக்குத் தனிச்சிறப்புத் தருகின்றன.

மலை நாட்டில் பயணம் செய்த அனுபவம் பற்றி ஒரு கவிதை—

'கருநீலப் பட்டா டையைக்
　　கட்டிய இயற்கைத் தாயாள்
தருகோல ஆடை மின்னும்
　　சரிகையின் ஒளியைப் போன்றும்
திருகோல விண்மீன் போன்றும்
　　திகழ்முத்துச் சுடரைப் போன்றும்
வருகோல ஒளிகள் மின்னும்
　　வழி ஓடும் எங்கள் உந்து.

சுற்றிலும் மரங்கள் கூட்டம்
　　தொகை தொகையாக ஓங்கும்!
முற்றிலும் ரப்பர் தோட்டம்
　　முன் பின்னும் பால் மரங்கள்!
அற்றவர் செல்வம் தேட
　　ஆர்வங்கள் கொள்வதைப் போல்

பெற்றசீர் அடைதல் போல்நல்
 பெருமை போல் சூழும் காட்சி!?

இவ்வாறே காடுகள், ஆறு, அருவி முதலியவற்றை அழகுமிகு கவிதைகளில் பெருங்கவிக்கோ வியந்து வர்ணித்திருக்கிறார். அவை பன்முறை படித்துச் சுவைக்கப்பட வேண்டியவை. முக்கியமாக, நயகராவினும் இயற்கை விந்தையை ரசித்து அவர் பாடியிருக்கும் கவிதைகள்.

'விளிம்பினி லிருந்தே இன்ப
 வெண்ணுரை தொடர்ந்து வீழும்
முளிபனிக் கட்டி யாமோ?
 முதிர்தொங்கல் ஒளிக்கற்றையோ?
களிபெரும் இன்ப ஆட்சிக்
 கதவுகள் திறந்ததோ?எப்
பளிங்கு மண்டப மிடிந்தே
 பாறையாய் தொடர்ந்து வீழும்!'

என்று நயகரா அருவியைக் கவிஞர் வியக்கிறார். இவ்விதம் விந்தைக் காட்சிகள் தந்த வியப்புகள் இனிய பாக்களாக மலர்ந்துள்ளன. அவற்றுள் பலவற்றை எடுத்துச் சொல்ல வேண்டும் என்ற ஆசை எழுகிறது. இடம் தான் இல்லை. இரண்டு கவிதைகளை மட்டும் எழுதி நிறுத்திக் கொள்கிறேன்.

## பொங்கிச் சிதறும் சாரல் பூ

எங்கணும் வெண்புகைகள்
 எங்கணும் மழைநீர்ச்சாரல்
பொங்கியே சிதறு மாபோல்
 பொலிமுகப் பார்வை யாளர்
அங்கங்கள் தெரிக்கும் ஈதை
 அவர்மழைக் கோட்டுத் தாங்கும்!
மங்கைகள் ஆடவர்கள்
 மருளுவர் கண்ணால் பார்க்க

## வண்ண எழில்

வண்ணங்கள் மாறும்; மேலும்
வர்ணசாலங்கள் தோறும்
எண்ணங்கள் மீறும்; எங்கும்
இனிமையின் இனிமை பூக்கும்;
பண்ணிசை அருவி வெல்லும்
பாய்ந்திடும் நயகராவின்
தண்மதி கணக்கில்லாமல்
தாகத்தைத் தீர்க்கு மம்மா!'

'வெண்ணிலா கோடி சேர்ந்தே, நயத்தரும் ஒளி வெள்ளத்தை நாளெலாம் தெளித்ததைப் போல், வயப் படும் இயற்கை தந்த வனப்பினை' பெருங்கவிக்கோ பாடியுள்ள திறத்தை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

கவிஞர் உரைநடையில் எழுதியுள்ள பயண நூல்களிலும் வகைவகையான கவிதைகளை இணைத்திருக்கிறார் இயற்கைக் காட்சிகளின் வர்ணனைகள், இலட்சிய முழக்கங்கள், உலக ஒற்றுமையை வலியுறுத்தும் பாடல்கள் அவற்றில் உண்டு.

மாநாட்டில் மலர்ந்த கவிதை ஒன்று குறிப்பிடத் தகுந்தது. நீண்ட கவிதையின் சில பகுதிகள் மட்டுமே இங்கு தரப்படுகின்றன.

யாதும் ஊரே யாவரும் கேளிர்
ஓதும் முன்னோன் தமிழன் இந்தியன்
யாதிலும் ஆசை மாசை அகற்றென
தேசம் புகன்றவன் புத்தனடா! இந்தியச்
சிற்பி அவனே சித்தனடா!

இனத்தால் மொழியால் ஏற்றத் தாழ்வால்
இணையில் வையம் அழிவதோ-ஓங்கும்

தனத்தால் ஏழ்மைச் சரிவால் ஒற்றுமைத்
தடைகள் கோடி எழுவதோ? தரணி
தாழ்ந்து உழன்று அழுவதோ!

காற்றும் ஒன்று கதிர்வான் ஒன்று
கடலும் புனலும் ஒன்றுதான்—பூமி
தோற்றம் ஒன்றே ஏற்ற இறையாம்
ஆற்றலதுவும் ஒன்றுதான்—ஒருமை
மாற்றம் இயற்கை உண்டோ காண்!

பிரிந்தோ சேர்ந்தோ அன்பின் வழியில்
உரிமை உலகு ஒன்றென்போம்—குருதி
பெரிதும் சிந்தி உயிர்கள் கொல்லும்
பிழைசெய் ஒற்றுமை தீதென்போம்! அன்பின்
வழியே ஒருமைப் பாடென்போம்!

எந்த நாட்டில் எந்த வளமான சூழ்நிலையில் இருந்தாலும், பெருங்கவிக்கோவின் அன்பு உள்ளம்—கருணை உள்ளம்— வாழ்க்கை முரண்பாடுகளை, மனிதகுல அவலங்களை எண்ணி வேதனைப்படுவது இயல்பாக இருக்கிறது. இதை உணர்த்தும் குறிப்புகள் அவருடைய பயண நூல்களில் காணக்கிடக்கின்றன. அவற்றில் ஒன்றை இங்கே குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும்.

'ஒரு பெரும் விருந்து நடைபெற்றது. காணவே கண்கள் போதாது. உண்ண வயிறும் இடம் தராது. முன்பு கிரேக்க நாட்டின் தலைநகர் ஏதென்சு அருகில் உள்ள கோர்பு தீவில் நடந்த உலகக் கவிஞர் மாநாடு சென்றிருந்த பொழுது கண்ட உணவு பழ வகைகளை விட அதிக அளவில் விருந்துணவு வகைகள், பழவகைகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. எகிப்து ஒரு தன்னிறை வற்ற வறுமை நாடுதான், இருப்பினும் இங்கே கொடுத்த விருந்து உணவுகள் கொடி கட்டிப் பறந்தன!

'ஒவ்வொரு நாட்டிலும் பணக்காரர்களும் அரசும் எப்படியெல்லாம் படாடோபமாக ஆட்டம் போடுகின்றனர்! ஏழை எளிய மக்கள் உண்ணவும் உடுத்தவும் வசதியின்றி வாடித் தவிக்கிறார்கள். எத்தனை கொடுமையான முறையில் உண்பொருள்கள் இங்கே கொட்டிக் கிடக்கின்றன! இதை எண்ணி இதயம் வருந்தினேன்'

(கெய்ரோவில் பெருங்கவிக்கோ நூலில்)

# 18. முடிவுரை

'பதினேழாம் நூற்றாண்டில் குமர குருபரரும், சிவப் பிரகாச சுவாமிகளும், பதினெட்டாம் நூற்றாண்டில் சிவஞான முனிவரும் தாயுமான அடிகளும், பத்தொன்ப நூற்றாண்டில் இராமலிங்க அடிகளும் மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையும் இறையுணர்வு கலந்த பாக்களைப் பெருமளவில் பாடியாற்றிய பணியை இந்த நூற்றாண்டில் பெருங்கவிக்கோ சேதுராமன் செய்து வருகிறார்.' இவ்வாறு அறிஞர் சிலம்பொலி சு. செல்லப்பன் எழுதியிருக்கிறார்.

இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப கட்டத்தில் தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிக்குப் பெரும்பணி ஆற்றிய மகாகவி சுப்பிரமணிய பாரதியாரும் கடவுள் பக்தியும் ஆன்மீக உணர்வும் நிறைந்த பாடல்களை மிகுதியாகப் பாடியுள்ளார். அத்துடன் தாய்மொழிப் பற்று, தேசபக்தி, சமூக சீர்திருத்த ஆர்வம், தனி மனித மேம்பாடு, புதுமைச் சிந்தனைகள் கொண்ட கவிதைகளையும் பாரதியார் அதிகம் இயற்றியிருக்கிறார்.

பாரதி வழியில் வந்த முதல தலைமுறைக் கவிஞர் களான பாரதிதாசன். ச. து. சு. யோகியார், நாமக்கல் இராமலிங்கம்பிள்ளை. தேசிக விநாயகம் பிள்ளை' சுத்தானந்த பாரதியார் ஆகியோரும் இறை உணர்வு, மொழிப்பற்று, நாட்டுப் பற்று. சமூக சீர்திருத்தம் முதலிய

குறிக்கோள்களுடனேயே இனிய பாடல்களைப் பாடி யுள்ளனர்.

அவ்வழியிலேயே கவிஞர் வா. மு. சேதுராமனும் அதிக அளவில் கவிதைகள் பாடி, பெருங்கவிக்கோ எனும் சிறபபுப் பெயர் பெற்றுள்ளார்.பாரதியைவிட மிகுதியான தமிழ்—தமிழர்—தமிழ் இனப்பற்று சேதுராமன் கவிதை களில் உயிர் நாதமாக ஒலிக்கிறது. பாரதி போலவே நாட்டுப் பற்றை பரந்த அளவில் இந்திய உணர்வாகவும், அதற்கு மேலும் விரிந்த உலகம் தழுவும் மானிட நேய மாகவும் கொண்டு பெருங்கவிக்கோ கவிதைகள் படைத் திருக்கிறார்.

பாரதிதாசன்கூட ஆரம்பகட்டத்தில் இறை உணர்வுப் பாடல்களை அதிகம் எழுதியுள்ளது நினைவு கூரப்பட வேண்டியது ஆகும். அதன் பின்னரே அவர் பகுத்தறிவுச் சிந்தனையும், தமிழ் இன உணர்வும் தமிழ்ப்பற்றும் செறிந்த கவிதைகளை உணர்ச்சி வேகத்தோடு பாடினார். பாரதிதாசனின் உணர்ச்சி வேகமும் உயிர்த்துடிப்பும் சேதுராமன் கவிதைகளிலும் பெருக்கெடுத்து ஓடுவதைக் காண முடிகிறது.

பாரதியார் பொதுவுடைமைச் சிந்தனையை வர வேற்றார். பாரதிதாசன் ஒரு காலக் கட்டத்தில் பொது உடைமைத் தத்துவத்தை வரவேற்றுப் பாடினார். சேதுராமனோ பொதுவுடைமையே மக்கள் குல நல்வாழ் வுக்கும், உழைப்பாளர் வளத்துக்கும், உலக மீட்சிக்கும் ஏற்ற மார்க்கம் ஆகும் என்று தம் கவிதைகளில் வலியுறுத்தி யிருக்கிறார்.

பாரதியாரிடம் தெய்வபக்தி மிகுந்திருந்தது. புத்துலகப் பகுத்தறிவுச் சிந்தனைகளை அவர் வளர்க்க வில்லை. பாரதிதாசன் பகுத்தறிவுச் சிந்தனைகளையே அழுத்தமாகவும் வேகமாகவும் கவிதைகளில் பதிவு செய் தார், இவ்விருவர் தடங்களையும் அடியொற்றி நடக்க

முற்பட்ட பெருங்கவிக்கோ இறைபக்தியைப் போற்றும் அளவுக்குப் பகுத்தறிவுக் கருத்துக்களையும் புதுமைச் சிந்தனைகளையும் உணர்ச்சியோடு பாடியிருப்பது குறிப் பிடத்தகுந்தது.

முந்தைய இரு பெரும் கவிகளைப் போலவே சேது ராமனும் கவிதையின் பல வடிவங்களிலும், பல சந்தங் களிலும் பாடல்கள் இயற்றி வெற்றி கண்டிருக்கிறார். ஓசை நயம் தூக்கி நிற்கும் பரணி, இனிய இசை ஒலி கலந்த காவடிச் சிந்து, வெண்பா முதலிய வெவ்வேறு வடிவங்களிலும் பெருங்கவிக்கோ தம் ஆற்றலைப் புலப் படுத்தியிருக்கிறார். இசைப் பாடல்களும் பாடியிருக் கிறார்.

மரபுக் கவிதை முறையில் தனிப்பாடல்கள், நீண்ட கவிதைகள், குறுங்காவியங்கள், கவிதை நாடகங்கள், காவியங்கள், பயணக்கவிதைகள் என்று பல சாதனை களைப் புரிந்திருக்கிறார் பெருங்கவிக்கோ. இன்னும் எழுதிக் கொண்டிருக்கிறார்.

'இறையருள், குருவருள், குறிக்கோளின் மீது பற்று, தமிழை—தமிழினப் பெருமையை உலக அரங்குகளில் உயர்த்திக் காட்டாமல் ஓய்வதில்லை என்ற ஆவேச உணர்ச்சிகள் உந்துகிற வேகமும் தாகமும்' மீதுறப்பெற்று உலக நாடுகளில் சுற்றித் திரிந்து, பன்னாட்டுத் தமிழர் களையும் சந்தித்து ஒற்றுமை உணர்வை வளர்க்கப் பாடு படுகிறார் கவிஞர். பன்னாட்டுத் தமிழுறவு மன்றம் அமைத்து, மாநாடுகள் நடத்தி, தளராது தமிழ்ப் பணி புரிகின்றார்.

'கவிதைத் துறையில் சாதனை படைக்க வேண்டும் என்ற உத்வேகத்தோடு எண்ணற்ற செயல்கள் செய்திருப் பினும், கவிதைக் கலங்கரை விளக்கமான பணிகள் ஆற்றி யிருப்பினும், தமிழ் நாட்டார் போதுமான அளவு அறிய வில்லை, ஆதரவு தரவில்லை. இதழாளர்கள் இம்மி

யளவும் நம் பணிகளை அறியவோ, உரிய மதிப்பளிக்கவோ முன் வருவதில்லை' என்ற மனக்குறை கவிஞருக்கு இருக்கிறது, ஆயினும்,

'பற்றில்லா உள்ளமும், இடையூறுகளை எல்லாம்
இடறி முன்னேறும் வேகமும் தாகமும்,
துறவு மனப்பண்பும் தன்னல மறுப்பும்'

கொண்டிருப்பதால், கவிஞர் விரக்தியும் சோர்வும் அடையாது தொடர்ந்து கவிதைப் படைப்பிலும் தமிழ்ப் பணியிலும் ஈடுபட்டு முன்னேறிக் கொண்டிருக்கிறார். அவருடைய உழைப்பாற்றலும் செயலூக்கமும் தன்னம்பிக்கையும் போற்றுதலுக்குரியனவாகும்.

தமிழில் மரபுக்கவிதை செத்து விட்டது என்று குரல் கொடுக்கிறவர்கள் இருக்கிறார்கள். பாரதிக்குப் பிறகு தமிழ்க்கவிதை வளரவேயில்லை என்று சொல்கிறவர்களும் இருக்கிறார்கள். இரண்டுமே தவறான கணிப்புகள்தான் அப்படிச் சொல்கிறவர்கள் உண்மையைக் காணத் தவறியவர்கள் காண மறுக்கிறவர்களுமாவர்.

மரபுக் கவிதை செத்து விடவில்லை; பாரதிக்குப் பிறகு தேங்கிக் கிடக்கவுமில்லை. விழிப்புடன் கவிதை உலகை, கவிதை பாடிய— பாடுகிற— திறமைசாலிகளை கவனித்தால் அவர்களே இந்த உண்மையை உணர முடியும். உணர்ச்சியும் உயிர்ப்பும், இயல்பான சொல் ஓட்டமும் கற்பனை வளமும், அழகும் ஆழமும் நிறைந்த கவிதைகள் படைத்த கவிஞர்கள் ஒவ்வொரு தலைமுறையிலும் தோன்றி, தங்கள் திறமையைக் காட்டும் விதத்தில் இனிய கவிதைகள் படைத்திருக்கிறார்கள். இப்பவும் மரபுக் கவிதையின் சிறப்பைப் புலப்படுத்தும் விதத்தில் நல்ல கவிதைகள் எழுதும் இளைய படைப்பாளிகள் எழுதிக் கொண்டுதான் இருக்கிறார்கள். திறமையைச்

கண்டுணர்ந்து வரவேற்கும் மனமும், நல்லதைப் பாராட்டும் உள்ளமும் உடையோருக்குத்தான் பஞ்சம் இந்த நாட்டிலே

அறுபதாம் ஆண்டை நிறைவு செய்யும் பெருங் கவிக்கோ சேதுராமன் அறுபத்து ஒன்றுக்கும் அதிகமான புத்தகங்கள் எழுதி வெளியிட்டிருக்கிறார். இந்த ஆண்டும் ஒரு காவியம் வெளியிட இருக்கிறார். இது ஒரு பெரும் சாதனை என்பதில் சந்தேகமில்லை.

தமது பணிகளும் படைப்புகளும் போதிய அளவு கவனிப்பைப் பெறவில்லையே என்று அவர் உளம் வருந்த வேண்டியதில்லை. இந்தநாட்டின் சூழலும் நாட்டினரின் மனப் பண்பும் அப்படித்தான் இருக்கின்றன. எனினும், உள்ளம் தேறிச் செய்வினையில் ஊக்கம் பெருக உழைத்து கொண்டிருப்பவர்களை என்றுமே காலம் வஞ்சித்து விடுவதில்லை. அவர்களது உழைப்பை, ஆற்றலை, அவற்றின் விளைவுகளை காலம் நிச்சயம் கவனிக்கும்.

வாழ்க பெருங்கவிக்கோ. அவரது படைப்புகளும் பணிகளும் வெல்க!

□ □ □


அன்ன பந்தம்
செந்தில்வாழ் நாதன்தாள் சீர்கருணைச் சீர்தந்த
சிந்துதமிழ் மேலவர்தம் செம்மையுறும் - சந்தமிகு
நல்லவிழா சேதுராமர் நல்லவிதப் பொற்புவிழா
செல்வவிழா என்றும்நீ செப்பு.
வி. இக்குவணம்
சிங்கப்பூர்